# கல்கி

பிலவ, தை 8 — ஜனவரி 21, 1962


## பொருளடக்கம்









க்யூபா தீவினர் புகையிலையை வாசனைச் சரக்காக உபயோகித்ததாக, 1492-ல் கொலம்பஸின் மாலுமிப் படையினர் கண்டறிந்தனராம். பொடி போடும் வழக்கம் பூர்வீகக் குடிகளிடம் இருந்ததைத் தமது இரண்டாவது கடற் பயணத்தின்போது கண்டறிந்தார் கொலம்பஸ். தென்னமெரிக்கக் கடலோரப் பிரதேசங்களிலே புகையிலை போடும் பழக்கம் இருந்ததை முதன் முதலாக இஸ்பானியர்கள் 1502—ல் கண்டதுண்டு.

## புகையிலையின் வரலாறு...1

Panama

20

CIGARETTES

# பனமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT.791 TM

Greens' Advtg



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 25

# தொழிலாளர் பெருமக்களுக்கு...

சுதந்திரக் கட்சியை விவசாயக் கட்சி என்றே குறிப்பிடலாம். ஆனாலும் உழவைச் செழிக்கச் செய்வதோடு தொழிலையும் தழைக்கச் செய்து தொழிலாளர் நல்வாழ்வு வாழ்வதற்கு உதவும் சிறப்பான கொள்கைகளைச் சுதந்திரக் கட்சி ஈடேற்றும்.

மற்றக் கட்சிகளின் வழக்கம் யாருக்கும் யாதும் செய்வோம் என்று வாக்களிப்பது. அந்தப் பேச்சுக்களைக் கேட்டு மயங்கிப் போகாமல் இக்கட்சியின் தொழிற் கொள்கையை மற்றக் கட்சிகளின் கொள்கைகளுடன் நிதானமாக ஒப்பிட்டுச் சீர்தூக்கிப் பார்த்தால் எது தங்களுக்கும் தேசத்துக்கும் உண்மையாக நன்மை அளிப்பது என்பதைத் தொழிலாளர்கள் அறிவார்கள்.

முதலாளிகளை ஒழித்துத் தொழிலைப் பொது உடைமையாக்குவது பற்றி வாயளவில் பேசிவிடலாம். ஆனால் இந்தப் பொது உடைமை அமைப்பின் கீழ் உடைமைக்கு உரிமை படைத்திருப்பவர்கள் பொதுமக்கள் அல்லவே அல்ல; அப்போது சர்க்காரே எல்லா உடைமைக்கும் சொந்தக்காரராக இருக்கும். தனி மனிதர்களுக்குப் பதில் சர்க்காரின் கீழ் வேலை செய்வதால் நாட்டுக்குத் தேவையான பொருட்கள் தயாராகமாட்டா; சர்க்கார் எந்தப் பொருட்கள், எந்த அளவில், எந்த விலையில் மக்களுக்குக் கிடைக்க வேண்டுமென்று எண்ணுகிறதோ, அதுவே எல்லோருக்கும் கிடைக்கும். 'எல்லோருக்கும்' என்னும்போது அதில் இந்தப் பொருட்களின் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களும் அடக்கமே என்பதை அவர்கள் உணர வேண்டும். அதோடு, தொழில் துறையானது அதிகார வர்க்கத்தால் நடத்தி வைக்கப்படும்போது கவனமின்மையாலும், விஷயஞானக் குறைவாலும் தேசத்தின் செல்வம் பாழாகும். இதற்குத் தாங்கள் உடந்தையாக இருக்கலாகுமா என்பதைத் தொழிலாளர்கள் உள்ளத்துக்கு விரோதமின்றிச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மேலும் இந்தப் பொது உடைமை அமுலுக்கு வந்தால் இன்று தொழிலாளர்கள் தங்கள் உரிமையை நிலைநாட்டிக் கொள்வதற்காக மேற்கொள்ளும் நடவடிக்கைகளும் கூடச் சட்டபூர்வமாகத் தடை செய்யப்படக்கூடும். அதாவது தங்கள் ஊதியங்களையும், இதர வசதிகளையும் குறித்துக் கூட்டாகப் பேரம் செய்யவும், வேலை நிறுத்தம் செய்யவும் இப்போது தொழிலாளர் பெற்றிருக்கும் உரிமைகளைச் சர்க்கார் தொழில் நடத்தும்போது அவர்கள் இழந்துவிடுவார்கள். சிறிய அளவில் இன்று தொழில் துறையில் பிரவேசித்துள்ள காங்கிரஸ் சர்க்கார் நாளாவட்டத்தில் அத்துறை முழுவதையும் தம் ஆதிக்கத்தில் கொண்டு வந்து தொழிலாளர்களின் இந்த உரிமைகளைப் பறிக்கப் பார்க்கிறார்கள். எளிதில் விளங்கும் இந்த அம்சத்தைத் தொழிலாளர்கள் யாவரும் சிந்தித்துப் பார்த்து வோட்டளிக்க வேண்டும்.

கம்யூனிஸ்ட் நாடுகளில் தொழிலாளர்கள் இத்தகைய அவல வாழ்வுதான் வாழ்கிறார்கள். அந்த நாடுகளிலும் ஊதியங்களில் பெருத்த ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன. எனவே மிகைப்படுத்திப் பேசித் துவேஷங்களை வளர்க்கும் அரசியல்வாதிகளின் வார்த்தைகளைக் கேட்காமல் சமுதாய நலனோடு தங்கள் நலனையும் இணைத்து, ஒன்றுக்கொன்று உரசலில்லாமல் நாடு முன்னேற்றம் காணும் வழிமுறையையே தொழிலாளர்கள் தேர்ந்தெடுக்க வேண்டும்.

காங்கிரஸின் தொழிற் கொள்கையால் தொழிலாளர்கள் ஒருவித நன்மையும் பெறவில்லை என்பதற்கு மத்திய சர்க்காரின் தொழிலாளர் நல இலாகாக் குழுவின் அறிக்கையைப் பார்த்தாலே போதும். இரண்டு திட்டங்கள் முடிந்த பின்பும் தொழிலாளரின் உண்மையான ஊதியம் உயரவில்லை என்று கூறுகிறது அது. நியாய

ஊதியக் கொள்கை சமீப காலத்தில் நடைமுறைக்கு வர வாய்ப்பில்லை என்றும் குழுத் தலைவர் கூறி யிருக்கிறார். அசுர திட்டங்களை நிறைவேற்றுவதற்காகப் பண வீக்கத்தை ஏற்படுத்தி எல்லாப் பண்டங்களின் விலையும் உயருவதற்கு வழி செய்து விட்டது காங்கிரஸ் சர்க்கார். இதனால் தொழிலாளரின் ஊதியம் ஓரளவு உயர்ந்ததாகத் தோன்றினாலும், விலைவாசிகள் அதைவிட உயர்ந்து விட்டபடியால் அவர்களின் பொருளாதார நிலையில் ஒரு சிறிதும் அபிவிருத்தி ஏற்படவில்லை.

விலைவாசி உயர்வு காரணமாக ஏற்றுமதிகள் பாதிக்கப்பட் டிருக்கின்றன. அந்த அளவுக்கு உற்பத்தியும் குறைந்திருக்கிறது. இதனாலும், முதலாளிகளின் இலாபம் குறைவதாலும் இறுதியில் பாதிக்கப்படுவது தொழிலாளர்தாம் என்பது வெள்ளிடைமலை. தனியார்த் துறையை விடக் குறைவான விகிதத்தில் தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்திக் கொண்டுள்ள சர்க்கார் துறைக்குப் பெருத்த முதலீடுகளை மாற்றி யிருப்பதாலும் தொழிலாளர் நலனுக்குக் குந்தகம் ஏற்பட்டுள்ளது.

சுதந்திரக் கட்சியானது தனியாரின் முதலீட்டு உரிமைக்குச் சுதந்திரமளித்துக் கட்டுப்பாடுகளை நீக்குமாதலால், தேசத்தின் உற்பத்தி உயர்ந்து, தேவையான பொருட்கள் நியாயமான விலைக்குக் கிடைக்கும். எல்லா மக்களும் பெறும் இந்த நன்மை தொழிலாளருக்கும் கிடைக்கும். சுதந்திரக் கட்சியை முதலாளிகள் கட்சி என்று சொல்கிறார்கள். உண்மையில் தொழிலாளிகளும் முதலீடுகள் செய்து, முதலாளித்துவ உரிமை பெறச் செய்வது அக்கட்சியின் நோக்கங்களில் ஒன்று. தொழில் துறை ஊழியர்கள் தாங்கள் பணி புரியும் தொழிற்சாலைகளில் பங்குதாரராவதற்கு அக்கட்சிவழி செய்யும். பொருள் உருவில் முதலீடு செய்ய முடியாதவர்களுக்கும் தொழிற்சாலையின் உற்பத்தித் திறன் உயர்வதை யொட்டி ஊதிய உயர்வு தரச் சுதந்திரக் கட்சி உறுதி பூண்டிருக்கிறது. அபிவிருத்திப் பலனில் தொழிலாளருக்குப் பங்கு தரும் பொன்னான கொள்கையை அதன் தேர்தல் அறிக்கையில் காணலாம். இயந்திரங்களை அதிகமாகப் பயனுறும் பெரும் திட்டங்களுக்குப் பதில் மனித சக்தி பெருமளவில் உபயோகமாகும் சிறு சிறு திட்டங்களைச் சுதந்திரக் கட்சி வகுக்குமாதலால் வேலையின்மைப் பிரச்னை தீரும்; இப்போதுள்ள தொழிலாளரின் நிலைமை செழிப்படைவதோடு தொழிலாளர் வர்க்கமே மேலும் பல்கிப் பெருகும்.

இந்நாட்டில் கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சிப் பொறுப்பை ஏற்பது என்பது நினைத்துக்கூடப் பார்ப்பதற்கில்லாத ஒரு கனவு. கம்யூனிஸ்டுகள் கூறும் பொது



## அழுக்கு மூட்டையைச் சுமத்தி ஓட்டுகிறார்!




உடைமையால் தொழிலாளருக்கு ஒரு பிரயோஜனமும் கிடையாது என்றும் கண்டோம். முதலாளிகள் தொழிலாளிகளை நேர்மையாகவும் நியாயமாகவும் நடத்துமாறு கண்காணித்துத் தொழிலாளருக்கு உரிய சௌகரியங்களை அவர்கள் பெறுமாறு செய்வதுதான் சர்க்காரின் கடமை. நாட்டு முன்னேற்றத்துக்கும், பொது நலனுக்கும் உகந்த முறையில் இந்தக் கடமையை ஆற்றக்கூடிய ஒரே கட்சி சுதந்திரக் கட்சிதான்.

'உழவுக்கும், தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்ற குறிக்கோளைக் கொண்டுள்ள சுதந்திரக் கட்சிக்கு விவசாய, தொழிலாள வர்க்கத்தினர் பேர் ஆதரவு அளித்துச் சுதந்திரத்தின் வழியே சுபிட்ச வாழ்வை ஏற்படுத்துவார்கள் என நம்புகிறோம்.

# அஸ்திவாரத்தில் ஆட்டம்

'அரசியல் நிர்ணயச் சட்டத்தை மாற்றிச் சர்க்கார் அதிகமாக அதிகாரம் பெற்ற புது ஷரத்தில் 'எஸ்டேட்' என்று சொல்லியிருப்பது ஜமீன்தாரிகளைத்தான் குறிக்கும்; ரயத்துவாரி நிலங்களைக் குறிக்காது. எனவே கேரள விவசாய உறவுச் சட்டம் செல்லாது' என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்தது அல்லவா? ஜமீன்தார்களின் உரிமைகளைப் போலவே ரயத்துவாரி நில உரிமைகளையும் பறிக்கும் காங்கிரஸ் சர்க்காரின் போக்குக்கு இத் தீர்ப்பு தடை விதித்து விட்டது. அதாவது, காங்கிரஸின் பறிமுதல் திட்டம் அஸ்திவாரத்திலேயே ஆட்டம் கண்டிருக்கிறது. இத் தீர்ப்பை ஒட்டித் தமது நிலச் சட்டங்களைப் புனராலோசனை செய்யுமாறு திட்டக் கமிஷன் ராஜ்ய சர்க்கார்களைக் கேட்டுக் கொண்டிருக்கிறதாம்.

இப்போது காங்கிரஸ் சர்க்கார்கள் என்ன செய்யும் என்பதை நாம் முன்னமேயே எதிர்பார்த்தோம். தங்களுடைய தேர்தல் வசிய மருந்தை இழக்கலாகாது என்பதற்காக அரசியல் நிர்ணயச் சட்டத்தின் மூல ஷரத்தையே தங்களுக்கு இசைவாக மாற்றிக் கொள்ள

இனி அவை முற்படும் என்று 31-12-61 'கல்கி' இதழில் எழுதியிருந்தது நினைவிருக்கலாம். நாம் நினைத்தபடியே செய்து காட்டுகிறது கேரள சர்க்கார். 'எஸ்டேட்' என்பதில் ரயத்துவாரி நிலமும் அடக்கமாகும் என்பதாக அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்று அது தில்லியைக் கேட்டுக் கொண்டிருக்கிறதாம். தவறு செய்து விட்டுத் தவற்றையே சட்டமாக்கப்பார்க்கும் காங்கிரஸின் காரியக்கிரமத்தை முறியடிப்பதே இப்போது மக்களின் கடமையாகும். இந்த ஷரத்துத் திருத்தத்துக்காக மசோதா தயாராகுமானால் அது தேர்தலுக்குப் பின் உருவாகும் புது பார்லிமெண்டில்தான் பிரேரணையாகும். அது நிறைவேற அங்கத்தினர்களில் மூன்றில் இரு பங்கினர் ஆமோதிக்க வேண்டும். மூன்றில் ஒரு பங்கு அங்கத்தினர்கள் எதிர்ப்பு இருந்தாலும் எதிர்ப்பு வெற்றி பெறும். சர்க்காரின் மனம் போன போக்கே சட்டம் என்று கருதி நீதியுடன் விளையாடும் காங்கிரசுக்கு இத்தகைய பெரும்பான்மை கிடைக்காமல் செய்வது வாக்காளர்களின் பொறுப்பாகும்.

# ஈழத் தமிழருக்கு மேலும் சோதனை

ஈழத்திலுள்ள எல்லாப் பிரஜைகளின் பெயரையும் ஒரு தேசியப் பட்டியலில் பதிவு செய்து கொண்டு வோட்டுரிமை அளிப்பதென அந்த நாட்டு சர்க்கார் முடிவு செய்திருக்கிறதாம்.

இப்போது காணும் அறிகுறிகளிலிருந்து அங்கு நாடற்றவர்களாகக் கருதப்பட்டு வரும் எட்டு லட்சம் இந்தியர்களும் இதன் மூலம் தங்கள் வாக்குரிமையை இழக்க நேரிடும் என்றே அஞ்ச வேண்டியிருக்கிறது. இப்படி ஒரு பட்டியலை இப்போது தயாரிக்கும் நோக்கமே இம்மக்களின் வாக்குரிமையைப் பறிப்பதற்காகத்தானோ என்று எண்ணத் தோன்றுகிறது.

பல வருடங்களாக இலங்கையிலேயே வாழ்ந்து வந்து, முந்தைய தேர்தல்களில் பங்கெடுத்துக் கொண்ட தமிழர்களுக்குக் கூட இப்பட்டியலில் இடம் அளிக்க மறுப்பதாகத் தெரிகிறது. தாங்கள் ஒரே இடத்திலேயே தான் வசித்து வந்திருக்கிறோம் என்று ஆதார பூர்வமாக நிலைநாட்ட முடியாதவர்கள் பிரஜாவுரிமையை இழந்துவிடக் கூடிய சூழ்நிலை இப்போது உருவாகியுள்ளது. முக்கியமாக மலைத் தோட்டத் தொழிலாளர்கள் தங்களது பிரதிநிதிகளை இலங்கை சட்ட சபைக்கு அனுப்பி வைக்க முடியாதபடி நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. இன்று இலங்கையிலுள்ள எல்லாத் தொழிலாளர்களும் தங்களது பொருளாதார நிலைமையில் அதிருப்தியுற்று வேலை நிறுத்தம் செய்ய முற்பட்டிருக்கிறார்கள். இச்சமயத்தில் இதுபோன்ற காரியங்களைக் கடைப்பிடிப்பது நாட்டின் பொருளாதாரத்தையே அடியோடு சீர்குலைத்து விடும் என்பதை இலங்கை அரசாங்கம் உணர வேண்டும்.

# பாட்னு படாடோபம்

பாட்னுவில் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தின் பகட்டைக் கண்டு சில 'நடுநிலைமை'ப் பத்திரிகைகள் கூடக் கண்டனம் தெரிவித்திருக்கின்றன. அவ்வளவு பெருத்த செலவு செய்து கூட்டம் போட்டிருக்கிறது காங்கிரஸ். இருந்தாலும் கட்சி அக்கிராசனர் ஸ்ரீ சஞ்சீவ ரெட்டி அவர்கள் ''ஒவ்வொரு கட்சியைப் போல நாங்கள் பண பலத்தை நம்பவில்லை. எங்களுக்குப் போதிய நிதி வசதியும் இல்லை'' என்று கூறி முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கப் பார்த்தார். தம்மை நகைப்புக்கிடமாக்கிக் கொண்டார்.

பிரதமர் அவர்களின் பாஷையில் இதைவிட ஒரு பெரிய 'தமாஷா'வையும் செய்து வைத்தார் ஸ்ரீ ரெட்டி காரு. 'காங்கிரஸ் ஆட்சியினால் மக்கள் அடைந்திருக்கும் நன்மைகளையெல்லாம் மகாநாட்டில் எடுத்துச் சொல்லப் போகிறோம்' என்றார் அவர். சொல்லித் தெரிய வேண்டிய விஷயமா இது! உணவு, உடை, விடுதி இம்மூன்றிலும் ஒருவிதமான முன்னேற்றத்தையும் காணாமல், நாளுக்கு நாள் ஏறி வரும் விலைவாசிகளால் அல்லலுறும் மக்களிடம் அவர்கள் பெருவாழ்வு எய்தியிருப்பதாகத் தெரியப்படுத்துவது பெரிய 'தமாஷா'தானே?

இந்தக் காங்கிரஸ் கூட்டத்தின் முக்கியமான அம்சம் நேரு அவர்களிலிருந்து எல்லாக் காங்கிரஸ்காரர்களும் சுதந்திரக் கட்சியைத் தாக்கியதுதான். ராஜாஜி கூறியிருப்பது போல் நேருஜியுடைய கோபமானியின் உச்சத்தைப் பாதரஸம் தொட்டிருக்கிறது. இது சுதந்திரக் கட்சியின் அமோக வளர்ச்சிக்கே சான்ருகும். 'சுதந்திரக் கட்சி உருப்படியாக என்ன சொல்கிறது?' என்று திரும்பத் திரும்பக் கேட்டுத் தாக்குவது தவிர இந்த மகா நாட்டில் உருப்படியான எந்தக் கருத்தையும் தெரிவிக்காத பிரதமரவர்களின் பார்வைக்கு அக்கட்சியின் இருபத்தோரு அம்சக் கொள்கை அறிக்கையையும், தேர்தல் விஞ்ஞாபனத்தையும் கொண்டு வர விரும்புகிருேம்.

இம் மகாநாட்டின் இன்னெரு முக்கியமான அம்சம் நேருஜி இந்த நாட்டின்சர்வாதிகாரியா இல்லையா என்ற சந்தேகத்தைத் தீர்த்து வைத்ததுதான். மின்சாரம், தொழில், விவசாயம், நேருஜி ஆகியவையே திட்டத்தின் நான்கு தூண்கள் என்று கூறிய ஸ்ரீ யு. என். தேபர் அவர்கள் ஒரு தனி மனிதரின் செல்வாக்கினுலேயே காங்கிரஸும், திட்டமும் உயிர் வாழ்கின்றன என்பதை வெளிப்படுத்தினுர்.

மகாநாட்டில் கொடியேற்றி வைத்த ஸ்ரீ சஞ்சீவ ரெட்டி அவர்கள் காங்கிரஸ்காரர்கள் யாவரும் அக்கொடியின் கீழ் நின்று கொண்டு ஒரு பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டுமென்ருர். சீன ஆக்கிரமிப்பைக் குறித்துப் பிரதமர்

## பெரியார் பயமுறுத்துகிருர்!

''சாதி உணர்ச்சியைத் தூண்டி விட மாட்டோம்; பலாத்காரத்தில் இறங்க மாட்டோம்'' என்றெல்லாம் தமிழ் நாட்டு அரசியல் கட்சிகளின் தலைவர்கள் செய்து கொண்ட தேர்தல் உடன்படிக்கையின் மைகூடக் காயவில்லை; அதற்குள் சாதியை முன்னுல் வைத்து மிரட்டல் பிரசாரம் ஆரம்பமாகி விட்டது. தமிழ் நாட்டுக் காங்கிரஸின் முக்கியமான தோழரும், வழிகாட்டியும், பிரதான பிரசாரகருமான ஈரோட்டுப் பெரியார் அவர்கள் தான் இந்தக் காரியத்தைத் தொடங்கியிருக்கிருர். தேர்தல் தினத்தன்று பிராமண வாக்காளர்கள் வோட்டுச் சாவடிக்குப் போக வேண்டாம், வோட்டுப் போட வேண்டாம் என்று அவர் 'வேண்டுகோள்' விட்டிருக்கிருர்.

இதேபோல, ஒரு குறிப்பிட்ட வகுப்பினரையோ அல்லது எல்லோரையுமோ நான் கேட்டுக்கொண்டிருந்தால் மக்கள் அதற்கு வேறு விதமாக அர்த்தம் செய்து கொள்வார்கள். ஆளும் கட்சியானது பணத்தையும், அதிகாரத்தையும் கொண்டு தேர்தலைச் சுதந்திரமான சூழ்நிலையில் நடக்க முடியாதபடி செய்து விட்டது; ஆனபடியால் இந்தத் தேர்தலைப் பகிஷ்காரம் செய்ய வேண்டும் என்று ஒத்துழையாமை இயக்கம் தொடங்கியிருக்கிறேன் என்று கருதுவார்கள்.

ஆனுல் பெரியார்அவர்களின் அறிக்கையை இது போன்ற சாத்துவிக ஒத்துழையாமையாக யாரும் பொருள் கொள்ள மாட்டார்கள். பிராமணர்கள் சிகை வைத்துக் கொள்வதையும், பூணூல் போட்டுக் கொள்வதையும், நெற்றியில் திருமண், விபூதி இட்டுக் கொள்வதையும் இழிவாகப் பேசியும் பகிரங்கமாகப் பயமுறுத்தியும் வந்த இரு நாயக்கர் அவர்கள் இந்த அச்சுறுத்தல்களை ஒட்டினுற் போலவே இன்று வோட்டுச் சாவடிக்குப் போகாதீர்கள் என்று பிராமணர்களை 'வேண்டி'க் கொள்கிருர் என்ருல், அந்த வேண்டுகோளில் பயமுறுத்தலைத்தான் காண்பார்கள். வோட்டுப் போடச் செல்கிற பிராமணர்கள் பெரியார் கட்சிக்காரர்களின் ஏச்சுக்கும், தாக்குதலுக்கும் ஆளாக நேரிடும் என்பதுதான் அவருடைய அறிக்கைக்குப் பொருள் என்று அனைவரும் கொள்வார்கள். ஜனநாயகத்தின் கீழ் எல்லாரும் சட்ட பூர்வமாகப் பெற்றிருக்கும் வாக்குரிமைப் பிரயோகத்தைப் பிராமணர்களைப் பொறுத்த மட்டில் ஒரு சாகஸச் செயலாக்கி விட்டார் பெரியார்.

தென்னுட்டுப் பிராமணர்களின் எதிர்காலத்தைப்பற்றி இன்று அவர் விடும் கண்ணீர்த் துளிகளைக் கண்டு யாரும் மயங்க மாட்டார்கள். பழைய பிராமணத் துவேஷ வாசகங்களுக்குப் பதிலாக இன்று காங்கிரஸ்காரர்களுடன் சேர்ந்து கொண்டு அவர் 'ஜெ ஹிந்து' கோஷம் போடுவதால் அவருடைய பூர்வ சரித்திரத்தை மக்கள் மறக்க இயலாது. அவருடைய உட் கருத்தும், இலட்சியமும் அன்றும் இன்றும் என்றும் ஒன்றே என்றுதான் எண்ணவேண்டியிருக்கிறது. - ராஜாஜி

எந்த விதமான நடவடிக்கை எடுத்தாலும் காங்கிரஸ்காரர் ஒவ்வொருவரும் கட்டுப்பாட்டுடன் அவரையே ஆதரிக்க வேண்டும் என்பதே அந்தப் பிரமாணம். இது போன்ற ஒரு விசித்திரமான பிரதிக்ஞை சர்வாதிகார நாடுகளில் தவிர வேறெங்கும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாததாகும்.

ஆக்கிரமிப்பை முறியடிப்பது ஒரு தேசியப் பிரச்னை. இதில் கருத்துத் தெரிவிக்க இந்நாட்டின் எல்லாப் பிரஜைகளுக்கும் உரிமையுண்டு. அவற்றைத் தீர்க்கமாக ஆலோசித்து உசிதப்படி செய்ய வேண்டியதே பிரதமரின் பொறுப்பு. எனவே அவர் எந்தவிதமான நடவடிக்கை எடுத்தாலும், அதனை ஆதரித்தே தீர வேண்டும் என்று காங்கிரஸ்காரர்களை வாக்குத்தத்தம் தருமாறு கோருவது நேருஜியின் எதேச்சாதிகாரத்துக்கு அடிகோலுவதேயாகும்.

நேருஜியின் மனமறிந்துதான் பேசியிருக்கிறார் காங்கிரஸ் அக்கிராசனர் என்பதும் இம்மகாநாட்டில் நிதரிசனமாகத் தெரிந்து விட்டது. தமது கோட்பாடுகளுக்கு இணங்காதவர்கள் யாவரும் தட்சணமே மூட்டை முடிச்சுகளைக் கட்டிக் கொண்டு காங்கிரஸிலிருந்து வெளியேறி விட வேண்டும் என்று பிரதமர் ஆக்ரோசத்துடன் கூறியிருக்கிறார். 'எனது கோட்பாடு' என்பதற்குப் பதில் 'சோஷலிஸம்' என்ற பதத்தை உபயோகித்திருக்கிறார். சோஷலிஸத்தில் பலவிதமுண்டு என்றும் உடனேயே கூறி, தாம் குறிப்பிடும் சோஷலிஸ மோஸ்தர் தமது தனிப்பட்ட சிருஷ்டியே என்பதையும் மறைமுகமாக உணர்த்தியிருக்கிறார். கட்சியில் மாற்றுக் கருத்துக்கள் உருவானால் அதற்கான காரணத்தை ஆராய்ந்து பார்த்துத் தம் கொள்கைகளைச் செப்பம் செய்து கொள்வதுதான் தலைவருக்கு அழகு. ஆனால் தலைவருக்காகவே கட்சி என்ற ஏகாதிபத்தியத்தை ஏற்படுத்தியுள்ள நேருஜி தம் வழியே செல்ல இணங்காதவர்களையெல்லாம் விரட்டியடிக்க எண்ணுகிறார்.

காங்கிரஸ் என்ற ஒரு ஸ்தாபனத்தில் செல்லுபடியாகும் இவரது சர்வாதிபத்தியம் அக்கட்சி மீண்டும் ஆட்சிக்கு வந்தால் இந்த நாடு முழுவதையும் அதன் பிடியில் சிக்க வைக்கும் என்பதைத் தக்க தருணத்தில் மக்களுக்கு உணர்த்தி விட்டது பாட்னா காங்கிரஸ்.

# நேருஜி வழிகாட்டுகிறார்!

'பலாத்காரத்தால் காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாமா?' என்று யோசித்து வந்த பல நாடுகளுக்குக் காந்தி மகாத்மாவின் பொன்னாடாகிய இந்தியா முன்பு வழிகாட்டியிருக்கிறது. அன்பு வழியில், அகிம்சை வழியில் சென்று இலட்சியத்தை அடைவதே முறை என்று போதித்திருக்கிறது. தற்போது இதே யோசனையில் ஆழ்ந்துள்ள ஆசிய நாடுகளுக்கு முன்னோடியாக இருக்கும் பெருமையை இந்தியாவுக்கு மீண்டும் அளித்திருக்கிறார் பிரதமர் ஜவாஹர்லால் அவர்கள். 'பலாத்காரத்தினால் ஒவ்வொரு நாடும் தங்கள் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்ளலாம். உலகக் கருத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்' என்றெல்லாம் தைரியமளித்துக் காந்தியத்துக்கு நேர் எதிரிடையான வழியை மற்ற நாடுகளுக்குக் காட்டியிருக்கிறார் நேருஜி. ஐ. நா. வைப் புறக்கணித்து, கோவாவில் அவர் எடுத்த நேரடிப் போர் நடவடிக்கை உடனுக்குடனேயே இந்தோனேஷியாவுக்கும் தெம்பூட்டியிருக்கிறது.

நியூகினி என்று முன்பு சொல்லப்பட்ட மேற்கு இரியன் நாடு இந்தோனேஷியாவைச் சேர வேண்டும் என்பது அனைவரும் ஒப்புக் கொள்ள வேண்டிய விஷயம். இன்று இப்பகுதியை ஆண்டு வரும் டச்சுக்காரர்களுக்கு அதை விட்டுக் கொடுக்க மனமில்லை. இந்நிலையில் சிக்கலைத் தீர்க்க வேண்டியது ஐ. நா. வின் பொறுப்பேயாகும். ஆனால் இந்தோனேஷிய ஜனாதிபதி டாக்டர் சுகர்ணுவோ இந்தத் தீவின் மீது படையெடுத்து இந்தோனேஷியாவுடன் அதை இணைத்துக் கொள்ள எல்லா ஏற்பாடுகளையும் செய்து வருகிறார். 'ராஜரீகப் பேச்சு வார்த்தையில் பயனில்லை; ராணுவ பலம்தான் உறுதியான விளைவுகளை ஏற்

---

**குடியானவர்களே, உங்களுக்குத் தெரியுமா? உங்கள் நிலத்துக்கு நில வரி இருக்கக் கூடாது என்று போராடுகிறது சுதந்திரக் கட்சி. அதை ஆதரியுங்கள்!**

---

படுத்தும் என்று நம்புகிறேன்' என்று அவர் கூறியிருக்கிறார்.

விவாதத்தால் பலன் இல்லை என்று கூறுவது விவாதத்தின் மூலமே பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதற்காக ஏற்பட்டிருக்கும் ஐ. நா. வை அலட்சியப் படுத்தும் காரியம்தானே?

ஒரேயடியாக அழிந்து போகாமல் ஆயுள் காலச் சிறைவாசியைப் போல என்றும் மரணாவஸ்தையில் வாழ வேண்டிய ஒரு ஸ்தாபனமாகி விட்டது ஐ. நா. சபை. இனி 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்ற கொள்கைதான் உலகெங்கிலும் நிலை பெறப் போகிறது. இந்நிலைக்கு அச்சபையைக் கொண்டு வரப் பேருதவி புரிந்திருக்கிறது நம் பாரத நாடு. இம் மாதிரிச் சந்தர்ப்பங்களில் இந்தியா வாய் திறக்க முடியாதபடி செய்து விட்டார் 'சமாதானத் தூதர்' நேரு அவர்கள்.

# என்ன சேதி?

## பாஷ்யம் ஐயங்கார் பிரிவு

வயதாலும், சேவையாலும் கனிந்த பழமாக விளங்கிய ஸ்ரீ வி. பாஷ்யம் ஐயங்கார் அவர்கள் மறைந்து விட்டார்கள். அகத் தூய்மையும், சம நோக்கும் படைத்திருந்த ஐயங்கார் அவர்கள் ஓர் உண்மை ஹரிபக்தராக வாழ்ந்திருந்து ஹரிஜன நலனுக்காகவே தம் நீண்ட வாழ்வை அர்ப்பணித்திருந்



தார். அந்நாட்களில் பின்பற்றப்பட்ட சமூகப் பழக்க வழக்கங்களைப் பொருட்படுத்தாது காந்தியடிகள் காட்டிய வழியில் சென்று, தாழ்ந்த நிலையிலுள்ளோருக்குத் தீரத்துடன் அவர் புரிந்த பெரும் பணியைத் தமிழகம் என்றும் மறக்காது.

உயர் நீதி மன்ற நீதிபதிப் பதவி உட்படப் பல பெரும் பொறுப்புக்களை வகித்தவர் ஸ்ரீ பாஷ்யம் அய்யங்கார். அதோடு ஹரிஜன சேவா சங்கம், சேவாசமாஜம், நகர அபிவிருத்தி டிரஸ்ட், மேல் சட்டசபை, ஸ்ரீ பெரும்பூதூர் ஆலய தேவஸ்தானம் இவற்றிலும் ஸ்ரீ ஐயங்கார் அவர்களின் தொண்டு சிறந்திருக்கிறது. ஓர் உண்மை காந்தீயவாதி இன்று நம்மிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு விட்டார்.

## பறி கொடுப்பது யார்?

காஷ்மீரத்தில் பாகிஸ்தான் ஆக்கிரமித்துள்ள கில்ஜித் பகுதியிலிருக்கும் 4000 சதுர மைல்களுக்குச் சீனா பாத்தியதை கொண்டாடுவதாகச் செய்திகள் வந்தன. இவற்றைப் பாகிஸ்தான் மறுத்தபோதே, பாகிஸ்தான் வசமுள்ள காஷ்மீரத்தில் ஆயிரம் சதுர மைல்களுக்கு உரிமை கோரியிருக்கிறது பீகிங் ரேடியோ. இதையெல்லாம் கண்டு நம் நாட்டில் பலர் திருப்தியடைந்திருக்கிறார்கள். இந்தியாவுக்குச் செய்ததையே சீனா பாகிஸ்தானுக்கும் செய்ய முற்பட்டிருப்பதை எடுத்துக் காட்டி, நம்முடன் விரோதித்துக் கொண்ட அயூப்கானை இவர்கள் தாக்கியிருக்கிறார்கள்.

ஆனால் சீனாவின் இந்தப் புது ஆக்கிரமிப்பால் உண்மையில் நஷ்டப்படுவது பாகிஸ்தான் அல்லவே? இன்று பாகிஸ்தான் ஆக்கிரமித்துள்ள இந்தப் பகுதி இந்திய யூனியனுக்கு உரித்தானது என்று நாம் கருதும் காஷ்மீரத்தின் ஒரு பாகமே அல்லவா? நமது சொத்தைப் பறித்த ஒருவர் அதை வேறொருவரிடம் இழப்பதில் நமக்கு என்ன திருப்தி?

இன்று பாகிஸ்தான் நம்மோடு ஒத்துப் போகாததற்காகக் குறை கூறும் இவர்கள் இன்னொரு விஷயத்தையும் மறந்து போனார்கள். முன்பு அயூப்கான் நம்முடன் ராணுவ ஒப்பந்தம் செய்து கொள்ளக் கை நீட்டியபோது நாம் ஒத்துப் போக மறுத்தோம். அதன் விளைவாகவே சீனா மேலும் மேலும் துணிவு பெற்று நம் எல்லைகளில் ஊடுருவலாயிற்று. நம்முடைய உரிமைகளையும், அதே போலப் பிழைகளையும் பிறர் மீது ஏற்றி வைத்துப் பார்த்து மகிழ்வது பொருளற்ற காரியமாகும்.

## பொய்ப் பிரசாரம்

சுதந்திரக் கட்சிக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்துக்கும் இடையே ஏற்படவிருந்த தேர்தல் உடன்பாடு முறிந்ததற்குப் பல பொய்க் காரணங்கள் கற்பித்துக் கூறப்படுகின்றன. சுதந்திரக் கட்சியிடமிருந்து தி. மு. க. ஏராளமாக நிதி கேட்டதாகவும், பண விஷயமாகவே இரு கட்சிகளுக்கும் தகராறு ஏற்பட்டதாகவும் சொல்கிறார்கள். இது முழுப் பொய். ஒன்றுக்கொன்று சில

ஸ்தானங்களை விட்டுக் கொடுப்பதில் ஏற்பட்ட கருத்து மாறுபாடு மட்டுமே தான் முறிவுக்குக் காரணமாகும்.

## விசித்திரப் பங்கீடு !

பொதுத் தேர்தலில் கலந்து கொள்ளும் அரசியல் கட்சிகள் தமது கொள்கைகளை விளக்குவதற்காக வானொலியில் இடம் அளித்திருக்கிறார்கள் அல்லவா? மொத்தம் ஒதுக்கப்பட்டுள்ள நேரத்தை எந்தவிதத்தில் கட்சிகளிடையே பகிர்ந்தளிப்பது என்பதை நிர்ணயித்திருக்கும் முறை விநோதமாக இருக்கிறது. தற்போது சட்டசபைகளில் அதிக ஸ்தானங்கள் வகித்து, வருகிற தேர்தலிலும் அதிகமான ஸ்தானங்களுக்குப் போட்டியிடும் கட்சிக்கே அதிக காலம் ஒதுக்கீடு செய்ய முடிவாகியிருக்கிறது. அதாவது இதர முறைகளில் வலுவாகப் பிரசாரம் செய்யக் கூடிய கட்சிக்கே சர்க்கார் நிறுவனமாகிய வானொலியிலும் அதிக வசதி தரப்படுகிறது. பசியுடன் வந்தவர்களைப் புறக்கணித்து, வயிறு முட்ட உண்டவர்களுக்கே விருந்து படைப்பது போலிருக்கிறது இந்த ஏற்பாடு.

## அஜாய் கோஷ் மறைவு

இவ்விதழ் அச்சுக்குப் போய்க்கொண்டிருக்கும் தருணத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக் காரியதரிசி ஸ்ரீ அஜாய் கோஷ் அவர்களின் அகால மரணச் செய்தி கிடைத்திருக்கிறது. நானாவித கருத்துக்கள் நிலவும் அரசியல் உலகில் தங்களுடைய கொள்கைகளை நன்கு விளக்கிக் கூறி மக்களுக்குத் தலைமை தாங்க வேண்டிய தலைவர்கள் இன்றியமையாதவர்களாகி விட்டார்கள். இவர்களில் ஸ்ரீ அஜாய் கோஷ் அவர்கள் முக்கியமான ஓர் இடத்தை வகித்து வந்தார். கம்யூனிஸ்டுகளிலேயே உள்ள தீவிர வாதிகளைச் சமனப்படுத்தி அக் கட்சி பிளவுபடாமல் அவர் பார்த்துக் கொண்டார். பழகுவதற்கு இனியவராக விளங்கிய ஸ்ரீ அஜாய் கோஷின் மறைவு இந்திய அரசியலில் ஒரு வெற்றிடத்தை உண்டாக்கி விட்டது.




1. அடையாறு கலா க்ஷேத்திரத்தின் வெள்ளி விழாவில் டாக்டர் ஸி. பி. அவர்களும் டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்களும் உரை நிகழ்த்துகிறார்கள். 2. தமிழிசைச் சங்க விழாவில் திரு நாராயணசாமிப் பிள்ளையின் வரவேற்புரை. 3. இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியில் குமாரி வைஜயந்திமாலா பேசுகிறார். 4. சங்கீத வித்வத் சபை விழாவில் திரு வீருசாமி பிள்ளை அவர்கள் பேசுகிறார். வித்வத் சபைக்கு விஜயம் செய்த ரஸிகர்களையும் அருகிலுள்ள படங்களில் காணலாம்.



# ஸ்த்ரீ

எல்லோரும் கேட்ட கதை; எல்லோருக்கும் தெரிந்த கதை; எல்லோரும் படித்த கதை; பல முறை பல மொழிகளில் படமாக்கப்பட்ட கதை — ஆம், மகா கவி காளிதாஸர் இயற்றிய சாகுந்தல நாடகம் தான் ''ஸ்திரீ'' யாக ஹிந்தியில் வெளி வந்திருக்கிறது. ராஜ் கமல் கலாமந்திர் வண்ண ஓவியமாகத் தயாரித் திருக்கிறார்கள். படத்தின் டைரக்டரான வி. சாந்தாராம் கதாநாயகன் துஷ்யந்தனாக வருகிறார். சாந்தாராம் துஷ்யந்த னென்றால் அவருடைய சகுந்தலை சந்தியாவாகத்தானே இருக்க முடியும்? கண்வ மகரிஷியின் ஆசிரமத்தில் அவர் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்த அருமை மகள் சகுந்தலையை அரசனான துஷ்யந்தன் காதலித்துக் காந்தர்வ மணம் புரிந்துகொண்டதும், பிறகு சகுந்தலைக்குத் தூர்வாச மகரிஷி இட்ட சாபம் காரணமாகத் துஷ்யந்தன் அவளை மறந்ததுமல்லாமல் துறந்தும் விட்டதும், கடைசியில் யாவும் நினைவு வந்து மன்னன் அவளையும் ராஜகுமாரன் பரதனையும் ஏற்றுக் கொண்டதும் யாருக்குத்தான் தெரியாது?



எல்லோரும் அறிந்த கதையைப் பல்லோரும் விரும்பிப் பார்க்கும்படி படமாக்கியிருக்கின்றனர். அறுபதாண்டு நிறைந்த டைரக்டர் சாந்தாராம் துஷ்யந்தனாக வருகிறாரே எப்படியிருக்குமோ என்று சிறிது அதிருப்தியோடு சென்ற எனக்குப் படம் பார்த்ததும் அந்த அதிருப்தி இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. நம் தமிழ்ப் படங்களில் தொப்பையும் தொந்தியுமாகப் பிரசித்தி பெற்ற கதாநாயகர்கள் தோன்றும் விந்தையை நினைத்து மனம் நொந்து போனேன். இந்த வயதில் கதாநாயகனாக நடிக்க முடியும் என்ற தன்னம்பிக்கையுடன் துஷ்யந்தனாக வரும் சாந்தாராம் பாராட்டுக்குரியவர்தான்.



இந்தப் படத்தில் கதையைப் பற்றியோ, கதாபாத்திரங்களைப் பற்றியோ விசேஷமாகக் கூற எதுவும் இல்லை. ஆனால் காட்சிகளைப் பற்றிக் கூற நிறைய இருக்கிறது. மகாகவி காளிதாஸர் இயற்றிய காவியத்தின் கௌரவம் சிறிதும் குன்றாமல் படம் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

தேவ சிரேஷ்டர்கள் வாழ்ந்த கண்வ மகரிஷியின் தபோவனம் தத்ரூபமான இயற்கைச் சூழ்நிலையில் அமைந்திருப்பது மகிழ்ச்சிக்குரியது. அங்கு கேட்கும் முனிவர்களின் வேத கோஷம் நம்மை வேத காலத்துக்கே அழைத்துச் சென்று விடுகிறது. பாடும் பறவைகளின் கானமும், ஆடும் மயில்களின் அழகும், கூவும் குயில்களின் குதூகலமும், ஓடும் நதியின் ஒய்யாரமும், தாவும் மான்களின் வனப்பும், தழைத்துப் படர்ந்திருக்கும் தாவர வர்க்கங்களின் வளமுமாக அந்த வனப் பிரதேசத்தின் செழிப்பு அதியற்புதமாகக் காண்கிறது. வனமயிலின் மனமோகன நடையுடன் போட்டியிடுவது போலவும், துள்ளியோடும் புள்ளி மான்களைப் பழிப்பது போலவும் தபோவனத்துப் பெண்ணரசிகள் வனமெங்கும் வளையவருவது இன்பக் கனவின் இனிய நனவாக இனிக்கிறது.

சகுந்தலையை முதன் முதலில் துஷ்யந்தன் காணும் காட்சியில் வண்ண மலர்க் குவியலுக்கிடையே அவள் கண் மலர்களையும் சேர்த்துக் காட்டுவது நல்ல கற்பனை.

துஷ்யந்தனுக்குச் சகுந்தலை தாமரை இலையில் கடிதம் எழுதுவது காவியச் சிறப்போடு ஓவியச் சிறப்பும் பெற்று விளங்குகிறது.

சகுந்தலை—துஷ்யந்தன் காந்தர்வ விவாகம்கவினுறு காட்சியாகப் புனையப்பட்டிருக்கிறது. கானகத்தின் இயற்கை வனப்புக்களை யெல்லாம் வளமாகப் படம் முழுவதும் பயன்படுத்தியிருப்பது பாராட்டுக்குரியது. தனிமையில் இருக்கும் காதலர்களைக் காண முயன்ற மானின் பார்வையை வாழையிலையால் துஷ்யந்தன் மறைக்கும் காட்சி உள்ளத்தில் உறைந்து விடுகிறது. மண்ணில் தோன்றும் வண்ண வண்ண மலர்களை யெல்லாம் வாரியிறைத்துக் கானகப் பிரதேசத்தைக் காட்டியிருப்பதைக் கண்டு களிக்க இரு கண்கள் போதா.

சகுந்தலை கண்வ மகரிஷியின் ஆசிரமத்திலிருந்து கணவன் வீட்டுக்குச் செல்லும் போது அவளோடு மானும், மயிலும், கிளியும், குயி

லும் தொடர்ந்து சென்று பிரியாவிடை அளிப்பது உருக்கமாக இருக்கிறது. சகுந்தலையின் உள்ளன்புக்குப் பாத்திரமான மான்குட்டி அவளது தாவணியைப் பற்றிக் கொண்டு சென்றதைப் பார்க்கும்போது டைரக்ஷனுக்கு ஒரு 'சபாஷ்' போடத் தோன்றுகிறது!

சாந்தாராம் இந்தப் படத்தின் கதாநாயகன் என்ற புகழோடு டைரக்டர் என்ற புகழையும் பெற்று விடுகிறார். சந்தியாவின் நடிப்பில் விசேஷமாகக் கூற எதுவும் இல்லை என்றாலும் அவரிடம் உள்ள துடிப்பு நன்றாக இருக்கிறது. சிங்கங்களுக்கிடையே கண்ணை மூடிக் கொண்டு அமரும் காட்சி மெச்சும்படியாக இருக்கிறது. தோழிகளோடு விளையாட்டுப் பெண்ணாகத் திரிந்த போதிருந்த சகுந்தலைக்கும், துஷ்யந்தனின் உள்ளங் கவர்ந்த சகுந்தலைக்கும் உள்ள வேறுபாட்டைக் காணும்போது "உள்ள நிறைவினில் கள்ளம் புகுந்திடில் உள்ளம் நிறைவாமோ" என்ற பாட்டு நினைவுக்கு வருகிறது. துஷ்யந்தனால் நிராகரிக்கப்பட்டுத் தன்னந் தனியளாகக் காட்டுப் பாதையில் செல்லும் சகுந்தலையின் பாதங்களில் கல்லும், முள்ளும் கீறிக் காயப்படுத்துகின்றன. அது அவள் பட்ட வேதனையை நன்கு வெளிப்படுத்துகிறது; சிங்கத்தின் குகையை நெருங்கியதும் அவள் மரப்பட்டையிலிருந்து மரவுரி ஆடை தயாரித்துக் கொள்வதாகக் காட்டியிருப்பது ஆதிகாவியத்துக்குப் பெருமை தருவதா யிருக்கிறது.

"சகுந்தலை பெற்றதோர் பிள்ளை சிங்கத்தினைத் தட்டி விளையாடி, நன்று உகந்ததோர் பிள்ளை முன் பாரத ராணி ஒளியுறப் பெற்ற பிள்ளை" என்ற பாரதியின் வாக்கை மெய்ப்பிப்பதாயிருக்கிறது, குழந்தை பரதன் துணிச்சலோடு சிங்கத்தின் வாயில் கை விடுவது!

இந்தப் படத்தில் மிகவும் பாராட்ட வேண்டிய அம்சங்களோடு துஷ்யந்தனின் அரண்மனைச் சபாமண்டபத்தையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். தபோவனத்து முனிவரின் ஆசிரமங்களும் ஆதிகாலத்து எழிலோடு அழகாக அமைக்கப்பட்டிருக்கின்றன.

படத்தின் நடிகர்களைக்கூட வெளியிடாமல் தன்னடக்கத்தோடு படம் ஆரம்பமாகிறது. அதுவும் ஒரு புதுமையாகத்தான் இருக்கிறது.

ராஜசபையில் நடனமாடும் குமாரி ராஜ்ஸ்ரீ சாந்தாராம் கவர்ச்சியாக ஆடுகிறார். புலிக்குப் பிறந்தது பூனையாகி விடுமா?

பதினொரு பாடல்கள் இருந்தும் மக்கள் மனத்தில் பதிந்து விடும்படி ஒரு பாட்டுக்கூட அமையாதது ஒரு பெரிய குறைதான்!

இது மட்டும் ஒரு தமிழ்ப் படமாக இருந்திருந்தால் எவ்வளவு பெரிய மகிழ்ச்சியைத் தந்திருக்கும் என்று என்ஞல் எண்ணிப் பாராமல் இருக்க முடிய வில்லை.

வானவில்லின் வர்ண ஜாலங்களின் வனப்பு மயக்கத்தில் குறை எதுவும் தெரியவில்லை.

காவிய நயமும், காட்சி வளமையும், ஓவிய எழிலும் ஒருங்கே கொண்ட "ஸ்த்ரீ"யை அவசியம் பார்த்து மகிழ வேண்டும்.

# என் சுற்றுப் பிரயாணம்

ஜனவரி 22-ந் தேதி முதல் பத்து நாட்கள் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்யப் போகிறேன். என் சக்தி மட்டுமல்ல, தேர்தலுக்கு இருக்கும் காலமும் குறைவாகத்தான் இருக்கிறது. ஆனபடியால் ஜில்லா ஒன்றுக்கு ஒரு ஊர் தான் செல்ல முடியும். போக வேண்டிய இடங்கள் பல விட்டுப் போகும். நண்பர்கள் மன்னிக்க வேண்டும். நான் நேரில் வந்து மக்களைக் கேட்டுக் கொண்டதாகவே வைத்துக் கொள்ள வேண்டும். இந்தப் பெர்மிட்-லைசென்ஸ்-கோட்டா ராஜ்யம் ஒழிய வேண்டும். உண்மையான குடியரசு ஸ்தாபிக்கப்பட வேண்டும். இந்தியா முழுதும் இந்தச் சுதந்திர இயக்கம் பரவி ஓங்க வேண்டும். மாடும் மனையும் பண்ணையும் காக்கும் அரசன் இல்லை; பறிமுதல் செய்யும் ஒரு கட்சியின் ஏதேச்சாதிகாரம் ஒழிய வேண்டும். அனைவரும் சுதந்திரக் கட்சி அபேட்சகர்களுக்கு வாக்குகள் தந்து சுதந்திர வாழ்வுக்கு வழி தேட வேண்டும். அப்படிச் செய்தால்தான் சர்க்காருக்கும் உத்தியோகஸ்தர்களுக்கும் அதிகாரங்கள் குறைந்து மக்களுக்குச் சுதந்திரம் விஸ்தரித்து சந்தோஷ வாழ்க்கை நாட்டில் ஏற்படும்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

● பிப்ரவரி மாதத்தில் மகர ராசியில் எட்டு கிரகங்கள் கூடுவதால் நேரக்கூடிய இமைகளைத் தவிர்ப்பதற்காகச் சகல ஜீவராசிகளின் சௌக்கியத்துக்காகத் திருவான்மியூர் மேலக் குளக்கரையிலுள்ள 'அமரபாரதி' என்னும் இல்லத்தில் ஜனவரி 17 முதல் 26-ம் தேதி வரை 'ரிக்வேத ஸம்ஹிதா ஹோமம்' நடத்துவதாயும், பிரதி தினமும் இரவு ஆறரை மணிக்கு மந்திர பாகங்களின் தாத்பர்யங்களைப் பிரபல பண்டிதர்களைக் கொண்டு உபன்யாசங்கள் மூலம் விளக்கவும் ஏற்பாடாகி யிருக்கிறது.

● ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளின் ஆக்ஞைப் பிரகாரம் எழும்பூர் கெங்கு ரெட்டி ரோடு, ஸ்ரீ செல்வ விநாயகர் கோவிலில் 14—12—61 வியாழக்கிழமை முதல் காலையில் 7 முதல் 8 மணி வரை பிரதி தினமும் வேத பாராயணம் செய்யப்படுகிறது. தை மாதம் முடியும் வரை பாராயணம் தொடரும்.

● புனித க்ஷேத்திரமாகிய குடந்தையில் நடுநாயகமாக எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ ஆதிகும்பேசுவரர் ஸமேத மந்திர பீடேச்வரி—மங்களாம்பிகைக்கு 8—1—62 முதல் 5—2—62 வரையில் பிரதி தினமும் வேதியர்களைக் கொண்டு சாந்திபூர்வமாக மஹந்யாச அதிருத்ர பாராயணங்களும் சிவ, லலிதா ஸகஸ்ரநாம லக்ஷார்ச்சனைகளும் நடத்த ஏற்பாடாகியிருக்கிறது.

● ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் ஆக்ஞைப்படி 5—1—62 முதல் 13—1—62 முடிய ஒன்பது தினங்கள் நவக்ரஹ மஹா மகம் மயிலாப்பூர் ஸ்ரீ சங்கராலயத்தில் நடத்தப்பட்டது. 17—1—62 புதன்கிழமை ஸ்ரீ மகாகணபதி ஹோமமும் மஹாருத்ர கலச ஸ்தாபனமும் 18—1—62 முதல் 27—1—62 முடிய பத்து தினங்கள் ஸ்ரீ மஹா ருத்ரமும் லக்ஷார்ச்சனையும் 28—1—62 வஸோர்த்தாரா ஹோமமும் பூர்ணாஹுதியும் நடைபெறும்.

● கும்பகோண நவக்கிரக மகாயக்ஞ கமிட்டியின் ஆதரவில் தை மீ 8உ முதல் ஒன்பது தினங்களில் ஒன்பது லக்ஷம் நவக்ரஹ ஹோமத்தை அக்நிஹோத்ரம் ஸ்ரீராமாநுஜதாதாசார் தலைமையில் ஐம்பது ஸ்ரீ வைஷ்ணவ வேத விற்பன்னர்கள் செய்கிறார்கள்.

● இந்த வைபவங்கள் யாவற்றிலும் கலந்துகொள்ளுமாறு பொது மக்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

அரைமணி நேரம் திருப்பித் திருப்பி அந்தப் பல்லவியைத் தான் பாடினாள் அந்த அம்மாள். பெண் சௌகர்யமாக வாழ வேண்டும் என்ற ஒரு லட்சியம் மட்டும் அந்தக் கிராமியப் பேச்சில் குழப்பத்துக் கிடமில்லாமல் நீர்ந்து கிடந்தது. சௌகர்யம் என்றால் நாலு பேர் பார்த்துக் கொடுத்துவைத்தவள் என்று பேசிக் கொள்ளுகிற அந்தஸ்து. ஊரிலுள்ள, இங்கே உள்ள தன் சுற்றம் தான் அந்த நாலு பேர் என்பதும் அந்தப் பேச்சில் தெளிவாகப் புரிந்தது. உதட்டைக் கோணி, தோளில் கன்னத்தை இடித்துக் கொண்டு புன்னகையால் தூற்றுகிற அவர்களைப் பார்த்து . ஒரு காரிலோ, பெரிய வீட்டின் வாசல் தாழ்வாரத்து ஊஞ்சலிலோ உட்கார்ந்து சிரிக்க வேண்டும். அந்தக் கார் அல்லது ஊஞ்சல் ரங்கனின் காராக, ஊஞ்சலாக-வாய்த்து விட்டால்...! வாய்த்து விடும். தனக்கும் தெரியாமல், பிறர் சொல்றதையும் கேட்காத இந்தப் பெண் என்ன செய்யப் போகிறதோ!... .தாய்மையின் அந்தப் பாசத்தில், குழந்தைகள் வளர்ந்து ஆளாகும்போது எழுகிற பிரச்னை பிடிப்புத் தளர்வு இரண்டும் சேர்ந்து வேதனையையும் கோபத்தையும் அனுஸ்வரங்களாக எழுப்பிக் கொண்டிருந்தன. தன் உடல் பலவீனத்தையும் இதோடு சேர்த்து அனுதாபத்தை வேண்டினாள் அந்த அம்மாள்.



# அன்பே ஆரமுதே

தி. ஜானகிராமன்

முழுவதையும் கேட்டார் அனந்தசாமி. டொக்கி வந்து ஏதாவது சொல்லி விடப் போகிறானே என்று சந்தேகப்பட்டுக் கொண்டே அவன் திரும்புவதற்கு முன்னால் கிளம்ப வேண்டும் என்று பேச்சை வளர்த்தாமல் அந்த அம்மாளிடம் விடை பெற்றுக் கொண்டார்.

இரவு சாப்பிடும் பொழுது, ருக்மிணி அனந்தசாமியிடம் கேட்டாள், "ரங்கனைப் பார்க்க முடிந்ததா?" என்று.

"இல்லையே. அவன் வீட்டில் இல்லை. டொக்கியைப் பார்க்கப் போனேன். அவனும் இல்லை. நீங்கள் வந்து விட்டுப் போனதாக அந்த அம்மாள் சொன்னாள்" என்றார் அனந்தசாமி.

"ஆமாம். இரண்டு நாட்களாகவே காலேஜிலிருந்து வரும்பொழுது டொக்கியின் வீட்டுக்குப் போய் வருகிறேன். சில விஷயங்களைத் தெளிந்து கொள்ளலாம் என்று போனேன். நான் மாட்டிக் கொண்டு விழிக்கிறேன்."

"என்னைப் போலவா?"

"நீங்கள் குழம்புகிறீர்கள் என்று எனக்குத் தெரியாது. ரங்கனை இவள் ஏன் கலியாணம் செய்து கொள்ள மறுக்கிறாள் என்று கண்டுபிடிக்கிற நப்பாசை. அதைத் தெரிந்து கொண்டால், சந்திராவுக்கு ஏதாவது வழி கிடைக்குமா என்று குயுக்தி செய்து கொண்டு போனேன். இருவருமாகக் கபாலி கோயிலுக்குப் போனோம். பீச்சுக்குப் போனோம். அந்தப் பெண்ணோடு பழகும்போது, வீதியில் நடக்கும்பொழுது, நான்தான் அதற்கு அம்மா என்று தோன்றியது. தெருவில் போகிறவர்கள் பார்க்கிற பார்வை அப்படி இருந்தது. எனக்குப் பெருமையாகக் கூட இருந்தது. அப்படித்தானிருக்கட்டுமே என்று நினைத்துக் கொண்டேன். கடைசியில் பெற்ற தாயார் படுகிற அத்தனை கஷ்டங்களையும் பட்டு விட்டேன்...."

"என்ன?"

"பீச்சில் உட்கார்ந்து கொண்டு அத்தனையும் சொல்லி அழுது விட்டது அந்தப் பெண்."

"எதை. ..?"

"உங்களிடம் ஏதோ சொன்னாளாமே. அப்பாவிடம் சொல்ல முடியாமல் கடுதாசில் எழுதினாளாம். அதைத்தான் கேட்டேன். சொல்லி அழுதது என்று சொன்னேன்? அப்படி அழவில்லை.. நிறைய அழுது, கேவல் ஓய்ந்து நிதானமாகச் சொல்லிற்று. அந்த நிதானத்தைப் பார்த்தால்தான் எனக்கே பயமாயிருந்தது."

''ஏன்?''

''அது கலியாணமே செய்து கொள்ளப் போவதில்லையாம். சினிமா, நாட்டியம் இந்த ஆசையெல்லாம் விட்டுவிட்டுப் படிக்கப் போகிறதாம். 'நீங்கள் எனக்குச் சொல்லிக் கொடுங்கள்' என்று என்னைக் கேட்டது. அழாத குறையாகக் கேட்டது. பார்க்கலாம் என்று சொல்லியிருக்கிறேன். அதுவும் என்னைப் போல வாத்தியாராகத்தான் ஆகும்போலிருக்கிறது.''

''உங்களைப் போலவா? போலவேயா?''

''போலவேதான்!''

அனந்தசாமி வாய் திறவாமல் சிரித்தார். மேலே பேசவில்லை. ருக்மிணி கீழே இறங்கிப் போனாள்.



எத்தனை சன்யாசிகள்! முறிவுக்கும் துறவுக்கும் ஏன் இவ்வளவு பிணைப்பு என்று நினைக்க நினைக்க அவருக்குச் சிந்தனை தடைப்பட்டு, ஒடிந்து விழுந்தாற் போல் நின்று விட்டது. அறிவில் பிறவாத துறவு, நிராசையிலும் தோல்வியிலும் கோபத்திலும் துயரத்திலும் பிறந்த துறவு, ஆனந்தத்தில் பிறவாத துறவு. இந்த உலகத்தில் எவ்வளவு பெரிய கோட்டையும் முள் வழிகளையும் சமைக்கும், சமைத்திருக்கிறது என்று நினைத்த பொழுது அவருக்குத் தம்மைப் பற்றிக் கூடச் சந்தேகம் வந்துவிட்டது. பழைய வேதனை மீண்டும் திரும்பிற்று. ஒருநாள் அனுபவித்தார். இரண்டாம் நாளும் அனுபவித்தார். நோயாளிகளைப் பார்க்கையிலும் அதைச் சுமந்து சென்றார். ரங்கனைப் பார்க்கப் போகும்போதும் அதைச் சுமந்து சென்றார்.

அந்த ரங்கனை மறுபடியும் பார்க்க முடியவில்லை. எங்கோ வியாபார விஷயமாக அவன் வெளியூர் போயிருக்கிறானாம்.

மூன்றாவது நாள் அவனே அங்கே வந்து நின்றான்.

ருக்மிணி சாதத்தை அவர் முன் வைத்து விட்டுச் சுவரில் சாய்ந்தவாறே நின்று கொண்டிருந்தாள்.

நிலையண்டை வந்து நின்றவன் ருக்மிணியையும் பார்த்ததும் சற்றுப் பின் வாங்கினான்.

''அடெடே! வாருங்கள், வாருங்கள். உங்கள் வீட்டுக்கு எத்தனை தடவை அலைகிறது!... இப்படி வாருங்கள்!''

''பரவாயில்லை. சாப்பிட்டு விட்டு வாருங்கள்'' என்று நடு அறையில் நின்றவாறே சொன்னான் ரங்கன்.

''நான் போய் விட்டு வருகிறேன்'' என்று கூறி நகர்ந்தாள் ருக்மிணி.

''உங்களுக்கு அவரைத் தெரியுமே. அன்றொரு நாள் அறிமுகப்படுத்தி வைத்தேனே?...ரங்கன், இப்படி வாருங்கள்'' என்று அவனை வரச் சொல்லி ''அன்று நீங்கள் பார்த்தீர்களே, மிஸ் ருக்மிணி இவர். டில்லியில் புரொபஸராயிருந்து இப்போது இந்த ஊரிலேயே லெக்சரராக வந்து விட்டார்!'' என்றார்.

''ஆமாம். ஞாபகம் வருகிறது. ஏன் பேராசிரியரிலிருந்து ஆசிரியராக இறங்கி விட்டீர்கள்?' என்று ஒரு வறட்டுச் சிரிப்புடன் கேட்டான் ரங்கன்.

''எப்போதுமே பெரியவர்களாக இருக்க முடிவதில்லையே?'' என்று சிரித்துக் கொண்டே சொல்லி, அவனை உட்காருமாறு கூறி விட்டுக் கீழே இறங்கிச் சென்றாள் ருக்மிணி.

''உங்களைப் பார்க்கவே முடியவில்லையே!'' என்றார் அனந்தசாமி.

''வேலை. அவ்வளவுதான்.''

''நீங்கள் அன்று வந்தீர்களாமே. ருக்மிணி சொன்னார்.''

''ஆமாம். இரண்டு பேரும் ஒரே காரியத்துக்குப் போனாலும் வெவ்வேறு வழியில் போய் விடுகிறோம். சந்திக்க முடியவில்லை.''

ரங்கனின் முகத்தில் அவருடன் பழகும் வழக்கமான மலர்ச்சி இல்லை. உற்றுப் பார்த்தால் முகத்தின் கடுகடுப்பைக் கூடச் சிரமப்பட்டு மறைத்துக் கொள்வது போலிருந்தது.

''நீங்களுமா என்னைப் பார்க்க வேண்டும் என்று நினைத்தீர்கள்?''

''ஆமாம்'' என்றான் ரங்கன்.

''சாதாரணமாகத்தானே?''

''இல்லை. முக்கியமான காரியம். டொக்கி விஷயம். அவருக்கு நல்ல உபதேசங்களெல்லாம் நீங்கள் செய்து வருகிறீர் போல் தோன்றுகிறது.''

''உபதேசமா! நான் ஒன்றும் சொல்லவில்லையே.''

''இல்லாவிட்டால் அவள் இப்படி மாற மாட்டாளே!''

''என்ன மாறியிருக்கிறாள்?''

''உங்களிடம் முன்பே சொல்லியிருக்கிறேன் நான் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன் என்று. முன்னால் சாதாரணமாகப் பழகினவள் இப்போது திடீரென்று மாறி விட்டாள். வரவேற்பது கூட ஒரு தினுசாக இருக்கிறது.''

''உங்களைக் கலியாணம் செய்து கொள்ளப் போவதாக அவள் சொன்னாளா....?''

''சம்மதித்தாள்.''

''சம்மதம் என்று சொன்னாளா?''

''அந்தமாதிரி நடந்துகொண்டாள்.''

''மாதிரி என்று நாம் புரிந்து கொள்வது சரியில்லை என்று நினைக்கிறேன். பெண் பிள்ளைகள் வாய் திறவாமல் இருந்தால் அதைச் சம்மதம், சம்மதம் இல்லை – என்று இரண்டு தினுசாகவும் முடிவு கட்ட முடியாது.''

''பெண்களோடு உங்களுக்கு ரொம்ப அனுபவம் இருக்கும் போல் தெரிகிறது....''

அனந்தசாமி நிமிர்ந்து அவனைப் பார்த்தார். ''வைத்தியம் பார்க்கிற இடத்தில் எத்தனையோ பேருடன் பழக வேண்டியிருக்கிறது. நாம் விரும்பாவிட்டாலும் அனுபவம் நம்மைத் தேடிக் கொண்டு வந்து விடுகிறது... ம் ..... டொக்கி இதைப் பற்றி விவரமாகச் சொன்னாள் என்னிடம். அவளுக்கு விருப்பமில்லை என்றுதான் நான் தெரிந்து கொண்டேன்.''

''தெரிந்து கொள்ளவில்லை. நீங்கள் அப்படிச் செய்தீர்கள்.''

''அப்படியா! சரியாக இல்லையே நீங்கள் சொல்கிறது. நான் எதற்காக அப்படிச் செய்ய வேண்டும்?''

''எனக்கு எப்படித் தெரியும்?''

''நான் செய்ததாக மட்டும் சொல்கிறீர்கள். நீங்கள் முதல் முதல் உங்கள் வீட்டில் சொன்னீர்களே, டொக்கியைக் கலியாணம் செய்து கொள்ளப் போகிறேன் என்று. அப்போது சும்மா வேடிக்கையாகப் பேசுகிறீர்கள் என்றுதான் நினைத்து விட்டேன். பிறகு ஏதோ காப்பாற்றப் போகிற ஆர்வத்தைத்தான் தவறாகப் புரிந்து கொண்டு அப்படிச் சொல்கிறீர்கள் என்று நினைத்தேன். டொக்கி வந்து சொன்ன பிறகுதான் சிறிது நம்பிக்கை வந்தது. பிறகு சுப்புசாமியும் வந்து ஏமாற்றமாகச் சொன்னார்.''

அதைக் கேட்டதும் ரங்கனின் முகம் சிணுங்கிற்று.

''சுப்புசாமியும் என்மாதிரி பல தடவை உங்களைத் தேடிப் பலிக்காமல் கடைசியில் வந்து பிடித்தாராமே?''

ரங்கன் தலையாட்டினான். ''ஆமாம். பிடித்தார். கழுத்தைத்தான் பிடிக்கவில்லை. ஆனால் பிடிக்காத குறையாகக் கருவிக் கொண்டுதான் போனார். இவர் பெரிய மனிதராகவோ, பெரிய மனிதர்களின் நண்பராகவோ இருக்கலாம். அதற்காக நான் பயப்பட வேண்டும், என்னையே ஒடித்துக் கொள்ள வேண்டும் என்பது அர்த்தமில்லையே?'' என்றான் அவன். கண்களில் சீற்றம் வீசிற்று.

''அவரிடம் பயப்படுவானேன் நீங்கள்? உங்கள் அந்தராத்மாதான் உங்களுக்குப் பெரிது. நீங்களே ஒரு தடவை இதைச் சொல்லியிருக்கிறீர்களே!''

''ஆமாம்.''

''அந்த அந்தராத்மா சந்திராவை மறந்து விட்டது. இல்லையா?''

''ஆமாம். மறந்து விட்டது.''

''உங்களால் எப்படி மறக்க முடிகிறது? அவள் மறக்கவில்லையே. ஒரேயடியாகச் சோகம் பிடித்து உட்கார்ந்திருக்கிறாளே. மறக்கக் கூடிய அளவுக்குப் பழகினதாக அவள் இருக்கும் நிலையைப் பார்த்தால் தெரியவில்லையே?''

''அவளுக்குக் கற்பனை அதிகமாயிருக்கலாம். அதாவது துளியிருந்தால் பெரிதுபண்ணிக் கொண்டு அலட்டிக் கொள்ளும் நெஞ்சாக இருக்கலாம்.''

''அப்படி அலட்டிக் கொள்ளத் தூண்டியது நீங்கள் என்பது உங்களுக்குப் புலப்படவில்லையா?'' என்று கெஞ்சினார் அனந்தசாமி.



''அண்ணாச்சி!.... நிசமாத்தான் சொல்றேன்; இந்த 'எலக்ஷன்'லே நம்ம ஆளு ஜெயிக்கல்லேன்னா என் நம்பரு 108 இல்லே!''

''நான் இல்லை! நான் இல்லை!'' என்று வெடுப்பாக, சற்றுக் குரலை உயர்த்தினான் ரங்கன். ''நான் காரணம் இல்லை. என் மனசு அங்கே இல்லை என்று தெரிந்ததும் நான் அவளைப் பார்ப்பதையோ அங்கு போவதையோ நிறுத்திக் கொண்டு விட்டேன். சாமியாராக உலகத்துக்கு நடந்து கொண்டு, யார் கண்ணிலும் மண்ணைத் தூவவில்லை; ஊராருக்காகக் காவி வேஷ்டி கட்டிக் கொள்ளவும் இல்லை. உள்ளே கலியாணம் இல்லாத கிரகஸ்தாசிரமம் நடத்தவுமில்லை. உடல் நாற்றம் வீசுகிறவர்கள் வாசனை பூசி மறைக்கிறமாதிரி நாலு முழக் காவியால், கரி கல்மஷங்களை யெல்லாம் மறைக்கவுமில்லை நான்'' என்று கத்தினான் அவன். குரல் உயர்ந்து நின்றது. கோபத்தில் உதடும் முகச் சதைகளும் இழுத்துக் கொண்டன. கன்னமும் கண்ணும் பளபளத்தன. இரைப்பது போல் மார்பு படபடவென்று ஏறி இறங்கிக்கொண்டிருந்தது.

''என்ன சொல்கிறீர்கள் நீங்கள்?''

''எனக்குத் தெரியும். தெரிந்ததைத் தான் சொல்கிறேன். நான் மறைவாக எதையும் செய்யவில்லை. வேஷம் போடவில்லை. நிஜ சன்யாசிகளுக்கு இத்தனை குரூரத்தனம் வராது. ஒரு மனிதனை இப்படி முறித்துப் போடும் ஆத்திரம் வராது. உங்கள் சுப்புசாமிக்காக, உங்கள் நாகம்மாளுக்காக, என் முகத்தில் கரியைப் பூசி, முட்டாளாக்க

கங்கணம் கட்டிக் கொண்டீர்கள். இவன் மனசிலும் விஷத்தைப் போட்டு, இவன் அப்பா மனத்திலும் விஷத்தைப் பாய்ச்சி யிருக்கிறீர்கள். இவ்வளது பெரிய பாம்பு வேஷம் என்றால் போட முடியாதுதான். ஆனால் நான் சொல்கிறேன். என்னை அவ்வளவு இலேசாகச் சக்கையாக்கித் தூக்கி எறிந்து விட முடியாது. நீங்கள் எவ்வளவுக் கெவ்வளவு எனக்குக் கெடுதல் செய்கிறீர்களோ, அத்தனைக் கத்தனை எனக்கு மனோபலம் பெருகிக் கொண்டே வரும். நீங்கள் இன்னும் பத்து டொக்கிகளைப் போய்க் கலைக்கலாம். அவர்களுடைய வாழ்க்கையை உருப்படாமல் அடிக்கிற உபதேசங்கள் எல்லாம் செய்யலாம். ஆனால் அது ரொம்ப நாட்கள் நடக்காது. ஒன்று நான் நடக்க விட மாட்டேன். உலகத்துக்கும் தெரிந்து விடும். மூலாம் பூசின சன்யாசம் ஒரு நாளைக்குக் கறுத்துப் பல்லை இளிக்கும்; ஊர் சிரிக்கும். இது சற்று முன்னாலேயே நடக்கும்படியாக நான் வேண்டியதைச் செய்வேன். தெரியுமா, ஜாக்கிரதையாக இருங்கள்.''

ரங்கன் பயமுறுத்தினான். கண்ணில் அசாத்தியமான வெறுப்பு கத்தியைப் போல் கறுப்பாகப் பளபளத்தது. மேலே பேச ஆரம்பித்த ரங்கன் சட்டென்று நிறுத்தினான். நிலையண்டை ருக்மிணி வந்து நின்றதைப் பார்த்ததும், புரையேறினாற்போல் பேச்சு தடைப்பட்டது.

வெறித்துப் பார்த்தான் அவன். அவள் பார்வையைத் தாங்கமுடியாமல் அப்பால் திரும்பினான். இரைப்பும் படபடப்பும் இன்னும் அடங்கவில்லை.

''இன்னும் ஏதாவது பாக்கியிருக்கிறதா?'' என்று அரை நிமிஷத்துக்குப் பிறகுதான் கேட்டாள் அவள்.

பதில் இல்லை.

''உங்களைத்தான் கேட்கிறேன்'' என்றதும் ரங்கன் திரும்பினான். ஆனால் ஒன்றும் சொல்லாமல், கண் கொட்டாமல் பார்த்தான், விழித்தான்.

''நீங்கள் சொல்வதைச் சொல்லி முடித்தாகி விட்டது என்று நினைக்கிறேன். இனி மேல் அவர் சாப்பிடலாம் இல்லையா?''

''நான் யாருக்கும் எதற்கும் குறுக்கே நிற்க விரும்பவில்லை'' என்று நகர்ந்து நிலையண்டை வந்தான் ரங்கன். ருக்மிணி விலகுவதற்காக நின்றாள்.

''சந்திரா, டொக்கி — யாராவது ஒருத்தி இங்கே இருந்திருந்தால்? நல்ல வேளையாக இல்லை.''

''ஏன், உண்மையாகத் தெரிந்து கொண்டிருப்பார்கள் என்று பயப்படுகிறீர்களா?''

''ஆமாம். படித்தவர்களும் கண்ணில்லாமல் கஷ்டப்படுவதைத் தெரிந்து கொண்டிருப்பார்கள்.''

அவளை ஏறிட்டு ஒருதடவை பார்த்தான் ரங்கன். வெளியேறுவதற்காக அடி வைத்தான். ருக்மிணி விலகி நின்றாள். விலகும் பொழுது சொன்னாள். ''இவ்வளவு பேசிவிட்டு அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளாமல் போகிறீர்களே!''...

''மன்னிப்பா? மன்னிக்கிறதற்குத் தெய்வத் தன்மை வேண்டுமே... ம்'' என்று ஒரு சிரிப்பையும் தெறித்தான். ருக்மிணியை உச்சந் தலைமுதல் கால் வரையில் ஒரு தடவை பார்த்தான். ஒவ்வோர் அங்கத்துக்கும் அந்தச் சிரிப்பை ஒவ்வொரு பொறியாகத் தெறிப்பது போல் ஒரு பார்வை. ருக்மிணி கூட அதைத் தாங்க முடியாமல் குறுகினாள். அவள் நிமிர்வதற்கு முன்னால் பூட்ஸ் சத்தம் மாடிப் படியில் இறங்கிப் போயிற்று.

சிறிது நேரம் கால் ஒட்டிக் கொண்டாற் போல அங்கேயே நின்றாள் அவள். அவளுடைய புத்திகூட அதிர்ந்து சிறிது நேரம் செயலற்றுக் கிடந்தது. திரும்பிப் பார்த்தபொழுது அனந்தசாமி சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

''அன்று இந்த - மாதிரி ஏதோ ஒன்றை நினைத்துத்தானே நீங்கள் பயப்பட்டீர்கள்?'' என்றாள் அவள்.

''நடந்த பிறகு இனிமேல் என்ன பயம்? இந்த மாதிரி. யாரோ சொல்லப் போகிறார்கள் என்று நினைத்ததுண்டு. இந்த உலகத்தில் எது நடந்தாலும் அதைப் பற்றி இரண்டு விதமாகச் சேதி பரவும். இருக்கிறபடி ஒன்று போகும். எப்படி இருக்க வேண்டும் என்று உலகம் விரும்புகிறதோ, அந்த விருப்பம் எல்லாம் வதந்தி என்ற பேரில் தனியாக உலவிக் கொண்டிருக்கும். ஆனால் ரங்கன் வாயிலிருந்து இது வரும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனாலும் ரங்கனுக்குத் தெரிந்த வரையில் நல்லதாகப் போயிற்று. ஊரில் ஒருவர் தெரிந்து கொண்டால் என்ன? பலர் தெரிந்து கொண்டால் என்ன? தெரிந்து கொண்ட வரையில் எனக்கு சந்தோஷம் தான். ஆனால் தவறாக....சரி, பாதகமில்லை. சரியாகப் புரிந்து கொள்ளுவதற்கு இரண்டு பேர் கிடைத்து விட்டார்கள். தவறாகப் புரிந்து கொள்ளவும் முதலிலேயே முடியும் என்பதற்கும் ஓர் அத்தாட்சி கிடைத்து விட்டது.''

ருக்மிணி அவர் சாப்பிட்ட பிறகு பாத்திரங்களைக் கீழே எடுத்துப் போனாள். ரங்கன் சொன்னதையெல்லா

வற்றையும் விட, அவன் பார்த்த பார்வை, அங்கம் அங்கமாகப் பார்த்த பார்வை துன்புறுத்திக் கொண்டிருந்தது. அவளையும் மீறிக் கொண்டு முகத்தை இலேசாக வதக்கிற்று அது.

அவயாம்பாள் அவள் கீழே வருவதற்காகக் காத்திருப்பது போலிருந்தது. ருக்மிணியின் முகத்தை வியப்புடன் உற்றுப் பார்த்தாள்.

''என்னடி சத்தம் மாடியிலே? யாரோ வந்து விட்டுப் போறானே. எதுக்காக இரைச்சல் போட்டான்? மளமளவென்று ஸ்கூட்டரில் இறங்கிப் போறான் பொட்டைச் சாரை மாதிரி!''

பொட்டைச் சாரை! என்ன சரியான வார்த்தை! மனிதர்களுக்குக் கண்ணும் தெரிவதில்லை. கோபம் வேறு சாரை மாதிரி வருகிறது.

''யாருடி அவன்?''

''சொல்கிறேன்'' என்று பாத்திரங்களை உள்ளே கொண்டு வைத்துச் சாப்பிட்டாள் ருக்மிணி. சாப்பிடும் போது ரங்கன், டொக்கி, சந்திரா — எல்லாக் கதைகளையும் சொல்லி விட்டாள்.

''இவர்தான் டொக்கியைக் கலைத்து விட்டார் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாள் அவள்?''

''ஆமாம். டொக்கிதான் துரதிருஷ்டக்காரி என்று நினைத்தேன். அவள் அழகாக இருப்பது, பிரியம் வைக்கிற அபார சக்தி, அந்தப் பிரியத்தைக் காட்டத் தெரியாமல் சுற்றிச் சுற்றி வளவளவென்று பேசுவது, அவளுடைய துணிச்சல் — இதெல்லாம் ரொம்பப் பேருக்குப் பிடிக்காது. வளவள வென்று பேசுகிறாளே தவிர, அவளுடைய வீம்புக்கும் உரத்துக்கும் எல்லையே இராது என்று தோன்றுகிறது. அவனை உதறி எறிவது அவளாகச் செய்து கொண்ட தீர்மானம். அவனுக்கு அது தெரியவில்லை. சந்திரா என்று ஒருத்தி இருப்பதைக் காட்டி விட்டார் இவர். அந்த ஆற்றாமைதான் இப்படிக் கத்தி விட்டுப் போகிறது. தப்பு செய்கிறோமே என்று யாருக்கு உணர்க்கை வரப் போகிறது? எட்டிப் பார்த்தானே, அவனைத்தான் வெட்டிப் போட வேண்டும் போலிருக்கும்....'' என்றாள் ருக்மிணி.

''அதுக்காக இந்தப் பாவி உன்னையும் இவரையும் எதுக்காகக் கட்டி இழுக்கிறான்!'' என்றாள் அவயாம்பாள்.

''என்ன செய்கிறது! இதற்கெல்லாம் துணிந்துதானே இங்கு வந்தது!''

''இவனுக்கு எப்படி தெரியும், உன் கதையெல்லாம்?''

''எப்படித் தெரிந்தால் என்ன?''

அந்தக் கேள்விதான் மூன்று மணி கமாருக்கு ருக்மிணியை வீட்டில் இருப்புக் கொள்ளாமல் வெளியே விரட்டியது.

டொக்கியின் வீட்டுக்குள் நுழையும் பொழுது, எங்கோ வெளியே கிளம்புவதற்காகச் செருப்பை டப்பென்று கீழே போட்டுக் கொண்டிருந்தாள் டொக்கி. ருக்மிணியைப் பார்த்ததும் 'அடேடே!' என்று ஓடி வந்தாள்.

''எங்கே கிளம்புகிறாற் போல்....?''

''டீ இலை இல்லை. கடைக்குக் கிளம்பினேன். வெயில் விறைகப் போகிறதோ இல்லையோ? அதற்காகத் தம்பி கிரிக்கெட் ஆடப் போயிருக்கிறான்....''

''வாருங்கள்'' என்று டொக்கியின் தாயார் வெளியே வந்தாள்.

''அம்மா! டீ இலையை நீதான் போய் வாங்கி வந்து விடேன்.''

''சரி .... உட்காருங்கள். இதோ வந்து விடுகிறேன். சரி ஏன்டி, அப்படியே ஸ்டோருக்குப் போய்ப் பாக்கி சாமானையும் வாங்கி வந்து விடுகிறேனே. அந்த ஜாபிதாவைக் கொடேன், மத்தியானம் எழுதி வைத்ததை.''

போகும் பொழுது, ''நான் வரும் வரை இருக்க வேண்டும். நீங்கள் பாட்டுக்குப் புறப்பட்டு விடக்கூடாது'' என்று வேண்டிக்கொண்டே போனாள் அம்மாள்.

''என்ன மாமி, திடீரென்று இப்படி வந்தீர்கள்?''

''நீ செய்கிற காரியமெல்லாம் அப்படித்தானே இருக்கிறது'' என்று கட்டிலில் உட்கார்ந்து கொண்டாள் ருக்மிணி.

''என்ன மாமி இது? வரும்போதே கல்லைத் தூக்கிப் போடுகிறீர்கள்?''

''ரங்கன் இன்று வந்தாரா இங்கே?''

''காலையிலே வந்தார்.''

''நீ ஏதாவது சொன்னாயா?''

''இந்தப் பேச்சை எடுத்தால் இனிமேல் இங்கே வர வேண்டாம் என்று நாசூக்காகச் சொன்னேன். ஊருக்குப் போய் நேற்று அப்பாவிடம் போய்க் கேட்டு விட்டு வந்தாராம். எல்லாம் அவள் இஷ்டம் என்று சொன்னாராம், அப்பா. 'அவளுக்கு இஷ்டம் தான்.. நீங்கள்தான் சொல்ல வேண்டும்' என்றாராம் இவர். அதைக் கேட்டதும் எனக்குப் பிரமாதக் கோபம் வந்து விட்டது. 'பச்சையாக இப்படிப் பொய் சொல்கிறீர்களே! வெட்கம், மரியாதை ஏதாவது இருக்கிறதா உங்களுக்கு?' என்று கேட்டு விட்டேன்.

''அப்பா ரொம்ப சாது. எதையும் நம்பி விடுவார். இவருக்கு அது தெரியும். தெரிந்தும் அவரிடம் இப்படிச் சொன்னால் எனக்கு எப்படியிருக்கும்?''

''ஊருக்குப் போய் விட்டு வந்தாரா? ...ம்... வெட்கமா யில்லையா என்று கேட்டாய். அப்புறம்?''

''ஏன் இஷ்டமில்லை என்று கேட்டார். இஷ்டமில்லாததற்குக் காரணம் கேட்க முடியுமோ என்று சொல்லிப் பார்த்தேன். கேட்கவில்லை. கடைசியில் சந்திராதான் காரணம் என்று சொன்னேன். அவருக்குக் கொஞ்சம் தூக்கி வாரிப் போட்டது. இத்தனை நாட்களாக எனக்குத் தெரிந்திருப்பதைக் காட்டிக் கொள்ளாமல் இருந்தேன். இந்தப் பொய்க்குப் பிறகு எனக்கு வாயைக் காட்ட முடியவில்லை. 'சந்திராவோடு அப்படியெல்லாம் நான் பழகவில்லையே?' என்று மறுபடியும் புளுகினார். யார் இந்த மூட்டையெல்லாம் கட்டி விட்டார்கள் என்றார். சாமியாருக்குப் புளுகத் தெரியாது என்று சொன்னேன். 'புளுகத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் தவறாகப் புரிந்து கொள்ளலாமே' என்று மழுப்பினார். அந்த க்ஷணத்திலிருந்து அவ்வளவு கோபமும் மாமாவின் பேரில் திரும்பி விட்டது. 'இந்தச் சாமியார்களுக்கும் வேறு வேலையே கிடையாது. எவன் எப்படிப் போனால் என்ன என்று பேசாமலும் இருக்க மாட்டேன்கிறான்கள். வைராக்கியம் வைராக்கியம் என்று ஊர் வம்பெல்லாம் தலையிடுகிறான்கள். காட்டிலே இருக்கிற பயல்கள் வீட்டுக்கு வந்து வாழ்ந்தால், யாரை வாழச் செய்யப் போகிறார்கள்?' என்று கத்தினார். எனக்குக் கோபம் வருவதற்குப் பதிலாகத் தொண்டையை அடைத்தது. 'அந்த மகானை அப்படிச் சொல்லாதீர்கள். நாக்கு அழுகிப் போய் விடும்' என்று கெஞ்சினேன். 'அவர் சாதாரணப் பெரியவர் இல்லை. எதற்கும் ஈடு கொடுக்கிறவர். ரொம்பக் கருணை உள்ளம் அவருக்கு., கலியாணம் பண்ணிக் கொள்ளாமல் ஏமாற்றிய பெண் கேட்டுக் கொண்டாள் என்பதற்காக இப்போது அங்கேயே குடி போய் விட்டார்' என்று சொன்னேன். அவருக்கு ஒன்றும் புரியவில்லை. என்ன என்ன என்று அலட்சியமும் பரபரப்புமாகக் கேட்டார். மாமா மாப்பிள்ளையாகாமல் ஓடினதையெல்லாம் சொன்னேன். அப்போது தான் அவருக்குப் புரிந்தது. அப்புறம் வாயடைத்துச் சிறிதுநேரம் உட்கார்ந்திருந்தார். 'நான் இனி மேல் இங்கே வர வேண்டாமா?' என்று கேட்டார். 'இந்தப் பேச்சு பேச மாட்டேன் என்று சொன்னால் வரலாம்' என்றேன். 'இந்தப் பேச்சு பேசாவிட்டால் எனக்கு இங்கு என்ன வேலை' என்றார். 'அப்படியென்றால் வராமலிருக்கலாமே' என்றேன். என்னை அப்படியே ஒரு நிமிஷம் பார்த்தார். எழுந்துகொண்டார். 'சரி வரட்டுமா?' என்றார். 'சரி' என்றேன் ...., ஏன் என்ன நடந்தது?''

''ஒன்றுமில்லை.''

''என்ன நடந்தது. சொல்லுங்களேன். ரங்கன் வந்தாரா அங்கே!''

''வந்தார். அவர் தலையிலும் ஒரு கல்லைத் தூக்கிப் போட்டார். போய் விட்டார்.''

''மாமாவை ஏதாவது சொன்னாரா?''

''மாமா தான் உன் மனசைக் கெடுத்தாராம். என்னென்னமோ கத்தினார்.''

ருக்மிணி முழுவதையும் சொல்லியும் விட்டாள். ''ஏன் இப்படி உன் மனசிலிருக்கிறதையெல்லாம் போட்டு உடைத்துக் கொண்டேயிருக்கிறாய்! உனக்குப் பேசி வாய் வலிக்கவில்லை?'' என்று கேட்டாள் ருக்கு.

பதில் பேசவில்லை டொக்கி. மௌனமாகக் கண்ணீர் விட்டாள்.

''உங்களைப் பார்த்தால் அவ்வளவு பிரமிப்பாக இருந்தது. அம்மாவிடம் உங்கள் கதையைச் சொன்னேன். அவளுக்கு ஒரு ஆச்சரியமும் உண்டாகவில்லை. கோபம்கூட வந்திருக்குமோ என்னவோ. 'சில பேர் அப்படியிருக்கா' என்று மனசிலே படாமல் சொல்லிவிட்டு உள்ளே போய் விட்டாள். என்னால் ரொம்பப் பேருக்குக் கஷ்டம். சந்திராவுக்குக் கஷ்டம். எங்க அம்மாவுக்கு நான் பணம் சம்பாதிக்கவில்லையே என்று கஷ்டம். அப்பாவுக்கு நான் பிறந்தேனே, அதுவே ஒரு பெரிய கஷ்டம்.''

''அம்மா இருந்தாளா நீ இதெல்லாம் சொல்கிற போது?''

''மார்க்கெட்டுக்குப் போயிருந்தவள் பாதிப் பேச்சில் வந்தாள். ரங்கன் போன பிறகு 'என்னடி பேசிக் கொண்டிருந்தீர்கள்?' என்று மடக்கினாள்..: எல்லாவற்றையும் சொன்னேன். 'நீ நாசமாகப் போக' என்று ஆசீர்வாதம் செய்தாள். நாசம் வராது போயிருக்கிறதே எனக்கு?''

''என்ன டொக்கி இது?''

''ஆமாம். என்னால் அனந்தசாமி மாமாவே என்னென்னமோவெல்லாம் கேட்கும்படி வந்து விட்டது.. ஆனால் நிஜமாகச் சொல்கிறேன். உங்களை நினைக்க நினைக்க எனக்கு அவ்வளவு பிரமையாயிருந்தது. யாரிடமாவது சொல்லி சந்தோஷப்பட வேண்டும் போலிருந்தது. சொல்லி விட்டேன். அது இந்தக் கரிநாக்குக்காரன் வாயில் புகுந்து இப்படி விபரீதமாக வரும் என்று நான் நினைக்கவே இல்லை....''

அவளைச் சமாதானப்படுத்த ஐந்து நிமிஷங்களாயிற்று ருக்மிணிக்கு. ஆனால் டொக்கியின் முகம் மலர்ந்து விடவில்லை.

(தொடரும்)

# பிரிட்டானியா

# மாரி

மிருதுவானதும்
இனிப்பானதும்
ருசியானதும்
கரகரப்பானதும்
எல்லோருக்கும் எந்த
நேரத்திலும் மிக
பிடித்தமானதுமான
பிஸ்கோத்துகள்.

MARIE

better biscuits
BRITANNIA
MARIE

## பிரிட்டானியா பிஸ்கட்டுகள்





தி பிரிட்டானியா பிஸ்கட் கம்பெனி லிமிடெட்

# அகத்திக்கீரை

"ஒன்றுமில்லாததற்கெல்லாம் கவலைப் படுவதே உங்களுக்கு வழக்கமாகி விட்டது" என்று என்னை மிகவும் கடிந்து கொண்டாள் என் மனைவி கமலம்.

"மனசிலே ஈவு இரக்கம், பச்சாத் தாபம் இருக்கிறவனெல்லாம் இதுக் குக் கவலைப்படத்தான் படுவான்" என்றேன் நான்.

"அதுக்காக....? கப்பல் கவிழ்ந்து விட்ட மாதிரி கன்னத்திலே கையை வெச்சுண்டு உட்கார்ந்திடறதா? இது இதுக்கு இவ்வளவுதான் கவலைப்படற துன்னு ஒரு அளவு இல்லையா?"

என் நிலையைச் சற்று மிகைப்படுத் தித்தான் சொல்லிவிட்டாள் கமலம். அவள் சொல்லுவது போல் சொந்தக் கப்பலைப் பறி கொடுத்த அளவுக்கு எனக்குக் கவலை இல்லை. என்றாலும் நான் சற்று அதிகமாகவருத் தப்படுகிறேன் என்பது மட்டும் உண்மைதான். கவலைப்படுவ தின் அளவு காரணத்தைப் பொறுத்ததல்ல மனத்தைப் பொறுத்தது தான் என்ற விதிப்படி பார்க் கப் போனால் என் மீது கூடத் தவறு இடையாது.

"அம்மா" என்று வாச லில் மாடு எக் காளமிட்டு அழைத்தது. இச் சத்தத் துக்கு மாட் டின் ஒலி யான அடி வயிறு எக்கி முதுகெலும் பைத் தொட்டிருக்க வேண்டும். எழுந்து வெளியே சென்றேன்.

வழக்கம் போல் ஒற்றை மாட்டு வண்டி வாசலில் அவிழ்த்து விடப்பட்டுக் கிடந்தது.



கூண்டு இல்லாத மொட்டை வண்டிதான்; அரை வண்டி. வண்டிக்கு முன்னால் தரையில் அடிக்கப்பட்டிருந்த மூங்கில் முனையில் மாட்டை ஓட்டக் கட்டியிருந்தான் சிங்காரம். வண்டி நிறையத் திணியத் திணிய அகத்திக் கீரைக் கட்டுகள். பச்சைப் பசேல் என்று மனசையும் கண்ணையும் அகற்றிக் கொண்டு போகும் பசுமை. இள வெயிலுக்குத் துவண்டு போய் இலைகளின் சாம்பல் நிற அடிப்பாகம் தெரிய இடை இடையே தலையைக் காட்டிக் கொண்டு கட்டுக்களின் இளமைத் தளதளப்பு! திலகம் வைத்தது போல் இரண்டொரு கட்டுக் களின் நுனியில் வெள்ளை நிறத்தில் பூக்களும் மொட்டுக்களும்கூட அரும்பி விருந்தன! இந்தப் பசுமைக் குவியலில் ஒரு துளியைக் கூட மாட்டுக்கு அரு கில் காண முடிய வில்லை. கால்களுக்கு அடியில் கிடந்த, தின்று கழிக்கப்பட்ட வைக்கோல் கூளத்தை

முகர்ந்து பார்த்தது மாடு. இடையிடையே தலையைத் திருப்பி வண்டியைப் பார்த்து ஏக்கத்தோடு பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தது. தெருக் கோடியில் சிங்காரம் கைநிறைய அடுக்கிக் கொண்டிருந்த கீரைக் கட்டுக்களை வீடு வீடாகச் சென்று விநியோகித்துக் கொண்டிருந்தான். அவனுடைய தொழிலே இது தான். தினமும் அதிகாலையில் கீரைக்கட்டுக்கள் ஏற்றிய வண்டியை என் வீட்டு வாசலில் கொண்டு வந்து நிறுத்தி விடுவான். அங்கேயே வண்டியை அவிழ்த்து விட்டு விட்டு மாட்டை வண்டிக்கு-வண்டியிலுள்ள கீரைக்கு எட்டாத தூரத்தில் கட்டி விட்டுக் கீரைக்




கட்டுக்களை எடுத்துக்கொண்டு போய் வாடிக்கைக்காரர்களுக்குப் போட்டு விட்டு வருவான். தெருவில் கறவை மாடு வைத்துக் கொண்டிருப்பவர்கள் தான் அவனுக்கு வாடிக்கைக்காரர்கள். மற்றப்படி துவாதசி போன்ற விசேஷ நாட்களாக இருந்தாலோ அல்லது என்றைக்காவது யாருக்காவது தேவையிருந்தாலோதான் சில்லறை வியாபாரம் நடக்கும்.

நான் இரண்டு வகையிலும் சேர்ந்தவனல்ல. என்னிடம் கறவை மாடு கிடையாது. இதர நாட்களில் வாங்காததற்குக் காரணம் எனக்கு அகத்திக் கீரை பிடிக்காது என்பதல்ல. அதைச் சிங்காரத்திடமிருந்து வாங்கப் பிடிக்காதது தான். இரண்டு கட்டுக்கள் வாங்கக் கையில் காசு இருக்கும்போது மட்டும் அவற்றைச் சிங்காரத்திடமே வாங்கி ஒன்றை மாட்டுக்குப் போட்டு விட்டு இன்னொன்றை உள்ளே எடுத்துக் கொண்டு போய்க் கொடுப்பேன்.

இந்த வழக்கத்தை நான் ஆரம்பித்த புதிதில் இரண்டொரு தடவை சிங்காரம் என்னைத் தடுத்திருக்கிறான். என் பிடிவாதத்தைக் கண்டு பிறகு சும்மா இருந்து விட்டான். என் செய்கையை அனுமதித்ததற்குத் தன்னுடைய பெருந்தன்மைதான் காரணம் என்று ஒருவேளை அவன் நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால் மாட்டுக்குக் கீரை வாங்கிப் போடுவதில் என்னுடைய முக்கிய நோக்கம், கழுதை மாதிரிக் காத்து கொண்டு வரும் கீரைக் குவியல்களில் ஓர் அருகைக் கூடத் தின்னக் கொடுத்து வைக்காத அந்த வாயில்லா ஜீவனுக்காக இரங்கும் என் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொள்வது மட்டுமல்ல, அப்படிச் செய்யாத சிங்காரத்தின் முகத்தில் நான் செய்து காட்டுவதன் மூலம் மறைமுகமாகக் கரியைப் பூசுவது கூடத்தான்! இதை அவன் உணர்ந்ததாகவே தெரியவில்லை. நான் வாங்கிப் போடும் கீரையை மாடு தின்று கொண்டிருக்கும்போதெல்லாம் மாட்டைப் பார்த்துக் கொண்டே நிற்பான்!

தினமும் அகத்திக் கீரை சாப்பிட வேண்டும் என்ற ஆசை இருந்தாலும் கூடத் தினமும் இரண்டு கட்டுக்கள் வாங்கும் சக்தி எனக்கு இல்லை. எத்தனையோ தடவை ஓரணா கொடுத்து ஒரு கட்டு வாங்கி, பாதியைப் பிரித்து மாட்டுக்குப் போட்டு விட்டு இன்னொரு பாதியைப் போதும் போதாமலும் சாப்பிட்டிருக்கிறேன். அப்போதெல்லாம் கமலம் என்னை. "கிருஷ்ணார்ப்பணமஸ்து என்பது போல் மாடார்ப்பணமஸ்து என்று பிடிக்குப் பிடி சொல்லிக் கொண்டே அகத்திக்கீரையைச் சாப்பிடுங்கள்: இந்தப் பாதிக் கட்டும் மாட்டுக்கே பிரீதி ஆகட்டும்" என்று செய்யும் கேலிகளுக்கெல்லாம் நான் செவிசாய்ப்பதே இல்லை.

நான் பார்த்துக் கொண்டிருக்கும்போதே சிங்காரம் இரண்டு முறை வண்டிக்கு வந்து கீரைக் கட்டுக்களை அள்ளிக் கொண்டுபோய்க் கொடுத்து விட்டு மூன்றாவது முறை எடுத்துப் போக வண்டியை நோக்கி வந்து கொண்டிருந்தான். வண்டியின் பின்பகுதியில் கிடந்த கட்டுக்களை அவன் பழுத்த இலைகள் உதிர உதறி உதறிக் கையில் அடுக்கிக் கொண்டிருந்த போது நாய் மாதிரித் தலையை உட

வோடு மடக்கி வைத்துக் கொண்டு காலடியில் அறுவயில் படுத்திருந்த மாடு சிலிர்த்து எழுந்து நின்று உடலை விறைத்துச் சோம்பல் முறித்தது. சிங்காரம் சுமையோடு இடத்தை விட்டுப் போய் விட்டான். பாதி பாகம் கீழே தொங்க இன்னும் வண்டியில் பத்துப் பதினைந்து கட்டுக்களே இருந்தன.

நின்ற இடத்திலிருந்தே தலையைத் திருப்பி நிமிர்த்திக் கீரைக் கட்டுக்களைத் தொடப் பார்த்தது மாடு. எட்டவில்லை. நான்கே விரற்கடை இடைவெளிதான். மாட்டின் ஆவலைத் தூண்டக் கீரையின் பசுமை மணம் மாட்டைத் தீண்டியிருக்க வேண்டும். மாடும் விடவில்லை. நாக்கை நீட்டி இடைவெளியைக் கடக்க முயன்றது. பிடிப்புக்கு அகப்படாமல் கீரைக்கட்டு ஒன்றின் கொழுந்து மாட்டின் நாக்கு நுனியில் படுவதும் விலகுவதுமாகத் துடித்துத் தப்பித்துக் கொண்டிருந்தது. 'சிங்காரம்தான் அருகில் இல்லையே, ஒரு கட்டை எடுத்து மாட்டிடம் போட்டு விட்டால் என்ன?' என்ற எண்ணம் ஏனோ என்னுள் செயல்படவில்லை. எனக்கு அதற்கு அவசியமும் இருக்கவில்லை. தலைக் கயிற்றை இழுத்துக் கொண்டு மாடு கீரைக் கட்டைத் தொட முயன்றதில் முளையில் கட்டப்பட்டிருந்த முடிச்சு இறுகிக் கயிற்றின் நீளம் சற்று அதிகரித்தது. மூன்றாவது வீட்டுக்குள்ளிருந்து அந்தக் கணம்தானா சிங்காரமும் வெளியே வர வேண்டும்? கட்டிலிருந்து உருவிக் கொண்டு மாட்டின் வாய்ப் பிடியிலிருந்து தொங்கும் கப்பும் கிளையுமாகக் கிளைத்திருக்கும் பெரிய கீரை அருகைப் பார்த்து விட்டுச் சிங்காரம் விழுந்தடித்துக் கொண்டு ஓடிவந்தான். வந்த வேகத்தில் மாட்டின் முகத்தில் ஓங்கி ஓர் அறை! மாடு முகத்தைத் திருப்பிக் கொண்டுநான்குகால்களையும் இடம்பெயர்த்து வைத்து நகர்ந்து கொண்டது. சிங்காரம் கீழே விழுந்த கீரை அருகை எடுத்து மண் போக உதறிக் கட்டுக்குள் செருகினான். அந்த அறையை அவன் கன்னத்தில் திருப்பிக் கொடுத்து விட்டு வண்டியில் கிடக்கும் கீரைக் கட்டுக்கள் எல்லாவற்றையும் எடுத்து மாட்டிடம் போட்டு விட வேண்டும் என்ற என் மனத்தின் ஆத்திரத்தை அதிகரிப்பது போல் அவன் என்னைப் பார்த்துக் கேட்டான்.

''என்னா, சாமி? மாடு கீரையை இழுக்குது. பார்த்துக்கிட்டு நிக்கிறீங்க? ஓட்டக் கூடாதா......?''

''ஏம்பா, நீ எந்த ஊரிலேயிருந்து வர்றே?'' நான் சம்பந்தா சம்பந்தமில்லாமல் கேட்டதாகச் சிங்காரத்துக்குப் பட்டிருக்க வேண்டும்.

''முருக்கங்குடியிலேயிருந்துங்க.....''

''இங்கேயிருந்து அந்த ஊரு எவ்வளவு தூரம் இருக்கும்?''

''மூணு மைலுங்க.....''

''மூணு மைல் தூரம் வண்டி நிறைய பாரத்தைச் சுமந்துகிட்டு வந்து திரும்பப் பத்து மணி வெயிலிலே 'லொங்கு லொங்'னு குடல் அதிர ஓடுதே, அந்த மாடு ஒரு அருகுக் கீரை தின்னு என்ன, உனக்குக் குறைஞ்சா போயிடும்?'' என்று கேட்கும் பொழுது எனக்கு உடல் முழுதும் பொங்கிக் கொண்டு வந்தது. சிங்காரம் என் பேச்சின் கடுமையை உணர்ந்ததாகவே தெரியவில்லை. அவன் ஒரு மாதிரியாகச் சிரித்து விட்டு, ''நீங்க ஒண்ணு! கீரை இல்லாமதான் இங்கே அழுவுதாக்கும்? அதான் இம்மா வைக்கல் கிடக்குதே. திங்கட்டுமே!'' என்றான்.

''உன் கண்ணாலேயே பாரு, இது வைக்கலா? வரட்டி தட்டக் கூட லாயக்கில்லாத கூளம். இதைப் போய் மாடு திங்குமா?'' என்று வேகத்தோடு கேட்டேன்.

''எல்லாம் அதுக்கு இது போதுங்க'' என்றவனுக்கு அதுவரை என்னிடம் பேசியதே அநாவசியம் என்று பட்டிருக்க வேண்டும். மீதிக் கட்டுக்களையும் ஒரே கையாக அள்ளிக் கொண்டு இடத்தைவிட்டுப் போய் விட்டான். திணியத் திணியக் கட்டுக்கள் நிறைந்து வந்த வண்டியில் இப்போது ஒன்றுகூட இல்லை. மாட்டின் வயிற்றிலும் கூடத்தான்.

மாட்டின் முகத்தில் சிங்காரம் அதற்குக் கீரை போடாத வருத்தம் தெரியவில்லை. நான் அதன் சார்பில் பேசியதால் ஏற்பட வேண்டிய மகிழ்ச்சியும் இல்லை. வேதாந்தி மாதிரி 'தேமே'னென்று ஒரு பக்கமாக நின்று கொண்டிருந்தது. இந்த வேதாந்த மனோபாவத்தை — அப்பாவித்தனத்தை — தனக்குச் சாதகமாக எடுத்துக் கொண்டு கொஞ்சம் கூட ஈவு இரக்கமில்லாமல் அந்த வாயில்லா ஜீவனின் வாயில் மண்ணைப் போடுகிறானே, இந்தச் சிங்காரம்! இந்த அநியாயம் இன்றைக்கு அல்ல; ஒரு வருஷமாகவே நடக்கிறது. தினமும் இன்று போலத்தான் கையாலாகாதவனாக — கையாலாகாதவனாக மட்டுமல்ல— என் கையாலாகாத்தனத்தை உணர்ந்ததால் ஏற்பட்ட வருத்தத்தையும் உடையவனாக வெறுமையாக நிற்கிறேன்.

சிங்காரம் கனத்தால் தொய்ந்துபோயிருந்த வேஷ்டித் தலைப்பில் சேர்ந்திருந்த சில்லறையை எண்ணிக் கொண்டே வந்தான். எல்லாம் மாட்டை வஞ்சித்துச் சேர்த்த காசு. தலைப்பைச் சில்லறையோடு சேர்த்து நன்றாகச் சுருட்டி இடுப்பில் செருகிக்கொண்டு மாட்டை அவிழ்த்துத் தலைக் கயிற்றை அதன் முதுகின் மீது போட்டு விட்டுப் போய் வண்டியின் முன் பகுதியைப் பிடித்துத் தூக்கினான். மாடு தானாகவே போய் வண்டியில் தலையைக் கொடுத்தது. சம்சாரி மாதிரி வலுவில் போய்ப் பந்தத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொள்வதெல்லாம் இந்த மாட்டு ஜன்மங்களுக்குப் பாத்தமாகப் போய் விட்டது. சிங்காரத்துக்குக் கல்மனசு மாதிரி, எனக்குக் கையாலாகத்தனம் மாதிரி மாட்டுக்கும் இது இயற்கை! உடலில் பலம் இருக்கும் அளவுக்கு மனிதர்கள் மாதிரி இந்த மாட்டுக்கும் கொஞ்சம் சிந்திக்கும் சக்தி இருந்து, சுமந்த கூலி கொடுக்காமல் தன்னை வஞ்சிக்கும் சிங்காரத்தின் துரோகத்தையும் உணர்ந்து, கூரான கொம்புகளால் அவன் தொந்தியை ஒரு குத்துக் குத்தினால்...? இந்த மாடும் மனிதனாகி விட்டால் உலகத்தில் சிங்காரம் மாதிரி கல்மனசுக்காரர்களின் எண்ணிக்கையோ அல்லது கையாலாகாதவர்களின் எண்ணிக்கையோ ஒன்று அதிகரிக்காது என்பது என்ன நிச்சயம்? சிங்காரம் வண்டியை ஓட்டிக் கொண்டு போய் விட்டான்!

மாலை பொழுதுபோக்கு நடையாக வெளியில் போயிருந்தேன். மனம் யோசனையில் ஆழ்ந்திருந்ததில் இரண்டு மைல்களுக்கு மேல்

தூரம் பின்னுக்குத் தங்கி விட்டதே, தெரியவில்லை. பாங்கல் கிராமத்தைத் தாண்டி இன்னும் கிழக்கே ஒரு மைல் நடந்த போது கண்ணுக்கெட்டியவரை கொடிக்கால்கள் தென்பட்டன. இதுதான் முருக்கங்குடியாம். முஸ்லிம்கள் பெருத்த ஊராம். எதிரே வந்த ஒருவரை விசாரித்த போது தெரிய வந்தது. கொடிக்கால் பயிருக்கு இரத்தத்தையே பாய்ச்சுவது போல் உழைக்க வேண்டும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த உழைப்பையும் அரசலாற்று நீர்ச் சத்தத்தையும் உறிஞ்சிக் கொண்டு செழித்து வளர்ந்திருக்கும் அகத்திக் கீரைச் செடிகள். முருங்கைக் கன்றுகள் இடையிடையே தனித்து உயர்ந்து நிற்கும் வாழை மரங்கள். வரிசை வரிசையாக மேடுகளில் வளர்ந்திருக்கும் அகத்திக்கீரைச் செடிகளின் மீது வெவ்வேறு மட்டங்களில் குறுக்கே கட்டப்பட்டிருக்கும் கழிகளின் மீது படர்ந்திருக்கும் கொடிகளில் கடுமையாக உழைத்தவன் முகம்மாதிரி நரம்புகள் புடைக்கச் சின்னச் சின்ன வெற்றிலைத் தளிர்கள் வெளிச்சத்தில் பளபளத்தன. ஊரின் பெயரைக் கேட்டதும் சிங்காரத்தின் ஞாபகம்தான் வந்தது எனக்கு. சிங்காரத்துக்கு நிச்சயமாக ஆயுசு நூறுதான். அவனே எதிரே வண்டியை ஓட்டிக் கொண்டு வந்து கொண்டிருந்தான். வெளியூரில் என்னைக் கண்டதும் என்மீது அவனுக்குக் கொஞ்சம் அக்கறை ஏற்பட்டிருக்க வேண்டும். என் அருகில் வண்டியை நிறுத்திவிட்டுக் கீழே இறங்கி, ''இதுதாங்க நம்ப ஊரு'' என்று மகிழ்ச்சியோடு கூறினான்.


இப்படி இருந்தவர்கள்....


...இந்தக் கோலத்துக்குக் காரணம்...



....இவர்களால் தான்....!

''இப்போ எங்கேயிருந்து வாரே?'' என்று கேட்டேன்.

''காலையிலே நம்ப ஊரு பக்கம் கீரை போட வாருப்போல சாயந்திரத்திலே நன்டத் தோட்டம், கோவனூர் அந்தப் பக்கம் போய் வாரது.''

''ஒரு நாளைக்கு எத்தினி ரூபா வரைக்கும் கீரை விக்கும் உனக்கு...?''

''காலையிலே இருநூறு கட்டு. மாலையிலே இருநூறு கட்டு. ஆக நானூறு கட்டுக்கும் சேர்த்து இருபத்தி அஞ்சு ரூவா வரைக்கும் கிடைக்குமுங்க.''

''உன் சொந்தக் கொடிக்காலா?''

''ம்.....நமக்கெல்லாம் ஏதுங்க, கொடிக்கால்லே பாடுபடறதுக்கு உடம்பிலே வலுவும் மனசிலே பொறுமையும்? நான் எடுத்தாந்து விக்கறதோட சரி.''

''நீ கீரை கொண்டு வருகிற கொடிக்கால் யாருடையது?''

''உஸ்மான் ராவுத்தருது. ஆஸ்பத்திரி இருக்குதே அந்தத் தெருவிலே ஒரு மாடி வீடு இருக்குது. அந்த வீட்டுக்காரரது. நான் வாரேங்க. காலையிலே கொண்டுக்கிட்டுப் போறதுக்குக் கீரை ஒடிச்சாகணும்'' என்ற சிங்காரம் மாட்டை வண்டியிலிருந்து அவிழ்த்துக் கட்டி விட்டுப் படலைத் திறந்து கொண்டு கொடிக்காலுக்குள் போய்விட்டான்.

ஒரு நாளைக்கு ஒரு தடவை அல்ல, இரண்டு முறை கிட்டத்தட்ட எட்டு மணி நேரம் உழைக்கிறது இந்த மாடு. இரண்டு முறையும் வஞ்சிக்கப்படுகிறது. ஓர் அருகைத் தின்றதற்காக மாட்டின் முகத்தில் அறைந்தவன், நான் பார்க்காதபோது மாட்டுக்குக் கீரை கொடுத்திருப்பான் என்று நினைத்து என்னை எப்படிச் சமாதானப்படுத்திக் கொள்ள முடியும்? இருபத்தைந்து ரூபாய்க்கு விற்கப்படும் கீரையின் அடக்க விலை பதினெட்டு அல்லது இருபது ரூபாய்தான்

இருக்கும். ஒரு நாளைக்குக் கிட்டத்தட்ட ஆறு ரூபாய் வரைக்கும் சம்பாதிக்கிறான் இந்தச் சிங்காரம். இதை அவன் சிரமப்படாமல் சம்பாதித்து விட்டான் என்று நான் சொல்லத் தயாராக இல்லை. அவனளவுக்குக் குறையாமல் உழைக்கும் மாட்டுக்கும் கொஞ்சம் இரக்கம் காட்டினால்தான் அந்தக் காசு அவனுக்குச் செரிக்கும்.

வேலியோரமாக முளைத்திருந்த புல்லை மண்ணோடு கரண்டித் தின்று கொண்டிருந்தது மாடு. குங்குமம் சுமந்த கழுதை மாதிரி அது ஒரு ஜன்மம். நானும் அதற்குச் சற்றுத் தள்ளிப் போய் நின்று கொண்டு கொடிக்காலுக்குள் எட்டிப் பார்த்தேன். அந்தி காலத்தைக் கிராமத்தில் கழிக்க வந்து விட்ட எனக்கு இந்த மாதிரிக் காட்சியெல்லாம் புதிது. உள்ளே குறுக்கும் நெடுக்குமாக வெட்டப்பட்டிருந்த கிடங்குகளில் தண்ணீர் தேங்கி நின்றிருந்தது. கைலியைப் பிடித்துக் கட்டிக் கொண்டு கால்களில் குறடுகளோடு ஒரு பெரியவர் ஆள்காட்டி விரலில் கோத்துக் கொண்டிருந்த இரும்பு வளையத்தால் பக்குவமான வெற்றிலைகளைக் கிள்ளிக் கிள்ளித் தென்னங் கீற்றுக் குடலை ஒன்றில் சேகரித்துக் கொண்டிருந்தார். பிரிமணை மாதிரி தலையில் ஒரு முண்டாசு. இடுப்பில் பர்ஸ் வைத்த பட்டை பெல்ட். அவர்தான் உஸ்மான் ராவுத்தராக இருக்க வேண்டும்.

நான் பார்த்துக் கொண்டிருக்கும்போதே சிங்காரம் ராவுத்தரை அணுகி மடியிலிருந்த சில்லறையை அள்ளி அவரிடம் கொடுத்து விட்டு முண்டாசை அவிழ்த்து முகத்தில் வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டான். நின்ற நிலையிலேயே சில்லறையை எண்ணிப் பார்த்த ராவுத்தர், ''என்னுங்கறேன், பன்னெண்டேகால் ரூவாதான் இருக்குது?'' என்றார்.

''ஆமாங்க'' என்று இழுத்தான் சிங்காரம்.

''என்ன ஆமாங்க? இருநூறு கட்டுக்குப் பன்னெண்டரை ரூவா இல்லியா?'' என்று கேட்டார் ராவுத்தர்.

''காரூவா டீ குடிக்க எடுத்துக்கிட்டேங்க'' என்று கூறினான் சிங்காரம்.

''செலவளிச்சிட்டியா?'' என்று பதறினார் உஸ்மான் ராவுத்தர்.

''இல்லீங்க. வைச்சிருக்கேன். குளிச்சிட்டு வூட்டுக்குப் போகக்குள்ளேதான் குடிச்சிட்டுப் போகணும்.''

''காசை எடு, முதல்லே....டீ யெல்லாம் அப்புறம் பாத்துக்கிடலாம்.'' ராவுத்தர் கையை நீட்டினார்.

''ரொம்பப் பசியா இருக்குதுங்க. உருமத்துக்குச் சோறுகூடத் திங்காம கிளம்பிட்டேனுங்க. வூட்டுக்குப் போனா இப்போ சோறு தயாராயிருக்குதோ, இல்லியோ!'' என்று சொல்லித் தன் தலையைச் சொறிந்து கொண்டான் சிங்காரம்.

''இந்தப் பேச்செல்லாம் நானே வேண்டாங்கறேன். மவ கண்ணாலத்துக்குன்னு நூத்தி இருவது ரூவா வாங்கிக்கினே. மாடு வாங்கணும்னு வாங்கிக்கிட்டுப் போன நூறு ரூவாயிலே எளுவது அப்படியே பாக்கி நிக்குது. நீ நெதம் கீரை விக்கறதுக்கு நான் கொடுக்கிற ரெண்டு ரூவாயிலே இம்மாங் கடனையும் அடைச்சாகணும். இந்த மாதிரி நாளுக்கு ஒருக்க டீ குடிக்கக் கால் அரைன்னும் நாளு கிழமைன்னு அஞ்சு பத்தும் கேட்டுக்கிட்டிருந்தால் எந்த ஜன்மத்திலே கடன் அடைபடறது?''

''ஒருவாட்டிகூட நீங்க கொடுத்ததில்லீங்களே!'' என்றான் சிங்காரம்.

''கொடுத்தா ருசி கண்டுக்கிட்டுத் திரும்பத் திரும்பக் கேட்கிறே. என்கிட்டேயும் துட்டு என்ன கொட்டியாங்கறேன் வைச்சிருக்குது? நானும் மொதலைப் போட்டு ராப் பகலா கொடிக்கால்லே கிடந்து உழைச்சாத் தானே சம்பாரிக்கிறேன்! ம்....ம் காசை எடு. கடனே அடைக்கணுமேன்னு கொஞ்சமாச்சியும் பொறுப்பு இருந்திச்சின்னு இப்படிக் கண்ட நேரத்திலே துட்டு கேப்பியா?'' ராவுத்தர் குரலை உயர்த்தாமலேயே கடுமையாகப் பேசினார்.

சிங்காரம் மடியைப் பிரித்துச் சில்லறையாக இருந்த கால் ரூபாயை எடுத்து, பேசும்போது நீண்டபடியே இருந்த ராவுத்தரின் கையில் வைத்தான்.

''இருட்டிப் போகுது. போய்க் கீரையை ஒடி. கருக்கல்லே கிளம்பியாகணும்.'' ராவுத்தர் சில்லறையை வாங்கிப் பெல்டில் இருந்த பர்ஸில் போட்டுக் கொண்டே கூறி விட்டு வெற்றிலை கிள்ள ஆரம்பித்து விட்டார்.

ஒரு கிளையை வளைத்துக் கீரை ஒடித்துக் கொண்டிருந்த சிங்காரத்தின் முகத்தைப் பார்த்தேன். உணர்ச்சி பாவமே இல்லாமல் வெறுமையாக இருந்தது அது. எனக்குப் பக்கத்தில் மாடு தலையை உயர்த்தி வேலியில் படர்ந்திருந்த ஏதோ ஒரு பசுமையை முகர்ந்தது. அதற்கு உழைத்து விட்டு வந்தால் கரண்டித் தின்னப் புல்லாவது இருக்கிறது. சிங்காரத்துக்கு....? ராவுத்தர் அமைதியாக வெற்றிலை கிள்ளிக் கொண்டிருந்தார். சிங்காரத்துக்காக அவர் மீது கோபப்பட வேண்டும் என்றால் மாட்டுக்காகச் சிங்காரத்தின் மீது நான் கோபம் கொண்டதும் நியாயம் தான். மாட்டைப் போலவே சிங்காரமும் இரக்கத்துக்குரியவன்தான். மாடுமாதிரி அவனும்தான் ஒரு பந்தத்துக்குள் தலையைக் கொடுத்துக் கொண்டிருக்கிறான். அவன் மாட்டுக்குக் கீரை போடாத காரணம் எனக்கு இப்போது புரிந்து விட்டது. ராவுத்தர் சிங்காரத்திடம் நடந்துகொண்ட விதத்துக்கு எனக்குத் தெரியாத பொருத்தமான காரணங்கள் எத்தனை இருக்குமோ?

எப்படி என்னால் இரண்டு பேர் மீது கோபப்பட முடியாதோ, அப்படியே இரண்டு பேர் மீது இரக்கப்படவும் எனக்குக் கட்டுப்படியாகாது. சட்டைப் பையில் மாட்டிக் கொண்டிருந்த வேலி முள்ளை எடுத்து விட்டு வீட்டுக்கு நடந்த போது என் மனம் காரணம் சரிவரப் புலப்படாத நிம்மதிக்கு ஆளாகியிருந்தது. துன்பமும் ஏமாற்றமும் இயற்கை என்ற உண்மை தான் அந்த உணர்வுகளுக்குச் சமாதானமாகவும் அமைகிறதோ?




# நந்தவனம்

## ௩- வானம் தெளிந்தது!

இரண்டு நண்பர்கள் பேசிக்கொண்டிருக்கும் ஒதுக்கமான இடத்தை நோக்கி, அன்னிய மனிதர்கள் இருவர் அத்தனை வேகமாக நடந்து வரவேண்டுமானல், அவர்களுடைய உள்ளத்தின் ஆத்திரம் எப்படி யிருக்க வேண்டும்!

மீசைக்காரர் தம்முடைய முகத்தில் ஒரு பெரிய சிரிப்பை வரவழைத்துக் கொண்டே, "ராம் ராம்" என்ருர் லாலாவைப் பார்த்து! லாலாவும் 'ராம் ராம்!' என்று மறுமொழி சொன்னுர். உடனே மீசைக்காரரோடு வந்த அடுத்த மனிதரும் "ராம் ராம்!" என்று சொல்லியவாறு, ஆற்று மணலில் எங்களருகே உட்கார்ந்தார்!

லாலாவுக்கு இது ஒரு பழக்கம், 'ராம் ராம்' என்று சொல்வது! தம்முடைய மிட்டாய்க் கடைக்கு வருகிற வாடிக்கைக்காரர்களைக் கண்டதும் 'ராம் ராம்' என்று சொல்லுவார். தெரிந்த மனிதர்களுக்கு வணக்கம் சொல்லுகிற ஒரு முறை அது!

"ஐயாவைப் பார்த்திருக்கிறேனே அடிக்கடி, உங்கள் மிட்டாய்க் கடைப் பெஞ்சின்மீது!" என்ருர் மீசைக்காரர் லாலாவிடம் என்னைச் சுட்டிக்காட்டி!

"எனக்கு நெருங்கிய நண்பர். பத்திரிகைகளுக்குக் கதைகள் எழுதுகிறவர்!" என்று மீசைக்காரருக்கு என்னை அறிமுகப்படுத்திஞர் லாலா!

"கதை எழுதுகிறவரா! சரியாய்ப் போயிற்று! நாங்கள் அவரை ஒரு ஸி. ஐ. டி.—ப் போலீஸ்காரர் என்றல்லவா நினைத்துக் கொண்டிருந்தோம்!" என்று தமது வியப்பை வெளியிட்டார் மீசைக்காரரின் நண்பர்!

"குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்னும் என்பதாகச் சொல்வார்கள்! கேஸ் கட்டும் கையுமாகவே அலைகிறவர்களுக்கு யாரைப் பார்த்தாலும் ஸி. ஐ. டி.ப் போலீஸ்காரர்கள் மாதிரியேதான் தோன்றும் போல் இருக்கிறது!" என்ருர் லாலா! மீசைக்காரர் ஒரு பலமான சிரிப்புச் சிரித்தார்.

"பலே! பலே! நல்ல போடு போட்டீர்கள்! என்னுடைய நண்பர் எப்பொழுதுமே இப்படித்தான்! அளவுக்கு மீறிச் சந்தேகப்படுகிறவர்! அவர் ஒரு வக்கீல் குமாஸ்தா. மிக மிகத் திறமைசாலி. நிரபராதி என்று நிரூபணம் ஆகிறவரை எந்த மனிதரும் அவருடைய பார்வையில் குற்றவாளிதான்!"

இவ்வாறு சொன்னுர் மீசைக்காரர்.

"அப்படி என்ன சந்தேகம் எங்களிடம் உங்களுக்கு?" என்று நான் கேட்டேன்.





"உங்கள் இருவருக்கும் அந்த ஆசாமியைத் தெரிந்திருக்கலாமோ என்று எனக்கு ஒரு சிறு சந்தேகம். ஆனால் என்னுடைய நண்பர் வக்கீல் குமாஸ்தா பஞ்சவர்ணமோ என்றால், லாலாவோடு உட்கார்ந்து கொண்டு ஒரு ஸி. ஐ. டிப் போலீஸ்காரரே இந்த ஆசாமியை நோட்டம் பார்க்கிறார் என்று சத்தியம் செய்கிறார்!"

மீசைக்காரர் இப்படிச் சொன்னதும், லாலா கேட்டார்:

"எந்த ஆசாமியைச் சொல்லுகிறீர்கள்? சீனிவாச மண்டபத்து இளைஞனையா?"

"ஆமாம். அவனைத்தான்!" என்று அழுத்தமாகச் சொன்னார் பஞ்சவர்ணம்.

"உண்மையில் நீங்கள் இருவரும் அவனை ஏன் இப்படிப் பதுங்கிப் பதுங்கி உளவு பார்க்கிறீர்கள் என்றல்லவா நாங்கள் சந்தேகப்பட்டுக் கொண்டிருக்கிறோம்! நீங்களானால் எங்கள் இருவரையுமே சந்தேகப்படுகிறீர்களே!"

லாலா இப்படிக் கூறியதும் வக்கீல் குமாஸ்தா தொண்டையை இருமிச் சரிப்படுத்திக் கொண்டு சொல்லுவார்:

"லாலாஜீ! சுற்றி வளைத்துப் பேசுவானேன்! மேற்படி ஆசாமியைப்பற்றி உங்களிடம் ஏதாவது துப்பு அகப்படுமா என்பதைத் தெரிந்து கொள்ளத்தான் நாங்கள் இருவரும் இப்போது இத்தனை அவசரமாக இங்கே வந்தோம்! நீங்கள் இரண்டு பேரும் தினந்தோறும் இந்த இடத்துக்குத் தவறாமல் வந்து கொண்டிருக்கிறீர்கள். ஆகையால் அந்த இளைஞன் எத்தனை நாட்களாக இந்தச்

சீனிவாச மண்டபத்துக்கு வருகிறான் என்று உங்களுக்கு நிச்சயம் தெரிந்திருக்கும். அதுவும் தவிர, மேற்படி இளைஞனோடு என்றைக்காவது ஒரு பெண்மணியை நீங்கள் இங்கே பார்த்திருக்கிறீர்களா என்று எங்களுக்கு முக்கியமாகத் தெரிய வேண்டும். மேற்படி தகவல்களை நீங்கள் சொல்வதாயிருந்தால் எங்களுடைய நன்றியையும் வணக்கத்தையும் உங்களுக்குத் தெரிவிக்கிறோம். எங்கள் இருவருடைய நன்றியோடு சேர்த்து, ஒரு முக்கியமான பெரிய குடும்பத்தின் நன்றியும், ஒரு மிகப் பெரிய கௌரவமான பரம்பரையின் நன்றியும் உங்களைச் சேரும்! ஏனென்றால் மேற்படி பெண்மணியிடம் எங்களுக்கு அத்தனை அக்கறை!''

இவ்வாறு பேசினார் வக்கீல் குமாஸ்தா பஞ்சவர்ணம்! மேற்படி மேற்படி என்று சொல்லிக் கொண்டே, பெண்மணி என்ற ஒரு வார்த்தையையும் நடுவிலே சேர்த்துப் பேச்சோடு பேச்சாகக் கூறியதும், என் ஆவல் அளவுகடந்து பொங்கியது!



''பெண்மணியா? இந்தச் சீனிவாச மண்டபத்திலா?'' என்று கேட்டேன்.

''ஆமாம். பெண்மணி என்றால் வயதான அம்மாள் இல்லை. ஒரு கல்லூரி மாணவி. பதினேழு அல்லது பதினெட்டு வயது இருக்கும்! பெரிய இடத்துப் பெண்!'' என்றார் மீசைக்காரர். வக்கீல் குமாஸ்தா நடுவில் பாய்ந்தார்:

''பதினெட்டு, பத்தொன்பது, இருபது என்று ஒவ்வொரு வயதாகக் கூட்டாதீர்கள். அந்தப் பெண்ணுக்குப் பதினான்கு வயதுக்கு மேல் இராது சார்! சட்டப்படி அவள் தானாகவே ஒரு தீர்மானத்துக்கு வர முடியாது! மேஜர் இல்லை; மைனர்தான்!''

இப்படி ஒரு சட்டப் 'பாயிண்ட்'டை வக்கீல் குமாஸ்தா குறிப்பிட்டதும், மீசைக்காரர் விழித்துக் கொண்டார்!

''ஆமாம். ஆமாம். அவளாகத் தனக்கு உரிய கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியாத வயதுதான்! ஆனாலும் நிலைமை மிகவும் கவலைக்கு இடமாக இருக்கிறது. அதனால்தான் இத்தனை தீவிரமாக இங்கே வேவுபார்த்து வருகிறோம்!'' என்று சொன்னார் மீசைக்காரர்.

''சார், அது மட்டுமில்லை! லாலாஜீ, நீங்களும் கவனமாகக் கேட்க வேண்டிய ஒரு கேஸ் இது! மேற்படி பெண்ணோடு தீர்ந்து விடுகிற ஒரு சிறு காரியமில்லை, இது! கட்டுக் கட்டாகத் தினந்தோறும் எதற்காகக் காகிதங்களைத் தூக்கிச் சுமக்கிறேன் நான்? ஸிவில் க்ரிமினல் இரண்டும் சேர்ந்து அல்லவா நம்மைத் தொல்லைப்படுத்துகிறது!'' என்றார் வக்கீல் குமாஸ்தா!

''கிரிமினல்கூடவா?'' என்று மிகுந்த கவலையோடு கேட்டேன்.

''ஆமாம், கிரிமினல் இல்லை; கிரிமினல்கள்!'' என்று ஒரு ''கள்''ளையும் சேர்த்துப் புன்னகையிலே சொன்னார் பஞ்சவர்ணம்! இப்படிச் சொல்லி விட்டுத் துண்டை உதறித் தோளிலே போட்டுக் கொண்டு எழுந்தார் அவர்! அவருடைய கேஸ் கட்டுகளிலே சேர்த்துச் சொருகக் கூடிய 'ரிகார்டுகள்' ஏதும் எங்களிடம் இல்லை என்பது அவர்களுக்கு உறுதியாகிவிட்டது! எனவே மீசைக்காரரும் ''ராம் ராம்'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தார். இருவரும் ஆற்று மணலிலே நடந்து குறுக்குத் துறைச் சாலையை நோக்கி விரைந்தனர்!

லாலா சிரித்தார். சிரிப்பினூடு ஒரு துயரம் ஒலித்தது.

''அந்த வாலிபனிடம் நமக்கு ஏன் இத்தனை சிரத்தை! யார் அவன், எங்கே வந்தான் என்றே தெரியாது! ஆனாலும் அவனைப் பற்றி இவர்கள் சொல்வதைக் கேட்டதும், கோபத்துக்குப் பதிலாக, அந்த இளைஞனிடம் நமக்கு ஒரு கவலை அல்லவா உண்டாகிறது!'' என்று துயரத்தோடு சொன்னார் லாலா.

''ஆமாம். அந்த வாலிபனிடம் நமக்குக் கவலைதான் உண்டாகிறது. இந்த இரண்டு கிங்கரர்களையும் பார்த்தாலே எனக்கு ஒரு ஆவேசம் வருகிறது! அந்தப் பையன் மிகவும் சாது. தப்புத் தண்டாவே அவனிடம் இருக்க முடியாது. இந்த இரண்டு திமிங்கிலங்களும் அந்தப் பையனை விழுங்கி விடுவதற்காகவே இந்தத் தாமிரவருணியில் பதுங்குகின்றன!''

இப்படி நான் சொன்னபோது, லாலா மௌனமாக இருந்தார். சற்று நேரம் கழித்துச் சொன்னார்:



''நண்பரே! நாம் ஏன் இப்படி மனசை அலட்டிக் கொள்ள வேண்டும்? அந்தப் பையனையே போய் விசாரித்து எல்லாத் தகவல்களையும் தெரிந்து கொண்டால் போகிறது!''

''அந்தப் பையன் ஏதோ ஒரு பெரிய ஆபத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறான் என்பதில் சந்தேகமில்லை. அவனுடைய குழப்பங்களும் தவிப்பும் நன்றாகப் புரிகின்றன. இல்லையென்றால், அவன் ஏன் இப்படிப் பேய் பிடித்தவன் மாதிரித் தினந் தோறும் இங்கே வர வேண்டும்? அவனுக்கு நேர்ந்துள்ள அந்தப் பெரும் துயரம் என்ன என்று தெரிந்து கொண்டால் ஒழிய, நமக்குமே அமைதி இராது போல் இருக்கிறது! ஆனால் அவனோ ஒரு பேசா மடந்தையாக இருக்கிறானே! அவனிடம் போய் எப்படிப் பேச்சுக் கொடுப்பது? அவனை எப்படிப் பேசப் பண்ணுவது!'' என்றேன் நான்.

அந்தப் பேசாமடந்தையிடம் எப்படிச் சிநேகிதம் பிடிப்பது என்று தெரியாமல் இருவருக்குமே குழப்பமாகத்தான் இருந்தது. நெற்றியைப் பிசைந்துகொண்டே நான் யோசனையில் ஆழ்ந்தேன்.

''சோமு, சிங்கம்புத்தூர் ஜமீந்தாரை உங்களுக்குத் தெரியும் அல்லவா?'' என்று என் சிந்தனையைக் கலைத்தார் லாலா.

''தெரியும். இரண்டொரு தடவை பார்த்திருக்கிறேன். ஜமீன் ஒழிப்புச் சட்டம் வருவதற்கு முன்பு சிங்கம்புத்தூர் என்றால் சாமானியமா! 'ப்ரிவி கௌன்ஸில்' வரை சென்றுள்ள எத்தனையோ சிங்கம்புத்தூர் வழக்குகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்தப் பரம்பரையில் கடைசி ஜமீந்தாராக இருந்த அனவரத புவனபதியைப்பற்றியும் நிறையக் கேட்டிருக்கிறேன். ஆனால் ஒன்று:



அனவரதர் சம்பந்தப்பட்ட வரை அவர் மகா உத்தமர் என்றும், தமிழ் இலக்கியத்திலும், நம்முடைய செந்தமிழ் நாட்டுக் கலைகளிலும் அவருக்கு அளவற்ற ஈடுபாடு என்றும், கலை வளர்ச்சி தவிர வாழ்க்கையில் வேறு எவ்வித இலட்சியமும் இல்லாத பரம ரசிகர் என்றும் எத்தனையோ பேர் சொல்லியிருக்கிறார்கள்!'' என்றேன்.



''ஆமாம். முக்கியமாக இசையிலும் சித்திரக் கலையிலும் அவருக்கு அபாரமான பற்று. இந்தப் பற்றுதலைப் பற்றி அந்தக் காலத்தில் கதை கதையாகச் சொல்லுவார்கள். ஆனால் மீசைக்காரர் அப்படியில்லை. முற்றிலும் வேறு விதம் அவர்!''

''இந்த !மீசைக்காரரா? இவரையா சொல்லுகிறீர்கள்...?''

''ஆமாம். சிங்கம்புத்தூர் வட்டாரத்தில் சமீப காலம் வரை இந்த மீசைக்காரர் வைத்ததுதான் வரிசையாக இருந்தது! ஜமீந்தாருக்கு நெருங்கிய உறவு இவர்! இவரிடம் ஜமீந்தாருக்குமே ஏதோ காரணத்தினால் அந்தரங்கமான ஒரு பயம். அதனால் இவர் மற்றவர்களைப் படுத்துகிற பாடு சொல்லி முடியாது!

இப்படிப்பட்ட புண்ணியவாளனுடைய பார்வை அந்த ! இளைஞனிடம் போய் விழுந்திருக்கிறதே என்றுதான் பயமாக இருக்கிறது!''

நாங்கள் இருவரும் மணலிலிருந்து எழுந்தோம்.



''நாம் கொஞ்சம் அவசரப்படாமல் இருந்திருந்தால் மீசைக்காரரே இன்னும் சில தகவல்கள் சொல்லியிருப்பார். முரடர் என்பதைத் தவிர, கொஞ்சம் அவரைப் புகழ்ந்து பேசினால், இரகசியம் ஒன்றுவிடாமல் எல்லாவற்றையும் கொட்டிவிடுகிற ரகத்தைச் சேர்ந்த மனிதர் அவர்!''

இவ்வாறு சொன்னார் என் நண்பர்.

''இருக்கலாம். மீசைக்காரரர் அந்த ரகத்து மனிதராக இருக்கலாம். ஆனால் அவரோடு வந்தாரே ஒரு பஞ்சவர்ணம், அவர் எப்படி? மீசைக்காரரை விரிவாகப் பேச விடமாட்டாரே அவர்! மேற்படி மேற்படி என்று சொல்லியே மேற்படிக்கு விட மாட்டாரே ஐயா!'' என்று சொன்னேன் நான்.

''அதுவும் உண்மைதான். இவர்களிடமிருந்து எதையும் எளிதில் கிரஹித்துக் கொள்ள முடியாதுதான். ஆனாலும் பரவாயில்லை. இந்தப் பொல்லாத மனிதர்களிடமிருந்து பொய்யையும்,

பிள்ளையையும் கேட்பதை விட, அந்த இளைஞனிடமிருந்தே தகவல்கள் தெரிந்து கொள்வதுதான் நல்லது!'' என்றார் லாலா.

அன்று இரவு வீடு திரும்பியதும் நீண்ட நேரம் இதைப் பற்றியே சிந்தித்தேன். சித்திர மடல், அதிலுள்ள எழில் முகம், அந்த முகத்தை அப்படியே எடுத்து வைத்துக் கொண்டது போல் காட்சி தருகிற இளைஞன், அவனை வேவு பார்க்கும் மீசைக்காரர், அவருடைய நண்பர் பஞ்சவர்ணம், அவர்களுடைய பேச்சிலே வந்த கல்லூரி மாணவி — இத்தனை எண்ணங்களும் மனத்தில் வட்டமிட்டன. அந்த இளைஞனைச் சந்தித்து எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்ற யோசனையில் தீவிரமாக ஈடுபட்டேன். இதன் பயனாக மறுநாள் மாலை நான் லாலாவோடு ஆற்றங்கரைக்குப் புறப்பட்டபோது, என் கையில் அந்தச் சித்திரமடலையும் எடுத்துக்கொண்டேன்!

ஆனால் அன்று நாங்கள் ஆற்று மணலுக்குச் சென்றபோது, எங்களுக்கு முன்னாலேயே அந்த இளைஞன் அங்கே வந்து மண்டபத்தின் மீது உட்கார்ந்திருந்தான்! சற்று நேரத்தில் மீசையும் அவருடைய நண்பரும் அங்கே வந்தார்கள்! இந்தத் தடவை அவர்கள் இன்னும் சற்றுத் தொலைவிலே போய் உட்கார்ந்து கொண்டார்கள்!

இதற்கு மறு நாள் மாலையும் இப்படியே நடந்தது. வக்கீல் குமாஸ்தாவும், மீசைக்காரரும் எங்களுடைய பார்வையிலிருந்துங்கூட மறைய ஆரம்பித்தார்கள் என்று தோன்றிற்று! இளைஞனோ என்றால் இதொன்றையும் பொருட்படுத்தாமல், மண்டபத்துக்கு வருவதும், உட்காருவதும், பிறகு எழுந்து போவதுமாக இருந்தான்.

சித்திர மடலைக் கையிலே எடுத்துக் கொண்டு வந்துங் கூடப் பயனில்லையே என்று நான் எண்ணிக் கொண்டிருந்த இந்தச் சந்தர்ப்பத்திலே தான் ஒருநாள், வானத்தில் மப்பும் மந்தாரமுமாக மேகங்கள் கூடி, மழை தூறத் தொடங்கியது! அந்த வாலிபன் மண்டபத்தின் மேல் தளத்திலிருந்து இறங்கி, மண்டபத்துக்குள்ளே ஒதுங்கினான்! இதுதான் சரியான தருணம் என்று நாங்கள் இருவரும் அவனைப் பின்தொடர்ந்தோம்.

''இது என்ன இப்படி ஒரு எதிர்பாராத மழை!'' என்று நானாகவே அந்த இளைஞனிடம் பேச்சுக் கொடுத்தேன்.

''ஆமாம். எதிர்பாராத மழைதான். ஆனால் என்ன பிரமாதம்! இது ஒரு சிறு தூற்றல். பத்துப் பதினைந்து நிமிஷத்தில் வெறித்து விடும்!'' என்று பேச்சை வளர்க்காமல் சட்டென்று முற்றுப் புள்ளி வைத்தான் அவன்!

''சிறிய தூற்றல்தான். ஆனாலும்..'' என்று வார்த்தைகளை இழுத்தார் லாலா! நான் அந்தப் பேச்சைத் தொடர்ந்தேன்.

''ஆனாலும் எங்கள் கவலை நாங்கள் நனைந்து போய் விடுவோமே என்பதில்லை! என் கையிலுள்ள இந்தச் சித்திர மடல் நனைந்து விடக் கூடாதே என்றுதான் கவலை!''

இவ்வாறு நான் சொன்னேனோ இல்லையோ, வாலிபன் என்னைக் கூர்ந்து பார்த்தான். சித்திர மடல் என்ற வார்த்தை வந்ததும் இதுவரை இல்லாத ஒரு வியப்பு, ஒரு திகைப்பு, அந்த இளைஞனுடைய முகத்திலே படர்ந்தது!

''சித்திர மடலா! சித்திர மடலா!'' என்று இரண்டு முறை கேட்டான் அவன், மழைத் தூற்றலின் ஓசையையும் மீறிய உரத்த குரலில்! அப்போது அவனுடைய முகத்திலே துவண்ட ஆவல்! மழை பெய்யும்போது வானத்தில் மின்னல் துவளுமே அப்படியிருந்தது, அவன் முகம்! கவலை மேகங்கள் கவிந்த அந்த முகத்தில் திடீரென்று ஓர் ஆவல் மின்னல் நெளிந்து துவண்டது!

''ஆமாம். சித்திர மடல், அற்புதமான ஓவியக் களஞ்சியம்!'' என்று சொல்லிக் கொண்டே நான் நன்றாகச் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டேன்! 'பையன் நம்முடைய வலையிலே சிக்கிக் கொண்டான்' என்று லாலாவும் மண்டபத் தூணிலே நன்றாகச் சாய்ந்து கொண்டார்!

''சித்திர மடல் என்று சொல்கிறீர்களே! யார் வரைந்த சித்திரங்கள் அவை!'' என்று கேட்டான் இளைஞன்.

''அதுதான் தெரியவில்லை. யாரோ வரைந்த சித்திரங்கள் அவை. ஆனால் யாரோ என்று அலட்சியமாகச் சொல்லி விடக் கூடாது. வாழையடி வாழையாக இந்தப் புண்ணியத் தமிழ் நிலத்திலே பிறப்பெடுக்கும் அற்புதக் கலைஞர்களின் வரிசையிலே தோன்றிய ஒரு மாபெரும் கலைஞன் அவன்! சந்தேகம் இல்லை. நீங்களே பாருங்களேன்!''

இப்படிச் சொல்லிக் கொண்டே அந்தச் சித்திர மடலை எடுத்து இளைஞனிடம் நீட்டினேன்.

பலமான மழையில்லை. தூற்றல் மழைதான். அந்த மங்கலான வெளிச்சத்தில் சித்திர மடலை எடுத்துப் புரட்டினான் அந்த வாலிபன்!

வறட்டு, மூச்சுவிட முடியாத, துன்பம் தரும்

இருமலிலிருந்து

**விரைவாக , நிச்சயமாக**

குணமளிக் கக்கூடிய வீட்டு மருந்து

*Alembic* **க்ளைகோடின்**

டெர்ப் வசாகா




GTV-590 EVEREST

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்று காகிதங்களைப் புரட்டும் போதே அவன் அசைவற்று ஒரு மனிதச் சித்திரமாக மாறி விட்டான். அந்தச் சித்திர மடலிலே காட்சி தந்த வண்ண முகங்கள்! ஒரே முகத்தின் எண்ணற்ற உணர்ச்சிச் சாயல்கள்! அவை அனைத்தும் இப்பொழுது எங்கள் எதிரே யிருந்த அந்த உயிர்ச் சித்திரத்தின் முகத்திலே பிரதிபலித்தன. மின்னல், இடி, மழை எல்லாம் மண்டபத்துக்கு வெளியே இல்லை! அந்த வாலிபனின் முகத்திலே கண்டேன் நான்!

''என்ன அற்புதமான சித்திரங்கள். பார்த்தீர்களா?'' என்று மெதுவாக இளைஞனிடம் என்னுடைய ஈடுபாட்டைச் சொன்னேன். இளைஞனுடைய செவியிலே என் வார்த்தைகள் விழுந்தன. ஆனாலும் விழவில்லை! அவனுடைய கண்களைக் கூர்ந்து பார்த்தேன். மழையின் தூற்றலைப் போல் இரண்டு கண்ணீர்த் துளிகள் அந்த விழிகளிலே மல்கி நின்றன! அந்த விழிகளில்! ஆம்; எந்த வட்டக் கரிய விழிகளைச் சித்திரத்திலே கண்டேனோ அதே வட்டக் கரிய விழிகள் இப்பொழுது என் எதிரே நிஜ முகத்தில் கண்ணீர் துளித்து நின்றன! எந்தப் பிறை நெற்றியைச் சித்திரத்திலே பார்த்துக் குழம்பினேனோ, அதே பிறை நெற்றியிலே இப்பொழுது குழப்பம் கவிந்து நிற்கக் கண்டேன்!



பொங்கி எழுகிற கண்ணீரைப்பொத்தி அமுக்குவது போல், இரண்டு விழிகளையும் இமைகளால் ஒரு முறை மூடி அழுத்தி விட்டுக் கொண்டே, சித்திர மடலின் மற்றப் பக்கங்களை மேலே புரட்டினான் வாலிபன். நந்தவனத்திலே பூப்பறிக்கிறாள் சுந்தரக் கன்னி. இதோ மானோடு கொஞ்சுகிறாள். மயிலோடு விளையாடுகிறாள். இதோ அதே அழகுக் கன்னி வானத்திலே தவழ்கிற பிறைச் சந்திரனைக் கை நீட்டிப் பிடிக்கிறாள்.

மண்டபத்துக்கு வெளியே மழை நின்று விட்டது. ஆனால் இளைஞனுடைய கண்களிலிருந்து 'பொல பொல' என்று கண்ணீர் மழை பொழிய ஆரம்பித்தது!

''இளைய நண்பரே! எங்களை மன்னிக்க வேண்டும் நீங்கள். உங்களுடைய கண்களிலிருந்து பொங்கி வழிகிற துயரத்துக்கு நாங்கள் காரணமாகி விட்டோம் என்பதற்காக மிகவும் வருந்துகிறோம். ஆனால்—''

சித்திர மடலை மூடி வைத்தான் வாலிபன். கைக் குட்டையை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டு சற்று நேரம் மௌனமாக இருந்தான். பிறகு என்னைப் பார்த்துச் சொல்லுவான்:

''ஐயா, உங்களை மன்னிக்க வேண்டும் என்று சொன்னீர்கள். உங்களை மன்னிப்பதற்குப் பதிலாக உங்களை வாழ்த்த வேண்டும் நான். உங்களுக்கு என் கோடி கோடி வணக்கங்களைச் செலுத்த வேண்டும் நான்! ஆனால் ஒரே ஒரு கேள்வி மட்டும் உங்களைக் கேட்கிறேன். தயவு செய்து ஒளிக்காமல், மறைக்காமல் பதில் சொல்வீர்களா?''

இவ்வாறு கேட்டான் அந்தச் சுந்தர வாலிபன். அவனுடைய கேள்வியிலே, ஆவலும் பரிவும் நிரம்பி நின்றன.

''கேளுங்கள். சொல்லுகிறேன். என்றாவது ஒரு நாள் உங்களைச் சந்தித்துப் பேச மாட்டோமா, என்றாவது ஒரு நாள் நீங்கள் என்னிடம் ஓராயிரம் கேள்விகள் கேட்டு அந்தனை கேள்விகளுக்கும் ஒளிக்காமல் மறைக்காமல் நாம் பதில் சொல்ல மாட்டோமா என்றுதான் தவித்துக் கொண்டிருக்கிறேன். கேளுங்கள். தாராளமாகக் கேளுங்கள்!''

இப்படி நான் சொன்னதும் அந்த இளைஞன் தனது இதயம் பொங்கி விம்மி விட்டான்.

''ஐயா, என்னைச் சந்திக்க வேண்டும் என்றும், என்னுடன் பேச வேண்டும் என்றும் கூட, இந்த உலகத்தில் இப்படி ஆசைப்படுகிற மனிதர்கள் இருவர் இருக்கிறீர்களா? ஆகா! அதைக் கேட்கும் போதே என் நெஞ்சம் நிறைகிறது. வாழ்க்கையில் என்னிடம் நேசம் கொண்டுள்ள ஜீவன் இந்த உலகில் ஒன்றே ஒன்று என்று தான் இதுவரை எண்ணியிருந்தேன். இப்பொழுது இந்தப் புனிதமான சீனிவாச மண்டபத்தில் இன்னும் இரண்டு ஜீவர்களைக் கண்டுகொண்டேன்! அது மட்டுமா! இந்தச் சித்திர மடல், இந்த ஓவியக் களஞ்சியம், இதையும் அல்லவா பார்க்கிறேன். இதெல்லாம் உண்மைதானா? எதிர்பாராத மழை என்று சொன்னீர்கள். இந்த எதிர்

பாராத மழையில் இப்படியும் ஓர் எதிர் பாராத அன்பு மழையா! அப்படியானால் எனக்கு வாழ்வு பாலைவனமாகி விட வில்லை. என்னுடைய இலட்சியம் பட்டுப் போய்விடவில்லை. என்னுடைய கனவுக் கொடி இந்த மழையிலே துளிர்க்க ஆரம்பித்து விட்டது! சந்தேகமில்லை. கொடி துளிர்க்க ஆரம்பித்து விட்டது!''

ஏதோ ஒரு கனவிலே, ஓர் ஆவேச வேகத்திலே இப்படி வார்த்தைகளைக் கொட்டினான் அந்த வாலிபன். அவ னுடைய உணர்ச்சி நிலையைக் கண்டு மனம் உருகியவராய் இதுவரை ஒரே மௌனமாக இருந்த நண்பர் லாலா இப்பொழுது அவனைப் பார்த்துக் கேட்டார்:

''தம்பி, நீங்கள் எங்களிடம் ஏதோ கேட்க வேண்டும் என்றீர்களே. கேளுங்கள். உணர்ச்சிகளை நிதானப் படுத்திக் கொண்டு கேளுங்கள். கவலை களை உதறித் தள்ளுங்கள். கடந்த ஒரு வாரமாக உங்களைச் சந்தித்துப் பேசு வதற்காகவே நானும் நண்பரும் சந்தர்ப் பம் பார்த்துக் கொண்டிருந்தோம். இன்றுதான் அது நேர்ந்திருக்கிறது!''

லாலா சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, இளைஞனுடைய முகம் மலர்ந் தது. அவன் எங்கள் இருவரையும் பார்த் துச் சொன்னான்:

''ஐயா! முதலில் இந்த அற்புதமான சித்திர மடல் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது என்று நீங்கள் சொன்னால் மிகவும் நன்றியுள்ளவனாக இருப்பேன். இரண்டாவது, — அதைச் சொல்லு வதற்கே தயக்கமாக இருக்கிறது. அதைக் கேட்பதற்கே கூச்சமாக இருக்கிறது. நாம் சந்தித்துச் சில நிமிஷங்களே ஆகின் றன. அதற்குள் அத்தனை உரிமையோடு எப்படி உங்களிடம் —''

அவனுடைய வார்த்தைகள் தயங் கின. அந்தத் தயக்கத்திலே அவன் முகத்தில் சுழித்தோடிய எண்ணங்களைக் கூர்ந்து பார்த்தேன். சித்திர மடலிலே ஒப்பற்ற அழகியானவள் வானத்தில் தவழும் சந்திரனை எட்டிப் பிடிப்பதற் காகக் கையை நீட்டுகிறாள் அல்லவா, அந்த நிலையிலே அந்த ஓவியக் கன்னியின் முகத்தில் எத்தகைய நாட்டமும் தேட் டமும் சித்திரமாகச் சுழித்தனவோ, அதே சுழிப்பு இளைஞனுடைய முகத்திலே இப்பொழுது தத்ரூபமாக தெளிந்தது!

''தம்பி, தயங்காதீர்கள். இரண்டா வது கேள்வியையும் நீங்கள் தாராள மாகக் கேளுங்கள். அதற்கு முன்னா லேயே, உங்களுடைய முதலாவது கேள்விக்குப் பதில் சொல்லுகிறேன். இந்தச் சித்திர மடல் இதோ எட அருகே இருக்கும் லாலாவின் மிட்டாய்க் கடைக்குப் பழைய பேப்பர்களோடு சேர்ந்து வந்தது!''

அவ்வளவுதான். இளைஞனுடைய முகத் தில் ஆற்றொணாத வேதனை கவிந்தது!

''என்ன சொல்லுகிறீர்கள்? பழைய பேப்பர்களோடா? அப்படியானால் தரா சும் படிக்கல்லும் வைத்தா இந்தச் சித்திர மடலை விலைக்கு வாங்கினீர்கள்!''

இப்படிக் கேட்கும்போது இளை ஞனுடைய கண்களிலே மறுபடியும் கண் ணீர் பொங்கி வந்தது.

''தம்பீ, மனத்தைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள். இந்தச் சித்திர மடல் நண்பரின் கைக்கு வந்த அந்த வினாடியி லேயே இதன் உண்மையான நிறை என்ன என்பதை மனத் தராசிலே நிறுத்து விட்டார் இவர். அதனால்தான் இந்த ஒரு வாரமாக நாங்கள் இவ்வளவு தூரம் குழம்பினோம்!'' என்று நான் சொன்னேன்.

''நீங்கள் குழம்பினீர்களா?'' என்று கேட்டான் இளைஞன்.

''ஆமாம். முக்கியமாக அந்த ஓவி யங்கள் அத்தனையிலும் மீண்டும் மீண் டும் தோன்றுகிறதே ஒரே முகம், அந்த முகமும் சீனிவாச மண்டபத்தின் மேல் தளத்திலே வந்து உட்கார்ந்துகொண் டிருக்கிற உங்களுடைய முகமும் —''

என்னுடைய வார்தைகளை முழுதும் நான் சொல்ல முடியவில்லை. அதற்குள் இளைஞன் தன் இதயத்திலே பொங்கிப் பாய்ந்து கொண்டு வருகிற துயரத்தை அடக்க முடியாமல், தனது மேல் துண் டுக்குள் முகத்தைப் புதைத்துக்கொண்டு விம்மினான். மானும் மயிலும் சித்திரத் திலே கொஞ்சின அல்லவா? அந்த மானும் மயிலும் எங்கள் எதிரே யிருந்து கண்ணீர் விட்டு அழுதால் எப்படியிருக் கும்? அப்படியிருந்தது அந்தக் காட்சி.

நண்பரும் நானும் சற்று நேரம் மௌனமாகவே இருந்தோம். பிறகு இளைஞன் தனது நினைவு அலைகளிலே ஒருவாறு நீந்திக் கரையேறியவன் போல எங்களிடம் பேச ஆரம்பித்தான்.

''ஐயா, என்னுடைய இரண்டாவது கேள்வி என்னவென்றால்—''

இப்படி ஆரம்பித்தவன் மீண்டும் தயங்கினான். பிறகு சொற்களை மெது வாகத் தொடர்ந்தான்.

''இந்த அற்புதமான சித்திரமடலை என்னிடம் கொடுத்துவிட நீங்கள் இசைவீர்களா?''

இப்படிச் சொன்னதும், நாங்கள் திகைத்துப் போய் ஒருகணம் அவனேயே பார்த்தோம். அவன் மீண்டும் பேசினன்:

''ஐயா, இந்தச் சித்திரமடலை என்னிடம் தந்து விடுங்கள் என்று நானுக வாய் விட்டுக் கேட்க வேண்டிய அவசியமே இல்லை. இந்தச் சித்திரங்கள், யாரால் வரையப் பட்டவை, யாருக்காக வரையப் பட்டவை, எப்பொழுது எந்தச் சந்தர்ப்பத்தில் வரையப்பட்டவை என்பதை நீங்கள் அறிந்துகொண்டீர்களானுல் போதும். பிறகு நான் கேட்காமல் நீங்களே இதை என்னிடம் ஒப்படைத்து விடுவீர்கள். உண்மையில் இது என் சொத்து. உண்மையில், இது என்னைச் சேர வேண்டியது. இப்படி நான் சொல்லுவது உங்களுக்கு வேடிக்கையாகத் தோன்றலாம். இப்படி நான் கூறுவதில் உங்களுக்கு நம்பிக்கை ஏற்படாமல் இருக்கலாம். ஆனுல் இந்தச் சித்திரமடலுக்கும் எனக்கும், இந்தச் சித்திரங்களின் பிறப்புக்கும் என் பிறப்புக்கும், இவற்றின் வாழ்வுக்கும் என்னுடைய வாழ்வுக்கும் உள்ள சம்பந்தம், அந்த உறவு, அந்த இணைப்பு— அதை நீங்கள் தெரிந்து கொண்டால் என் கோரிக்கைக்கு நிச்சயம் இசைவீர்கள். ஆனுல் அதை உங்களிடம் எப்படிச் சொல்லுவேன்! எப்படிச் சொல்லாமல் இருப்பேன்! அதுதான் புரியவில்லை எனக்கு!''



இளைஞன் இப்படிப் பேசியபோது அவனுடைய வார்த்தைகள் மயங்கி மறுகின. இதைக் கவனித்த என் நண்பர் பூரணமான அனுதாபத்தோடு சொல்லுவார்:

''தம்பி, இந்தத் தாமிரவருணி நதியின் கரையிலே, இந்த ஆற்று மணலிலே, உங்களை உளவு பார்ப்பதற்காகவே முக்கியமான இரண்டு மனிதர்கள் வளைய வருகிறார்கள். உங்களைச் சந்தித்து இத்தனையும் பேசிய பிறகு, அந்தப் பொல்லாத மனிதர்களிடமிருந்து உங்களை மீட்க வேண்டியது மிக மிக அவசியம் என்பதை நன்ருக உணர்கிறேன். ஆனுல் நீங்கள் யார், உங்களுக்கும் இந்தச் சித்திர மடலிலே தோன்றுகிற பெண்மணிக்கும் என்ன உறவு, சிங்கம்புத்தூர் ஜமீந்தாரைச் சேர்ந்த மனிதர்கள் உங்களை வேவு பார்க்க வேண்டிய காரணம் என்ன, ஏதோ ஒரு கல்லூரி மாணவிக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம் — என்றெல்லாம் தெரிந்து கொள்ளாமல் உங்களுக்காக நாங்கள் என்ன செய்ய இயலும்? எங்களிடம் உங்களுக்கு நம்பிக்கை இருக்குமானுல், அந்தச் செய்திகளைக் கூறுங்கள். எங்களால் உங்களுக்கு எவ்வித இடையூறும் நேராது என்பதை மட்டும் உங்களுக்கு முதலிலேயே உறுதி கூறுகிறோம்!''

இவ்வாறு சொன்னுர் ராம்சிங். இளைஞனுடைய முகத்தில் புன்னகை அரும்பிற்று.

''ஐயா! உங்களிடம் எனக்கு ஏன் அவநம்பிக்கை உண்டாக வேண்டும்! எள்ளளவும் இல்லை. தவிரவும் மிகப் பெரும் பழி ஒன்றிலிருந்து நான் ஈடேற வேண்டும் என்று எண்ணுகிறேன். அதற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்ள விரும்புகிறேன். அதனுல்தான் எனக்கு இத்தனை குழப்பங்களும், தொல்லைகளும்! என்னிடத்திலும் இந்தச் சித்திர மடலில் உள்ள அற்புதக் கலையினிடத்திலும் இத்தனை ஆர்வம் காட்டுகிற உங்களிடம் சொல்லாமல், இதையெல்லாம் வேறு யாரிடம் சொல்லப் போகிறேன்? கட்டாயம் சொல்லுகிறேன்!''

இவ்வாறு கூறி மேலே பேச ஆரம்பித்தான் வாலிபன். மண்டபத்துக்கு வெளியே மழை நின்று விட்டது! பொதிகை மலையிலே புரண்டு வந்த தென்றற் காற்று, சுகமான ஒரு குளிர்ச்சியோடு மண்டபத்துக்குள்ளே நுழைந்து வந்து எங்கள் உடம்பிலே தவழ்ந்து சென்றது. நிர்மலமான நீல ஆகாயத்தில் சந்திரன் உதித்திருந்தான். பால் நிலவின் மோகன ஒளியும், தாமிரவருணித் தண்ணீரின் மெல்லிசையும், எதிரே விரிந்து பரந்து கிடந்த பொன் மணலும், சின்னஞ் சிறிய சீனிவாச மண்டபத்தின் நேர்த்தியான அமைதியும் சேர்ந்து, இளைஞனுடைய இதயத்திலே பொங்கி யெழுகின்ற நினைவின் ஒலி அலைகளுக்கு ஒரு பின்னணி வழங்கின! தெளிந்த வானில் இயற்கை அன்னை நல்கிய அந்த இங்கிதத்திலே வசமாகி, இளைஞன் பேசத் தொடங்கினுன்.

(தொடரும்)

# திருமூலர் தவமொழி

ராஜாஜி சோமு

41

தவம் செய்து ஞானம் பெற்ற பெரியோர்கள் தங்களுக்கு யாராலும் எவ்வித இடையூறு நேர்ந்தால், அதனால் தங்களுடைய பண்புகளில் எவ்வித மாற்றமும் உண்டாகாமல் நிற்பார்கள். அதுபோலவே பிறருடைய புகழ்ச்சி உபசாரங்களில் மயங்கி நிலை கெட மாட்டார்கள். இதைப் பாடுகிறார் திருமூலர்.

**செற்றில்என்? சீவில்என்?**
**செஞ்சாந்து அணியில்என்?**

[செற்றில் என்—பிறர் தங்களைத் தாக்கினால் என்ன. சீவில் என்-தங்கள் உடம்பை அறுத்துச் ஒவினாலும் என்ன. செஞ்சாந்து அணியில் என்—செஞ்சாந்தாகிய சந்தனக் கலவையைக் கொண்டு வந்து தங்கள் மேனியிலே பூசி உபசரித்தாலும் என்ன.]

துன்புறுத்தினாலும், அல்லது உபசாரங்கள் செய்தாலும் தமக்குரிய நிலையிலிருந்து மாற மாட்டார்கள். இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும், துன்பத்தையும், உபசாரத்தையும் சமமாகப் பாவிப்பார்கள். ஒன்றினால் மயக்கமும், மற்றொன்றினால் மனத் தளர்ச்சியும் அடைய மாட்டார்கள் மெய்யான ஞானிகள். தங்கள் தவத்தின் பெருமையை அறியாத மூர்க்கர்களால் தங்களுக்கு எத்தகைய துன்பம் நேர்ந்தாலும் கலங்க மாட்டார்கள் என்பதை மேலும் சொல்லுகிறார்.

**மத்தகத் தேஉளி**
**நாட்டி மறிக்கில்என்?**

[மத்தகம்—தலையுச்சி. மத்தகத்தே-தலையுச்சியில். உளி நாட்டி—உளியைச் செருகி. மறிக்கில் என்—திருகினாலும் என்ன? இதெல்லாம் ஒரு பொருட்டு இல்லை, பூரண ஞானம் அடைந்தவர்களுக்கு]

**வித்தகன் நந்தி**
**விதிவழி யல்லது**
**தத்துவ ஞானிகள்**
**தன்மைகுன் றுரே**

[வித்தகம் — ஞானம். வித்தகன் நந்தி—ஞான குருவாகிய நந்தி பெருமானுடைய. விதிவழி யல்லது—விதித்த பாதையில் செல்வதல்லாமல். தன்மை குன்றுரே-தங்கள் பண்புகளில் குறைய மாட்டார்கள்.]

மூனிவருடைய கருத்து என்னவென்றால், ஞான குருவின் உபதேச வழியிலே செல்கிற சான்றோர்கள், இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் கண்டு நிலைகுலையார்கள். தங்கள் வழியிலேயே செல்வார்கள்.

**செற்றிலென் சீவிலென்**
**செஞ்சாந் தணியிலென்**
**மத்தகத் தேயுளி**
**நாட்டி மறிக்கிலென்**
**வித்தகன் நந்தி**
**விதிவழி யல்லது**
**தத்துவ ஞானிகள்**
**தன்மைகுன் றுரே!**

தவம் செய்து திடம் பெற்ற ஞானிகள், மத பேதங்களைக் கொண்டு அரசர்கள் நிகழ்த்தும் கொடுமைகளுக்கு இணங்கி அவர்களுக்கு அடி பணிய மாட்டார்கள்.

தத்துவஞானிகளின் ஞான வைராக்கியத்தை மேலும் விளக்குகிறார்.

**வானின்று இடிக்கிலென்**
**மாகடல் பொங்கிலென்**

[வானின்று — வானத்திலிருந்து. இடிக்கிலென்-இடி இடித்தால் என்ன. மாகடல் பொங்கிலென்—பெரிய சமுத்திரம் பொங்கி வந்தாலுமே என்ன.]

**கானின்ற செந்தீ**
**கலந்துடன் வேகிலென்**

[கானின்ற செந்தீ—காட்டுத் தியானது. கலந்துடன் வேகிலென்—நாட்டில் பரவி எல்லாம் ஒருமிக்க வெந்து விட்டாலும் என்ன.]

**தானொன்றி மாருதம்**
**சண்டம் அடிக்கிலென்**

[தானொன்றி மாருதம்—ஒரே படியாகச் சூழ்ந்து வீசும் காற்றானது.

சண்டம் அடிக்கிலென்—வலிமையோடு புயலாக அடித்தாலும் என்ன.]

நானொன்றி நாதனை
நாடுவன் நானே

[நான் ஒன்றி—நான் என்ற தன்மை இறைவனோடு ஒன்றிய நிலையிலே. நாதனை நாடுவன் நானே—தலைவனாகிய இறைவனை நான் நாடுவேன்.]

இயற்கையின் உற்பாதங்களைப் போல் பெரிய கஷ்டங்கள் ஏற்பட்டாலும், நான் இறைவனை ஒரே நிலையில் மாறாமல் நாடுவேன், இது உறுதி என்று தமது நெஞ்சின் உறுதியை எடுத்துச் சொல்லி, உபதேசம் செய்கிறார் முனிவர்.

வானின் றிடிக்கிலென்
மாகடல் பொங்கிலென்
கானின்ற செந்தீ
கலந்துடன் வேகிலென்
தானொன்றி மாருதம்
சண்டம் அடிக்கிலென்
நானொன்றி நாதனை
நாடுவன் நானே.

இந்த உறுதியை மேலும் பாடுகிறார் முனிவர்.

ஆனை துரக்கிலென்
அம்பூடு அறுக்கிலென்

[ஆனை துரக்கிலென்-மதம் கொண்ட யானை என்னைத் துரத்தினால் என்ன. அம்பு ஊடு அறுக்கிலென்—அம்பு உடம்பின் ஊடாகப் பாய்ந்து வேதனை செய்தால் என்ன.]

கானத்து உழுவை
கலந்து வளைக்கிலென்

[கானத்து உழுவை — காட்டிலேயுள்ள புலி. உழுவை—புலி. கலந்து வளைக்கிலென்—பாய்ந்து வளைத்தாலும் என்ன.]

ஏனைப் பதியினில்
எம்பெரு மான்வைத்த
ஞானத்து உழவினை
நான்உழு வேனே.

[ஏனைப்பதி—கேவல நிலை; அதாவது புறப் பொருள்களினின்று தனிப்பட்ட ஞானமாகிய வயல். ஏனைப் பதியினில்—ஞான வயலிலே. எம்பெருமான் வைத்த — இறைவன் எனக்கென்று வைத்துக் கொடுத்த. ஞானத்து உழவினை—ஞான உழவாகிய வழிபாட்டு விவசாயத்தை. நான் உழுவேனே—நான் மாறாமல் பிசகாமல் உழுது கொண்டிருப்பேன்.]

உள்ளமாகிய வயலில் ஞானமாகிய உழவு நடக்கிறது. அந்த உழவைச் செய்யும்போது யானை துரத்தினாலும் சரி, அம்பு வந்து உடம்பிலே பாய்ந்தாலும் சரி, புலி வளைத்துக் கொண்டாலும் சரி, இந்த உழவுக்கு ஊறு ஏற்படாமல் ஒரே வைராக்கியத்தோடு இதைச் செய்கிறேன் என்கிறார் முனிவர். அதாவது, எந்தச் சோதனைகள், ஆசாபாசங்கள் எப்படி வந்து மனத்தை இழுத்தாலும் அவற்றிலே சிக்கிக் கொள்ளாமல், இந்த உழவு நடைபெற வேண்டும் என்பதைத் தமக்குச் சொல்லிக் கொள்வார்போலே நமக்கு உபதேசிக்கிறார் திருமூலர்.

ஆனை துரக்கிலென்
அம்பூடு அறுக்கிலென்
கானத் துழுவை
கலந்து வளைக்கிலென்
ஏனைப் பதியினில்
எம்பெரு மான்வைத்த
ஞானத் துழவினை
நானுழு வேனே!

இந்தப் பாட்டுக்களில் சொல்லியிருப்பதைக் கீதை இரண்டாம் அத்தியாயம் 55, 56, 57 சுலோகங்களிலும் காணலாம்.

## வைத்தியர் ஸ்ரீஹரியின் சுற்றுப் பிரயாணம்

19-1-62 கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸில் சென்னையிலிருந்து புறப்பாடு. 21-1-62 டெல்லி அடைந்து, ஜந்தர் மந்தர் ரோடிலுள்ள சௌத் இந்தியா கிளப்பில் தங்குவார். 25-1-62 டெல்லியிலிருந்து ஜி. டி. யில் புறப்பட்டு 26-1-62 நாகபுரி அடைந்து, ரயில்வே ரிடையரிங் ரூமில் தங்குவார். 27-1-62 நாகபுரியிலிருந்து புறப்பாடு. 28-1-62 செகந்திராபாத் அடைந்து, அங்கே தாஜ்மகால் ஹோட்டலில் தங்குவார். 30-1-62 ஹைதராபாத் கல்தான்பஜார் ரோட் தாஜ்மஹால் ஹோட்டலில் தங்கி 31-1-62 அங்கிருந்து புறப்படுவார். 1-2-62 சென்னை வந்து சேருகிறார். மறுபடியும் 6-2-62 முதல் 9-2-62 வரை சுவாமி தரிசனத்துக்கு வெளியூர் சென்று வருவார்.




## கொசு வலை

ஒன்றாந் தேதி சம்பளம் வாங்கியதும் கடை வீதிக்குப் போய் ஒவ்வொரு கடையாக வலை போட்டுத் தேடி ஒரு கொசு வலை வாங்கிக் கொண்டு வந்து சேர்ந்தேன். கையில் கொசு வலையோடு வீட்டுக்குள் நுழையும்போது என்ன திருப்தி! என்ன திருப்தி! அந்தத் திருப்தியைச் சொல்லி மாளாது. சுவர்க்கத்தையே விலைக்கு வாங்கிப் 'பில்'லையும் கொடுத்து மீதமும் வாங்கிக் கையில் சுருட்டி எடுத்துக் கொண்டு போகிற மாதிரி இருந்தது. இன்றிலிருந்து நிம்மதியாய்த் தூங்கலாம்.

கொசு வலையைக் கட்டி விட்டு உள்ளே விரித்திருந்த படுக்கையில் சாய்ந்தேன். என்ன அநியாயம்? வலிமையான கோட்டை கொத்தளங்களையும் துளைத்துக் கொண்டு உள்ளே புகுந்து விடுகிற சாமர்த்தியமான எதிரியைப் போல் எப்படியோ ஒரு கொசு உள்ளே நுழைந்திருந்தது.

பாயின் அடியில் செருகியிருந்த வலையின் அடிக் கொசுவத்தைத் தூக்கி விட்டு எனது நித்திரைக் கோட்டைக்குள் புகுந்து விட்ட எதிரியாகிய அக் கொசுவை வெளியே விரட்டலானேன். இறுதியில் ஒருவாறு வெற்றியும் பெற்று விட்டேன். பின்பு தலை வைத்துப் படுத்துத் தூங்க முயன்ற சமயத்தில் வெளியேயிருந்து மேலும் இரண்டு எதிரிகள் கோட்டைக்குள் புகுவதற்கு முயலும் ஒலி கேட்டது. அவற்றின் முயற்சி வெற்றி பெறாது என்று உறுதியான நம்பிக்கையுடனே கண்களை மூடினேன். அப்போது எனக்குச் சிரிப்பு வந்தது. சிங்கத்தையும் புலியையும் பிடித்துக் கூண்டில் அடைத்துப் பெருமைப்படும் மனிதன் கொசுவைக் கண்டு பயந்து, தானே ஒரு கூண்டு தேடி—வலையைத் தேடி ஒளிந்து கொள்வது சிரிப்பதற்குரியதுதானே? பார்க்கப் போனால் கொசு வலை என்ற பெயரே தவறாயிற்றே. கொசுவுக்கா அந்த வலை? கொசுவுக்குப் பயப்படும் மனிதனுக்கு அல்லவா அந்த வலை உள்ளது? சிங்கத்தின் கூண்டு, புலிக் கூண்டு என்ற பெயர்களெல்லாம் சரிதான். ஏனென்றால் கூண்டில் அடைக்கப்படுகிறவை புலியும் சிங்கமுமே.

கொசுவுக்குப் பயந்து மனிதன் புகுந்து கொள்கிற வலைக்குப் போய்க் கொசு வலை என்று பெயர் வைக்கலாமா?



## செய்து காட்டுங்கள்

அன்று மாலை அந்தக் கல்லூரியில் நடந்த ஆண்டு விழாவுக்குப் புறப்பட்டுப் போயிருந்தேன். போட்டிகளில் பரிசு பெற்ற மாணவர்களுக்கு அமைச்சர் ஒருவர் பரிசுகள் வழங்கினார். வழக்கமாகத் தலைமையுரை வழங்குகிறவரின் மனைவிதான் பரிசும் வழங்குவது உண்டு. இங்கு தலைமை வகிக்க வேண்டியவரே பரிசு வழங்குவதற்கு முன்வந்திருந்தார்.

'பாட்டுப் போட்டி. முதற் பரிசு. குமாரி.......' என்று தொடங்கிப் பாட்டுப் போட்டியில் பரிசு பெற்ற மாணவியின் பெயரைக் கூறி மேடைக்கு அழைத்தார் பரிசு வழங்குகிற தலைவர். மாணவி மேடைக்கு வந்து பரிசை எதிர்பார்த்துக் கைகளை நீட்டிய போது, 'உன் பாட்டை நானும் கேட்க வேண்டாமா? மறுபடியும் ஒரு முறை எனக்காகப் பாடிக் காட்டேன்!' என்றார் தலைவர்.

மாணவியும் அவருடைய வேண்டுகோளின்படி பாடினாள். தலைவரும் மகிழ்ச்சியோடு பரிசைக் கொடுத்து அனுப்பினார்.

பாட்டுப் போட்டியில் பரிசு பெற்றவர்களுடைய பேர்கள் எல்லாம் முடிந்தவுடன் ஓட்டப் பந்தயத்தில் பரிசு பெற்றவர்களுடையபெயர்கள் ஆரம்பமாயின. "நூறு மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் பரிசு பெற்றவர் திரு.." என்று பெயரைப் படித்தார் தலைவர். ஓட்டப் பந்தயத்தில்பரிசுபெற்ற மாணவர் குறும்புக்காரர். துணிச்சலும் மிகுந்தவர்.



மேடையில் ஏறி நின்றதும் தலைவரை நோக்கி, "நான் ஓடுவதை நீங்கள் பார்க்க வேண்டாமா? கொஞ்சம் மாதிரிக்கு ஓடிக் காட்டட்டுமா?" என்று கேட்டாரே பார்க்கலாம் அந்த மாணவர்.

தலைவர் உட்பட எல்லாரும் விழுந்து விழுந்து சிரித்தனர்.

## தூங்கும் வசதி

பொழுது விடிகிற நேரம். நான் பிரயாணம் செய்து கொண்டிருந்த இரயில் ஏதோ ஒரு ஸ்டேஷனில் நின்றது. அவரவர்கள் தூக்கம் விழித்து எழுந்து காப்பி குடிக்கக் கிளம்பிக் கொண்டிருந்தார்கள்.

பக்கத்து இரயில் பெட்டியிலிருந்து எழுந்திருந்து வந்த என்னுடைய நண்பர், "இரவு நன்றாகத் தூங்கினீர்களா?" என்று என்னைக் கேட்டார். நேற்றிரவு இந்த இரயிலில் புறப்படும்போதே மூன்று ரூபாய் அதிகக் கட்டணம் கொடுத்துத் 'தூங்கும் வசதிக்கு' நான் ஏற்பாடு செய்து கொண்டிருந்தது அவருக்குத் தெரியும். அதனால்தான் அவர் என்னிடம் விடிந்ததும் இந்தக் கேள்வியைக் கேட்டார்.

"மேலே 'பெர்த்'தில் ஒரே மூட்டைப் பூச்சி மயம். நான் கண்ணை மூடவே இல்லை. மூன்று ரூபாய் நஷ்டம் எனக்கு."

'ஸ்லீப்பிங் பெர்த்' வாங்கினால் தூங்க இடம் இருக்கும் என்பது உறுதியே தவிரத் தூக்கம் வந்தே தீர வேண்டும் என்பது என்ன அவசியம்? 'தூங்கும் வசதி' என்ற வார்த்தைப் பிரயோகமே தவறு. மூன்று ரூபாயைக் கொடுத்து அந்த இடத்தைப் பெற்று விட்டால் தூக்கம் வர வேண்டும் என்பது என்ன நிச்சயம்? இரயில்வேக்காரர்கள்தான் அதற்கு அப்படி உத்தரவாதம் தருவார்களா?

அந்த வார்த்தைப் பிரயோகம் சட்டப்படி தப்பானது என்பதை வைத்து நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தால் நேற்று நான் தூங்குவதற்கு இடக் கூலியாகக் கொடுத்த மூன்று ரூபாயையும் இரயில்வே இலாகாவிலிருந்துதிரும்பப் பெறுவதோடு தூங்காமல் சிரமப்பட்டதற்காக நஷ்டஈடும் கோர முடியும். சட்டப்படி அந்த வார்த்தை 'படுக்கும் வசதி' என்றே இருக்க வேண்டும். படுப்பதற்குத்தானே அதில் இட வசதி இருக்கிறது? தூங்குவதற்கு என்ன வசதி இருக்கிறது? இந்த வாதம் நியாயமானதென்று அவர்கள் ஒப்புக் கொண்டுதானே ஆகவேண்டும்?

## எப்படி மரியாதை!

ஊருக்குப் பணம் அனுப்பி இருபத்திரண்டு நாட்கள் ஆகி விட்டன. இன்னும் எனக்கு உரிய ரசீது வந்தபாடில்லை. மணியார்டர் என்ன ஆயிற்றோ என்ற கவலை பற்றிக் கொண்டது. பணம் போய்ச் சேர்ந்திராதோ?

உள்ளம் முடிவிலா ஊசலில் உழன்றவாறு இருந்தது. கதவருகே நிழல் தட்டியது. தலையைத் தூக்கிப் பார்த்தேன். தபால்காரர் என்னவோ விட்டெறிந்து விட்டுச் சென்றிருந்தார். ஓடிப் போய் எடுத்தேன். 'அம்மாடா! நல்ல காலம்' என்ற தவிப்புத் தீர்ந்து நெடுமூச்செறிந்தேன். பணம் பெற்றுக் கொண்டவரது கையொப்பத்தைப் பார்த்ததும் ஒரு கவலை விட்டது என்று ரசீதைக் கிழித்துப் போட்டேன்.

பழையபடி வந்தமர்ந்தேன். முக்கோண வடிவமாகப் பெரும்பாலும் கிழிபட்டிருந்த 'ரசீது'த் துண்டங்கள் தெரிந்தன. எனக்கு இனம் புரியாத வேதனை எடுத்தது.



அச்சீட்டு வராதவரை எத்தனை விசாரம், எவ்வளவு மன ஊசல், எத்தகைய நிலை கொள்ளாமை! வந்து கவலையைத் தீர்த்து வைத்த அதற்கு உடனே என்ன மரியாதை!



சென்னை செங்கல், ஓடு தயாரிப்போர் சங்கத்தின் பதினைந்தாவது வருஷாந்திர விழா சென்ற மாதம் தாசப் பிரகாஷ் ஹோட்டலில் விமரிசையாக நடைபெற்றது. இந்தச் சங்கத்தின் தலைவர் திரு ஏ. ஆர். ராஜகோபாலன் விழாவுக்குத் தலைமை வகித்த தொழில் வர்த்தகத்துறை டைரக்டர் திரு சபாநாயகம் அவர்களை வரவேற்றுப் பேசுகிறார்.



புதுடில்லி எம். ஈ. ஏ. உயர்தரப் பள்ளியின் உதவி பிரின்ஸிபல் திரு ராஜகோபால அய்யங்காரின் புதல்வி சௌ. ஹேமலதாவுக்கும் திரு சுந்தரராஜனுக்கும் விவாகம் நடந்தது.

விருத்தாசலம் கல்கி ஏஜண்டு திரு வி. முனுசாமி அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழா சமீபத்தில் வெகு சிறப்பாக நடந்தேறியது.



✿



அல்பீடு போட்டோகிராபிக்ஸின் பம்பாய்க் கிளையின் மானேஜர் திரு வி. எஸ். மணியின் புதல்வி சௌ. மாலதிக்கும் திரு பக்தனுக்கும் திருமணம் மாதுங்காவில் நடந்தது.

இந்திய-பிரெஞ்சு தொழில் நுணுக்கத் திட்டப்படி இந்தியாபிஸ்டனைச் சேர்ந்த திரு எம். எஸ். சேஷாத்திரி தயாரிப்பு நிர்வாகத்தில் பயிற்சி பெறுவதற்காகப் பிரான்சு தேசத்துக்கு டிஸம்பர் 31-ந் தேதி பயணமானார்.



# தழும்பு

கௌதமி

### தேவை

**செல்வமும், அந்தஸ்தும் உள்ள குடும்பத்தில் நோய்வாய்ப்பட்டிருக்கும் ஒரு குருட்டுக் குழந்தையின் உள்ளத்துக்கு உற்சாகமும் தெம்பும் அளிக்க: அடக்கமும் அன்பும் பண்பும் பரிவும் உள்ள ஓர் இளம் நர்ஸ் தேவை. விவரத்துக்குக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு விண்ணப்பிக்கவும்.**

விலாசம் சரியாகத் தரப்பட்டிருக்கிறதா என்பதை மற்றொரு முறை பார்த்துவிட்டுப் பத்திரிகையை மடித்து மேஜை மீது வைத்தார் டாக்டர் ஸ்ரீதர். அந்த விளம்பரத்தைக் கொடுத்தது அவர்தான். அதைப் படித்ததுமே அவர் நினைவில் நிழலாடியது சியாமளாவின் உருவம்தான்.

'பாவம், சொல்லிக் கொள்ளாமல் கூடக் கிளம்பி விட்டாள். எங்கே போனாள், என்ன ஆனாள் என்ற தகவலே தெரியவில்லை' என்று அவர் உள்ளம் முனகிற்று. அந்த முனகலை அடுத்துச் சிந்தனை நான்கு மாதங்களுக்குப் பின்னோக்கி ஓடிற்று.

அன்றுதான் அவள் கட்டுக்களை அவிழ்க்க வேண்டிய தினம்.

''என் முகத்தைக் கவ்விக் கொண்டிருக்கும் இந்தக் கட்டுக்களிலிருந்து எனக்கு எப்போது விடுதலை அளிக்கப் போகிறீர்கள் என்று தவிப்புடன் காத்துக் கொண்டிருக்கிறேன் டாக்டர்!'' என்றாள் சியாமளா அவரது குரலைக் கேட்டதும்.

அவளை ஆபரேஷன் டேபிளில் கொண்டு படுக்க வைத்தார்கள். அவள்தான் மறுபடியும் பேசினாள்: ''டாக்டர்! முகத்திலே அப்படியொன்றும் விகாரமான வடு ஏற்பட்டு விடாதே?'' அவள் குரல் கம்மிற்று. டாக்டர் தன் முகத்துக்கு மிக மிக அருகில் இருக்கிறார் என்பதை அவள் உணர்ந்தாள்.

''நர்ஸ் .... ஸிஸர்ஸ் ப்ளீஸ்....''

சற்று நேரத்துக்கு அங்கே அமைதி. இடையிடையே ஆயுதங்களின் இன்னொலி மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது. முடிவில்..? டாக்டர்தான் முதலில் பேசினார்.

''சியாமளா! இனி நீங்கள் மெதுவாக எழுந்து உட்கார்ந்து கொள்ளலாம். அமைதியான மனத்தோடு அந்த ரூமிலுள்ள நிலைக் கண்ணாடியில் உங்கள் முகத்தைப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி விட்டு நர்ஸின் உதவியுடன் தமது கைகளை மருந்திட்டுக் கழுவிக் கொண்டு தூய வெள்ளைத் துணியால் துடைத்துக் கொண்டிருந்தபோது 'வீல்' என்ற கத்தல் சியாமளாவிடமிருந்து எழுந்தது. அதை எதிர்பார்த்தவர் போல டாக்டர் ஸ்ரீதர் அமைதியாக அவள் பக்கம் திரும்பாமலேயே தமது மேலங்கியைக் கழற்றிக் கொண்டிருந்தார்.

''ஐயோ, டாக்டர். இது என் முகமா? ஐயோ இந்தக் கோரமான முகம் என்னுடையதல்ல.'' கோவென்று கதறியழுதாள் அவள். ''இத்தனை விகாரமான தழும்பு ஏற்படுமென நீங்கள் சொல்லவில்லையே டாக்டர். இந்த முகத்துடன் நான் எப்படி வாழுவேன்?''

''இதை விடச் சிறந்த முறையில் உன் முகத்தை யாராலும் ஆக்கி இருக்க முடியாது. பார்க்கப் போனால் ஒரு விதத்தில் நீ அதிர்ஷ்டசாலி கூட.'' மேல் நாடு சென்று விசேஷப் படிப்புப் படித்து சஸ்திர சிகிச்சையில் தமக்கு





திகரில்லை என்று புகழுடன் விளங்குகிறோம் என்ற பெருமிதம் அவர்பேச்சில் தொனித்தது.

விரக்தியோடு சிரித்தாள் சியாமளா. ''அதிர்ஷ்டசாலிதான்! என் தாயாரின் உயிரைப் பலி கொண்ட நெருப்பிலே நானும் பொசுங்கிப் பொடியாகாமல் இந்த அவல நிலைக்கு ஆளாகித் துடிக்க உயிர் பிழைத்து விட்டேனல்லவா, நான் அதிர்ஷ்டசாலிதான் டாக்டர். ஆசைகள் பொங்கி வழியும் உள்ளத்துடன் இன்ப வாழ்வு வாழத் துடிக்கும் யுவதியாக இருந்த நான் இன்று பிறர் பார்வையிலே வெறுப்பை வளர்க்கும் வடிவமாக மாறிவிட்டேனே. அதற்காக என்னை அதிர்ஷ்டசாலி என்கிறீர்களா டாக்டர்?'' உள்ளம் வெடிக்க அழுதாள் அவள்.

''சியாமளா! உன் வேதனை எப்படிப்பட்டதென்று எனக்குத் தெரியும். உனக்குத் தனிமையும் ஓய்வும் வேண்டும்'' என்று சொல்லி விட்டுப் போனவரைக் கடமை வேறு ஊருக்கு அழைத்தது. மூன்று நாட்கள் கழித்துத் திரும்பிய ஸ்ரீதருக்கு, சியாமளா திடீரென்று மறைந்த விஷயத்தை நர்ஸ்தான் கூறினாள்.

மேஜை மீது கால்களை உதைத்து நாற்காலியை அதன் பின் இரண்டு கால்களில் நிற்கசெய்து ஒய்யாரமாக ஆடியபடியே ஏதோ ஒரு வைத்தியப் புத்தகத்தில் ஆழ்ந்திருந்த ஸ்ரீதரை அந்தக் குரல் நிமிர்ந்து நேராக உட்கார வைத்தது.



''நமஸ்காரம் டாக்டர்!''

வணக்கம் தெரிவித்துமுன் நிற்கும் உருவத்தைப் பார்த்ததும் அவர் முகம் மலர்ந்தது. ''ஓ...சியாமளாவா? நமஸ்காரம். மனம் ஒரு நிலைப்பட்டு அமைதியடைந்திருக்கும் என்று நினைக்கிறேன்'' என்றார்.

அவளது வெளியேற்றத்தைப் பற்றி அவர் கேட்கவில்லை. அவளாகவே, ''யாரிடமும் அறிவிக்காமல் இங்கிருந்து நான் வெளியேறியதற்கு முதலில் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன் டாக்டர்!'' என்றாள்.

''பரவாயில்லை....!'' பால் வண்ணப் பல்வரிசை ஒளி வீசச் சிரித்தார் டாக்டர். ''மறுபடியும் இங்கேயே திரும்பி வந்ததற்காக சந்தோஷமே அடைகிறேன்.''

''விளம்பரத்தைப் பார்த்தேன். என் அவலட்சணத்தைக் கண்டு முகம் கடுக்க முடியாத அந்தக் குருட்டுப்பெண்ணுக்கு, உலகத்தாரிடமிருந்து ஒதுங்கி வாழ நினைக்கும் என்னால் பயன் இருக்கும் என்று நினைத்து வந்தேன்.''

''சியாமளா! இந்த உலகில் பயனில்லாத பொருள்களே கிடையாது. என் 'பேஷண்டு' வஸந்தாவுக்கு எட்டு வயதுதான். அவளுக்கு உன் அன்பும் ஆதரவும் அவசியம் வேண்டும்.''

''ஒரு நிபந்தனையின் மீதுதான் நான் இந்த உத்தியோகத்தை ஏற்றுக் கொள்ள முடியும். குழந்தை, குழந்தைகளின் பெற்றோர்களைத் தவிர வேறு யாரும் என் தனிமைக்குப் பங்கம் விளைவிக்கக் கூடாது.''

''இவ்வளவுதானே? இன்னும் ஏதாவது உண்டா?'' என்று மோகனமாக அவளைப் பார்த்துச் சிரித்தார் டாக்டர்.

அவள் சிரிக்கவில்லை. ''அவ்வளவுதான்'' என்றாள் அமைதியாக. பிறகு, ''குழந்தை பிறவிக் குருடா?'' என்று கேட்டாள்.

''இல்லை. அவளுடன் பழக வேண்டிய நீ அவளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டியதும் அவசியம்தான். கடந்த தீபாவளியன்று வரை, கருவண்டைப் போலத் துருதுருவென்று வஸந்தாவின் கண்கள் ஜ்வலித்துக் கொண்டு தானிருந்தன. அஜாக்கிரதையாக யாரோ கொளுத்திய வெடி ஒன்று குழந்தையின் கண்களிலே இருளை உண்டாக்கி விட்டது.''

''ம்...பாவம்! என்னைப் போலவே அவளும் ஒரு துர்ப்பாக்கியவதிதானா?''

''முதல் ஆபரேஷனில் வெற்றி கிடைக்கவில்லை. அதோடு ஆஸ்பத்திரி அனுபவம் குழந்தையின் மனத்திலே கிலியை வேறு உண்டாக்கி விட்டது'' என்று தொடர்ந்தார் டாக்டர். ''என்னையும் தன் பெற்றோர்களையும் தவிரப் பிறரிடமும் பயமில்லாமல் பழகும் பழைய நிலைக்கு நாம் குழந்தையைக் கொண்டுவந்தாக வேண்டும்.''

''என்னால் இது முடியுமா?'' நம்பிக்கை இல்லாமல் கேட்டாள் சியாமளா.

''ஏன் முடியாது? அன்பினால் ஆகாதது உண்டா? குழந்தை பழைய நிலைக்கு வந்த பிறகுதான் அவள் அடுத்த ஆபரேஷனுக்குத் தகுதியுள்ளவளாக முடியும்'' என்று ஒரு காகிதத்தில் எதையோ எழுதலானார். பிறகு ''இதோ இதுதான் அந்தக் குழந்தையின் வீட்டு விலாசம். நான்டெலிபோனில் சொல்லி விடுகிறேன். நீ நாளைக்கே அங்கு போகலாம்'' என்று ஒரு காகிதத்தை நீட்டினார்.

டாக்டரிடமிருந்து அந்த வீட்டின் விலாசத்தை வாங்கிக் கொண்ட அதே விநாடி அவரது அறையின் தள்ளு கதவை விரியத் திறந்தபடி, ''ஹலோ டாக்டர், ஆர் யூ ரெடி?'' என்ற குரல் கேட்டது. டாக்டர், சியாமளா இருவருமே திரும்பினார்கள்.

''ஓ...மிஸ் சியாமளாவா? ஹௌ ஆர் யூ?'' என்று கேட்டவள் உடனே பரிதாபத்துடன் ''டாக்டர் இதைப் பற்றி என்னிடம் சொல்லவே இல்லை சியாமளா. எத்தனை பெரிய தழும்பு? அப்படியே மறையாமல் நின்றுவிட்டதே. ம்....மனத்துக்கு ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது'' என்றாள்.

அடுத்த விநாடி சியாமளா குமுறி வரும் அழுகையை அடக்கமாட்டாதவளாகக் கைக்குட்டையால் வாயை அழுத்திக்கொண்டு அந்த அறையை விட்டு ஓடினாள்.

''சியாமளா — நில் — நில் சியாமளா!'' தவிப்போடு கூப்பிட்டாள் புதியவள்.

''இல்லை, சுந்தரி அவளைக் கூப்பிடாதே. எதை அவள் மறந்து விட வேண்டுமென்று

நினைத்தேனே அதை அவளுக்கு நினைவுபடுத்தி விட்டாய் நீ. இனி அவள் நிற்க மாட்டாள்'' என்ற அவர் முகத்தில் வேதனை தன் கிறல்களைப் பதித்திருந்தது.

வழியெல்லாம் கட்டுப்படுத்தி வந்த அழுகை அறைக்குள் நுழைந்ததும் இரட்டிப்பு வேகத்துடன் பீறிட்டது. 'கோ'வென்று வாய் விட்டுக் கதறினாள். எதனால் அவள் கர்வம் கொண்டிருந்தாளோ அந்த அழகு அழிந்ததை அவளால் தாங்கவே முடியவில்லை. இப்படி ஒரு நிலை பிறவியிலேயே ஏற்பட்டிருக்குமானால் அது அவளைப் பாதித்திருக்காது.

சுந்தரி அவள் தோழிதான். அவளைவிடத் தான் அழகி என்று கர்வப்பட்ட காலம் உண்டு. டாக்டர் ஸ்ரீதரின் கவனத்தைக் கவருவதில் தான் வெற்றி பெறுவோம் என்று இறுமாந்திருந்த இதே உருவத்தை இன்று அதே சுந்தரி கண்டு பீதியடைவதானால் ஒரு பெண் மனத்தினால் அதைத் தாங்க முடியுமா?

தவித்தாள் — தாங்க முடியாத வேதனை வெறுப்பாக வளரலாயிற்று. தன்னைப் போன்ற இளம் பெண்கள் சிரித்துச் சிங்காரமாக உடுத்தி உல்லாசமாக ஓடியாடுவதைக் கண்டு பொறுமைப் பட்டாள். 'என் வாழ்வு மட்டும் ஏன் இப்படித் தட்டிப் பறிக்கப்பட வேண்டும்? நான் கண்ட கனவுகள் எத்தனை?' என்று வேதனைத் தீயிலே வெந்து கருகலானாள். மனிதர்களின் பார்வையிலிருந்து விலகித் தனித்து வாழ வேண்டும் என்று உறுதி பூண்டாள்.

சியாமளா, டாக்டர் ஸ்ரீதர் குறிப்பிட்ட குழந்தையின் நர்ஸாக அமர்ந்து உலகத்தாரிடமிருந்து ஒதுங்கி வாழலானாள். குழந்தை வஸந்தாவுக்குச் சியாமளாவைப் பிடித்து விட்டது. அவள் குரல் ரொம்பவும் இனிமையாக இருப்பதாகக் கபடமற்ற குழந்தை சொல்லிக் குதூகலப்பட்டது. 'என் முகத்தைப் பார்த்தால் இப்படிக் குதூகலப் படமாட்டாய்' என்று மனத்துக்குள் சொல்லிக்கொண்டாள் சியாமளா. குழந்தையின் அருகில் இருக்கும் போது அவள் தன் கன்னத்தை மறைத்துக் கட்டிக் கொண்டிருக்கும் ஸ்கார்பையும் கூட எடுத்து எறிந்து விட்டுப் பழகினாள்—குழந்தையால் தன் கோர முகத்தைக் காண முடியாது என்ற தைரியத்தில்.

டாக்டர் ஸ்ரீதரின் திட்டமே அதுதான். அவள் பிறரிடமிருந்து கூசிக் குறுகி ஒதுங்கி வாழாமல் மெல்ல மெல்லத் தன் குறையை மறந்து குதூகலமாக வாழ வேண்டும் என்று எண்ணினார். ஒரே கல்லில் இரண்டு பறவைகளை வீழ்த்த வேண்டும் என்றே சியாமளாவை வஸந்தாவின் தோழியாக்கி வைத்தார். வஸந்தாவுக்குக் கண்ணைத் தர வேண்டும். அதே சமயத்தில் சியாமளாவின் மனத்திலும் வாழ்விலும் புரட்சி ஏற்பட்டு உலகை வெறுத்து ஒதுங்கி ஓடுவதிலிருந்து அவளைக் காப்பாற்றியாக வேண்டும்.

தன் திட்டம் எவ்வளவு தூரம் நிறைவேறுகிறது என்பதை அடிக்கடி வஸந்தாவைக் காண வரும் சாக்கில் அங்கு வந்து கவனித்து வரலானார். அப்படி ஒரு நாள் அவர் வந்த போது கூடவே சுந்தரியும் வந்திருந்தாள்.

துரைராஜும், பானுமதியும் வஸந்தாவின் பெற்றோர்கள். செல்வந்தர் என்ற கர்வம் துளிக்கூட இல்லாமல் ஒட்டுதலாக இருப்பார்கள். பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த டாக்டர் ''சியாமளா வந்ததிலிருந்து வஸந்தா என்னைக் கூட மறந்து விட்டாள்'' என்றார். அப்போது குழந்தையுடன் சியாமளா இல்லை. டாக்டரையும் குழந்தையையும் தனியே விட்டுச் சுந்தரியுடன் அவள் பெற்றோர் தோட்டத்துப் பக்கம் பேசியபடியே போய் விட்டார்கள்.

''டாக்டர் மாமா, சியாமளா அக்காவை எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிச்சிருக்கு. அந்த அக்கா எங்கிட்டே எவ்வளவு அன்பாக இருக்கா தெரியுமா? ஏன் டாக்டர் மாமா, சியாமளா அக்கா ரொம்ப நல்லவ இல்லே?''

''ஆமாம்மா, சியாமளா அக்கா ரொம்ப நல்லவ. அவ ஒரு அபூர்வமான பிறவி'' என்றார் டாக்டர்.

''ஏன் டாக்டர் மாமா...இந்த உலகத்திலே ஒவ்வொருத்தரும் சியாமளா அக்காவைப் போல் பிறத்தியார்கிட்ட அன்பா இருப்பாங்களா?''

''ஒவ்வொருவரும் பிறரிடம் அன்போடிருந்தால் இந்த உலகம் சுவர்க்கமாக மாறி விடும் வஸந்தா.''

சிறுமி வஸந்தாவுக்கு டாக்டரின் தத்துவம் புரியவில்லை.

''அது எப்படி டாக்டர் முடியும்? இப்போ சுந்தரி மாமியையும் தான் எனக்குப் புடிச்சிருக்கு. ஆனா சியாமளா அக்காவைப் போல





''செஞ்சுரி - நாட் அவுட்!''
''யாருடா?''
''எங்க தாத்தா தான்டா.''

---

அத்தனை பிடிச்சிருக்குன்னு சொல்ல முடியுமா? ஏன் டாக்டர் மாமா, உங்களுக்கு யாரை ரொம்பப் பிடிச்சிருக்கு?'' என்று கேட்டாள்.

''வந்து... வந்து ....வஸந்தா இது ரொம்பச் சிக்கலான கேள்வி. நாம்ப இப்படி வைத்துக் கொள்ளுவோம். சுந்தரி, சியாமளா இரண்டு பேரையுமே எனக்குப் பிடிச்சிருக்கு... ஆனா அவா ரெண்டு பேரும் வெவ்வேறு மாதிரி... ம்....உனக்கு இப்படிச் சொன்னால் புரியாது. உனக்கு மல்லிகைப்பூ பிடிக்குமா? ரோஜாப்பூ பிடிக்குமா?'' என்றார் டாக்டர்.

தம்மைச் சங்கடத்திலாழ்த்திய வஸந்தாவை டாக்டர் குழம்ப வைத்தார். ''ம்.... வந்து....'' என்று தயங்கியதும் ''பாத்தியா, பாத்தியா? இப்ப உன்னாலே எது பிடிக்கும்னு சொல்ல முடியல்லையோன்னோ? என்னு இரண்டுக்குமே ஜோரான வாசனை இருக்கு. ஆனா வெவ்வேறு வித வாசனை. அது போலத்தான். ம்..ரைட்டோ. நான் போய்ச் சியாமளா அக்காவை அனுப்பறேன், என்ன?'' மெள்ள அவளிடமிருந்து தப்ப முயன்றார்.

திரும்பியவரின் முன்னால் சியாமளா ஓசையின்றி வந்து நின்றாள். அத்தனை நேரம் அவள் மறைவில் தான் நின்று கொண்டிருந்தாள்.

''சியாமளா! ஏன் இப்படி நீ கலகலப்பாக இல்லாமல் ஒதுங்கி ஒதுங்கிப் போறே, ம்...? இது எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கல்லே'' என்றவரைக் குழந்தையின் அருகிலிருந்து சற்றுத் தொலைவுக்கு அழைத்துச் செல்ல மெல்ல நடக்கலானாள் சியாமளா. ஸ்ரீதரும் அவளைத் தொடர்ந்தார்.

''இங்கிருந்தே ஓடிப் போய் விட வேண்டுமென்று கூட அனேக தடவைகள் நினைத்ததுண்டு... ஆனால்...'' என்றாள் சியாமளா.

''வஸந்தாவினால் நீ இல்லாமல் வாழ முடியாது சியாமளா....''

''அது கூடத் தவறு. வஸந்தா இல்லாமல் என்னால்தான் வாழ முடியாது. இந்த அவலக்ஷணத்திடம் அன்பு காட்டும் ஒரே ஆத்மா அவள்தான்டாக்டர்!'' அவள் குரல் கம்பியது.

''சியாமளா, குழந்தை உன்னிடம் தன் உயிரையே வைத்திருக்கிறாள். வீணாக இந்த வெறுப்புணர்ச்சியை வளர விடாதே.''

சியாமளாவின் கண்களில் நீர் முட்டி நின்றது. உதடுகள் துடித்தன. ஒரு நிமிஷம் அவரைப் பார்த்தாள். பிறகு ''வஸந்தாவின் நிலையிலே திருப்திகரமான இந்த மாறுதலை நான் உண்டாக்கியதற்காகத்தானே டாக்டர் நீங்கள் என்னிடம் பரிவு,இல்லை பச்சாத்தாபம் காட்டுகிறீர்கள்?'' என்றாள்.

டாக்டரின் முகம் சிவந்தது. மெல்ல அவளுடன் நடந்து கொண்டிருந்தவர் சட்டென்று நின்றார். ''சியாமளா! இந்த உன் கேள்விக்கு என்னால் பதில் சொல்ல முடியும். ஆனால் இப்போது அதைச் சொல்ல நான் விரும்பவில்லை. நான் வருகிறேன். வஸந்தா உன்னை எதிர்பார்த்துக் காத்திருக்கிறாள்'' என்றவரின் பூட்ஸ் ஒலி வெகு தூரத்தில் தேய்ந்து போவதைக் கேட்டுக் கொண்டே சிலையாக நின்றாள் சியாமளா. சிலையின் கண்களிலிருந்து மட்டும் அருவி பெருக்கெடுத்து வழிந்து கொண்டிருந்தது.

''டாக்டர்! டாக்டர்! மல்லிகையும்ரோஜாவும் மணமுள்ள மலர்கள்தான். ஆனால் - ரோஜாவின் கவர்ச்சி மல்லிகைக்கு வருமா? மலர்களின் அரசியல்லவா ரோஜா? மல்லிகைக்கு மனத்தை மகிழ்விக்கும் மணமிருந்து என்ன பயன்?'' என்று அவள் உள்ளம் அழுது கொண்டிருந்தது.

''அக்கா, அக்கா!'' என்ற குரல் தூரத்தில் இருந்து கேட்டது. ''இதோ வந்து விட்டேன்டா, கண்ணு!'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டு குழந்தையின் அருகில் ஓடினாள் சியாமளா.

''அங்கே யார் கூட அக்கா பேசிக் கொண்டிருந்தே?''

''யார் கூடவும் பேசல்லியே....''

''அக்கா, டாக்டர் மாமா சொல்றார்...'' என்று தொடர்ந்தாள் குழந்தை.

சியாமளாவுக்கு ஏனோ அழுகை கொப்பளித்துக் கொண்டு வந்தது. ''அவர் சொன்னதை யெல்லாம் என்னிடம் சொல்லாதே வஸந்தா'' என்றாள்.

குழந்தை வஸந்தாவின் உற்சாகம் குன்றி விட்டது. தொங்கிய குரலில், ''ஏன் அக்கா அழறே? நான் ஏதானும் தப்பு செய்து விட்டேனா?'' என்றாள்.

காட்சிகளைக் காணக் கொடுத்து வைக்காத வஸந்தியை வாரி அணைத்துக் கொண்டாள். ''நீ ஒரு தப்பும் செய்யலேடா கண்ணு! டாக்டர்கிட்ட என் மனத்தைப் பறிகொடுத்து விட்டு நான் தான் தப்பு செய்து விட்டேன். தோட்டத்துக்குப் போகலாம் வா. அங்கிருக்கும் விதம்விதமான பூக்களைப் பற்றி எல்லாம் சொல்கிறேன் வா'' என்று அழைத்துக் கொண்டு போனாள்.

அன்று இரவு வஸந்தாவுக்குத் தூக்கம் வரவில்லை. சியாமளாவோ மாலையிலிருந்து கலகலப்பாக இல்லை.

''என்னக்கா பேசவே இல்லை?''

''ம்.... என்ன சொன்னே வஸந்தா....'' என்று சிந்தனையிலிருந்து விடுபட்டுக் கேட்டாள் சியாமளா.





# எனக்கு உண்மையிலேயே ஒரு பாங்குக் கணக்கு தேவையா?

அவசியம் உங்களுக்குத் தேவைதான். உங்களுடைய சேமிப்புகளை பாங்கில் வைத்திருப்பதால் அவற்றிற்கு வட்டி சேருகிறது. தவிர, அவை திருட்டுப் போகாமலும் தொலைந்து விடாமலும் பத்திரமாய் இருக்கும். பாங்கில் கணக்கு வைத்திருப்பதால் அது மேலும் உங்களை சேமிக்கத் தூண்டலாம்.

**ஆனால் ஒரு அவசர நிலையில் எனக்குப் பணம் தேவைப்படும் போது, என்ன செய்வது?**
நீங்கள் சுலபமாக - பாங்கிலிருந்து முன்னறிவிப்பின்றி துரிதமாய் - பணம் எடுக்க முடியும். வருங்காலத் தேவைக்குப் பயன்படவே சேமிப்புகள் இருக்கின்றன.

**ஆனால், எங்களிடம் அதிகப் பணம் இல்லையென்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?**
அதனால் பரவாயில்லை. மிகக் குறைந்த தொகையான ரூ. 5 வைத்துக் கொண்டு கூட ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவில் ஒரு சேமிப்புக் கணக்கு நீங்கள் ஆரம்பிக்கலாம்.

**உண்மையாகவா?**
ஆம், ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவில்தான். தேசம் முழுவதும் 900க்கு மேற்பட்ட ஆபீஸ்களை உடைய ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா நாட்டிற்குச் சேவை செய்து கொண்டிருக்கிறது. மேற்கொண்டு என்னவென்றால், உங்களுடைய சேமிப்புகளை ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவில் போட்டு வைப்பதால் உங்களுக்குச் சொந்த அனுகூலங்கள் ஏற்படுவதைத் தவிர, தேசப் பொருளாதார அபிவிருத்தியில் நீங்களும் பங்கு எடுத்துக்கொண்டதாக ஆகும்.

**ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவா?**
ஆம், ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாதான்.



**ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா**
இந்தியாவின் தலைசிறந்த பாங்கு

''உனக்குத் தூக்கம் வருது போலிருக்கு. அதுதான் இப்படிப் பேசாமே இருக்கே.''

சியாமளாவிடமிருந்து நீண்டதொரு பெருமூச்சு வெளிப்பட்டது. ''நான் தூங்கி எத்தனையோ நாளாச்சுடா கண்ணு. ஜன்னல் வழியாக அம்புலி மாமா போட்டிருக்கும் அழகான நிழற் கோலங்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.''

குழந்தைக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. ''இல்லே, நீ எங்கிட்ட எதையோ மறைக்கிறே அக்கா. நீ அடிக்கடி பெருமூச்சு விடறயே, அது ஏன்? என்னோட இருக்க உனக்குப் புடிக்கல்லியா, அக்கா?''

''ஐயையோ! அப்படியெல்லாம் இல்லேடா கண்ணு. உன்னை எனக்குப் பிடிக்கலேன்னு இந்த உலகத்திலே வேறு யாரை எனக்குப் பிடிக்கப் போறது?'' சியாமளாவின் குரல் தழுதழுத்தது.

''ஏன் அக்கா அழறயா?''

''இல்லையே....''

''என்னாலே பாக்க முடியாதுன்னு தானே பொய் சொல்றே? இப்ப என்னைக் கட்டிக் கொண்ட போது உன் கன்னமெல்லாம் ஈரமா இருந்துதே. அது ஏனும்?''

''வந்து ...வந்து ...கண்ணிலே ஏதோ ஒரு பூச்சி விழுந்து விட்டது. அப்போ பிடிச்சு அதான் உறுத்திக் கொண்டே இருக்கு'' என்றாள் சியாமளா பலவந்தமாகச் சிரிப்பை வரவழைத்துக் கொண்டே.



''அன்னிக்கு டாக்டர் மாமா கூடச் சொல்லிக் கொண்டிருந்தாக்கா. உன்னோட கண்ணத்திலே பூச்சி விழுந்திருக்காம். அதை எடுத்தாகணுமாம். அப்படின்னு என்ன அக்கா?''

''என்னமோ எனக்குத் தெரியல்லே. அவர் டாக்டரல்லவா, அவருக்குத்தான் இந்தப் பூச்சி விஷயமெல்லாம் தெரியும். நாளைக்கு அவர் வந்ததும் அவர் கிட்டயே கேளு....''

குழந்தை விடவில்லை. ''ஏன் அக்கா நீ அன்னிக்கு டாக்டர் மாமாவும் சுந்தரி மாமியும் டென்னிஸ் ஆடக் கூப்பிட்டதுக்குப் போகல்லே....?'' என்று வேறொரு கேள்வியைப் போட்டாள்.

''எனக்கு டென்னிஸ் ஆட வராதுடா கண்ணு.''

''பொய்... ம்... டாக்டர் மாமா சொன்னாரே...?''

''என்ன சொன்னார்?'' — ஆவலில் நெஞ்சம் தவித்தது.

''நீ ரொம்ப நன்னா டென்னிஸ் ஆடுவேன்னு. அது சரிக்கா. டாக்டர் மாமா, சுந்தரி, நீ எல்லாரும் ஒண்ணா சேர்ந்து படிச்சீங்களாமே, நிஜமாவா அக்கா?'' கேள்வி மேல் கேள்வியாக அடுக்கலானாள் வஸந்தா.

''அந்தக் கதையை எல்லாம் டாக்டர் மாமா உன்னிடம் சொன்னாரா?'' என்றாள் சியாமளா விரக்தியுடன்.

''ஆமாம் அக்கா. அவர் டாக்டருக்குப் படிக்கிறதுக்கு முன்னாலே காலேஜிலே உங்களோடதான் படிச்சாராம். நீங்கதான் காலேஜிலேயே ரொம்பக் கெட்டிக்காரியாமே, வாஸ்தவமாக்கா?''

''படிப்பிலே கெட்டிக்காரியாக இருந்து என்ன பண்றது? வாழ்க்கையிலே என்னை விதி அசடாக்கிவிட்டதே வஸந்தா!'' வாய் விட்டு அழ வேண்டும் போலிருந்தது சியாமளாவுக்கு.

''என்னக்கா சொல்றே...?'' புரியவில்லை அவளுக்கு.

''ஒன்றுமில்லே, நீ தூங்கு. நேரமாகிறது.'' வஸந்தாவுக்குத் தூக்கம் வரவில்லையே!

''டாக்டர் மாமா வந்தா நீ ஏன் அக்கா என்னை விட்டுட்டு உள்ளே உள்ளே போய் விடறே? பாவம் டாக்டர் மாமா ரொம்ப வருத்தப்பட்டுக் கொண்டார். நீ அவரோட காப்பி சாப்பிடக்கூட நிக்கிறதில்லையாமே?'' குழந்தை வஸந்தாவின் கேள்விகள் டாக்டர் மாமாவையும் சியாமளாவையும் பற்றியே வட்டமிட்டுக் கொண்டிருந்தன.

துக்கம் தொண்டையை வந்து அடைத்தது சியாமளாவுக்கு. ''அவரோடு காப்பி சாப்பிடவும் கலகலவென்று சிரித்தபடி காதல் பேச்சுப் பேசவும்தான் சுந்தரி இருக்கிறாளே. ...ம். சரி, வஸந்தா நீ தூங்கப் போறியா இல்லையா?'' குரலில் கண்டிப்புக் கலந்திருந்தது இப்போது.

''தூங்கறேன். நீ எனக்கு ஒரு கதை சொல்லு.''

''ம்...சரி. ஸ்வப்னபுரிங்கற ராஜ்யத்தில் சுகுமாரிங்கற ராஜகுமாரி இருந்தாளாம். அவள் ரொம்ப அழகியாம். தன் அழகிலே அவளுக்கு எப்போதுமே ஒரு கர்வம் உண்டாம். ஒரு நாளைக்கு அரண்மனையிலே திடீரென்று தீப்பிடித்து...''

அந்தக் கோர விபத்தைக் கேட்கக் குழந்தை வஸந்தா விழித்துக் கொண்டிருக்கவில்லை. — அவள் நன்றாகத் தூங்கி விட்டாள்.

அன்று டாக்டர் உத்ஸாகமாகக் காணப்பட்டார். சியாமளா தனியாக இருந்தாள். குழந்தை வஸந்தா அவள் தாயாருடன் எங்கோ போயிருந்தாள்.

''சியாமளா. ஒரு நல்ல செய்தி. குழந்தை வஸந்தாவுக்கு இன்னும் இரண்டு நாளில் ஆபரேஷன் செய்து விடலாம் என்றிருக்கிறேன்'' என்றார் டாக்டர் வரும் போதே. சியாமளாவின் முகத்தைப் பார்த்ததும் ''ஏன் சியாமளா இப்படித் திகைத்துப் போய் நிற்கிறாய்?'' என்றார்.

''மாரிக் காலத்திலே பனிக்கட்டி மாளிகை வாழ்வு பரம சுகமென்று எண்ணிக் கொண்டிருந்த எனக்கு, தகிக்கும் வெயில் காலம் வரப் போகிறது என்ற எண்ணமே வரவில்லையே? அந்த அறிவீனத்தை நினைத்துப் பார்த்துக் கொண்டேன்'' என்றாள் சியாமளா.

''நீ என்ன சொல்லுகிறாய் சியாமளா?''

''நான் அமைத்துக் கொண்ட சின்னஞ்சிறிய இன்ப உலகம் என் காலடியிலேயே சுக்கு நூறாக உடைந்து விழப் போவதைத் தான் சொல்லுகிறேன், டாக்டர்!''

''உன் இன்ப உலகம் உடைந்து சிதறுவானேன்?''

''என்னிடம் அன்பு காட்டும் ஒரு வஸந்தாவை அடைந்ததற்கு நான் எத்தனையோ பெருமைப்பட்டேன் டாக்டர். வஸந்தாவுக்குப் பார்வை வரப் போகிறது. ஆனால் எனக்கு...?'' அவள் கண்கள் கலங்கின.

''அவளுக்குப் பார்வை வருவதற்குக் காரணமாக இருந்தது சியாமளாதான் என பதை.....''

டாக்டரை முடிக்கவிடாமல் வெடுக்கென்று பேசினாள். ''யாரும் சொல்ல வேண்டாம்.'' அவள் குரல் கனத்து விட்டது. ''இன்று குழந்தை என்னிடம் பேசும் போதும் பழகும் போதும் தன் குரலிலே அன்பைக் குழைத்துக் கொட்டுகிறாள். ஆனால் அவள் என்னைப் பார்க்கும் நிலை வந்தால் அப்போது அந்தக் குரல் என்னைப் பார்த்துப் பரிதாபப்படும். ஏன், பயப்படவே செய்யும்.'' அவளால் அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

டாக்டர் அவளை—உடல் குலுங்க அழும் அவளைப் பார்த்தார். ''இந்த மாதிரியான கற்பனைகள் எல்லாம் நீயாக ஏன் செய்து கொள்ளுகிறாய் சியாமளா?''

''டாக்டர்! என்னை அழகி என்று எண்ணிக் கொண்டிருக்கிறாள் வஸந்தா. அந்த எண்ணத்திலேதான் அவளும் நானும் நெருங்கிப் பழகி வருகிறோம். ஆனால் என் உண்மை நிலையை அவள் பார்த்து விட்டால்...?''



ஸ்ரீதருக்குப் பொறுமை போய் விட்டது. ''சியாமளா! அப்படியானால் குழந்தைக்குப் பார்வை திரும்புவதை நீ விரும்பவில்லை, ஏன் அப்படித் தானே?'' என்றார் கடுமையாக.

''ஐயையோ! அப்படியெல்லாம் சொல்லாதீர்கள் டாக்டர்!'' தவித்துப் போய் விட்டாள். ''இந்த உலகத்திலே துர்ப்பாக்கியவதியாக நான் ஒருத்தி இருப்பது போதும் டாக்டர், போதும். குழந்தையின் கண்களுக்கு—அவள் வாழ்க்கைக்கு ஒளியைக் கொடுங்கள். பாசத்திலே பிறந்த உணர்ச்சியிலே ஏதேதோ உளறி விட்டேன். அதற்காக என்னை மன்னித்து விடுங்கள் டாக்டர்!'' இதைச் சொல்லிவிட்டு மருண்ட மானெனை ஓடினாள் சியாமளா.

!" அன்று இரவு குழந்தை வஸந்தா சியாமளா அக்காளிடம் ஏதோ ஒரு மாறுதலை உணர்ந்தாள். ''சியாமளா அக்கா, நீ ஏன் இன்னிக்கு என்னை அடிக்கடி கட்டிண்டு முத்தம் கொடுக்கறே....ம்?'' என்று கேட்டு விட்டாள்.

''வெறுமனே தாண்டாம்மா.....இனிமே உன்னை...'' வார்த்தைகள் முற்றுப்பெறாமல் வாய்க்குள்ளேயே மடிந்து போயின.

''ஏன் அக்கா பேசல்லே? பாதியிலே நிறுத்திக் கொண்டு விட்டே? இன்று முழுதுமே நீ என்னவோ மாதிரிப் பேசறே. அடிக்கடி பெருமூச்சு விடறே.....அழறயா?''

இதற்குமேல் சியாமளாவினால் சமாளிக்க முடியவில்லை. ''நாளைக்கு நீ டாக்டர் மாமா கூட ஆஸ்பத்திரிக்குப் போகப் போறயோன்னோடாம்மா, அதை நினைத்துத்தான் கவலைப் பட்டுக் கொண்டிருக்கேன்'' என்றாள்.

''கவலையே படவேண்டாம்னு, எங்கம்மா கிட்ட டாக்டர் மாமா சொல்லிக் கொண்டிருந்தார் அக்கா. அது சரி....உனக்குத் தெரியுமோ?''

''என்ன? தெரியாதே....''

''டாக்டர் மாமா, எனக்குப் புதிசா ரெண்டு கண்ணு வச்சுப் பதிக்கப் போறாராம். அது கொஞ்சங்கூட வலிக்கவே வலிக்காதாம். ஏன் அக்கா நிஜம்தானு?'' என்று உறுதி செய்து கொள்ளக் கேட்டாள் குழந்தை.

''டாக்டர் மாமா சொல்றது எல்லாமே நிஜம்தான் வஸந்தா.''

''புதுக்கண்ணு பதிச்சப்புறம் நான் எல்லாத்தையும் பாக்கலாமாம். டாக்டர் மாமாவை, உன்னை எல்லாரையும் பார்க்க முடியுமா அக்கா?'' தான் கேட்கும் கேள்வியின் தன்மை யறியாது கேட்டது குழந்தை.

''டாக்டர் மாமாவைப் பார்க்கலாம். இந்த உலகத்தையே நீ வியப்பு வழியும் கண்களால் பார்க்கலாம் கண்ணே!'' என்று சொல்லும் வரை சிரமப்பட்டு அடக்கப்பட்டிருந்த துக்கம் கட்டவிழ்த்துக் கொண்டது. தலைப்பினால் வாயை மூடிக் கொண்டு பொருமினாள். ''ஆனால் உன் அக்காவை மட்டும் உன்னால் பார்க்கமுடியாது. உனக்குப் பார்வை வந்த பிறகு அவள் இங்கே இருக்கப் போவதில்லே'' என்று மெதுவாகச் சொல்லிக்கொண்டாள்.

''என்னக்கா சொல்றே....?''

''ஒண்ணுமில்லே கண்ணு....''

''டாக்டர் மாமா சொன்னார். ஆஸ்பத்திரியிலே இருக்கிற நர்ஸ்கள் எல்லாருமே உன் மாதிரி அன்பா இருப்பாளாம். நீ சொல்றமாதிரியே கதை எல்லாம் சொல்லுவாளாம். என்னோடு விளையாடுவாளாம். ஆனா எனக்கென்னவோ டாக்டர் மாமா சொல்றதிலே நம்பிக்கை இல்லே'' என்றாள் வஸந்தா.

''இல்லேடா கண்ணு. டாக்டர் மாமா சொல்றது அத்தனையும் உண்மை. பொய்யே இல்லே. அவர்கிட்ட உள்ள நர்ஸ்கள் எல்லாருமே ரொம்ப நல்லவர்களாக்கும்'' என்றாள் சியாமளா.

''என்ன இருந்தாலும் என் சியாமளா அக்காபோல ஆகுமா?''

சியாமளாவின் குரல் தழுதழுத்தது. ''கண்ணே வஸந்தா, என்னை நீ மறக்க மாட்டியே?'' என்று கேட்டாள் குழந்தையை மார்போடு அணைத்துக் கொண்டு.

''என்னக்கா இப்படிக் கேக்கறே?''

''சும்மாத்தான் கேட்டேன். நாழியாகி விட்டது. படுத்துக்கோ....''

குழந்தையின் கண் ஆபரேஷன் வெற்றிகரமாக நடந்து ஒரு வாரமாயிற்று. அன்று கண் கட்டை அவிழ்ப்பதாக இருந்தது. பெற்றோரை அழைத்துப் போக டாக்டர் ஸ்ரீதர் வந்திருந்தார். அவர்களுடன் கிளம்பச் சியாமளா மறுத்தாள்.

''ஏன் சியாமளா! நீ வரவில்லையா?'' என்றார் டாக்டர்.

''இல்லை டாக்டர், நான் இங்கேயே இருக்கிறேன்'' என்றாள் சியாமளா.

''நீ மட்டும் இங்கே தனியாக இருப்பானேன் என்று சொல்லுகிறேன்.''

''தனிமை என்ன? வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். சமையல்காரன் இருக்கிறான். வீட்டையும் பார்த்துக் கொண்டது போலிருக்கும்'' என்றாள் சியாமளா. வஸந்தாவின் தாயார் பானுமதி குறுக்கிட்டாள்.

''சியாமளா, கட்டை அவிழ்த்ததும் குழந்தை உன்னைத்தான் எங்கே என்று தேடுவாள்'' என்றாள்.

''இல்லையம்மா. நான் அவளை எதிர்பார்த்துக் கொண்டு இங்கேயே இருக்கிறேன். நான் ஒரு துரதிர்ஷ்டசாலி. குழந்தையின் வாழ்விலே ஒரு புதிய திருப்பம் ஏற்படும் இச் சமயத்தில் நான் அருகில் இல்லாதிருப்பதே நல்லதென்று கருதுகிறேன்'' என்றாள் சியாமளா.

''சியாமளா, இதென்ன மூட நம்பிக்கை? அதிர்ஷ்டம் என் கையில் இருக்கிறது. நீ பயப்படாமல் வா'' என்றார் டாக்டர் ஸ்ரீதர்.

''இல்லை டாக்டர், தயவுசெய்து என்னை வற்புறுத்தாதீர்கள். என்னால் வர முடியாது. மன்னித்து விடுங்கள்'' என்று சொல்லி விட்டு முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள் சியாமளா.

அதற்குமேல் அவளை வற்புறுத்துவாரா? ''ஓகே! அப்போ நாம் கிளம்பலாமே'' என்று நகர்ந்தார் டாக்டர்.

''ஆனால் ஒரு வேண்டுகோள்'' என்று திரும்பினாள் சியாமளா கலங்கிய கண்களுடன். ''குழந்தைக்குக் கண் கட்டை அவிழ்த்ததும் உள்ள நிலைமைக்கு எனக்கு உடனே டெலிபோன் செய்யுங்கள்.''

''கட்டாயம்! நான் செய்யாவிட்டாலும் வஸந்தா என்னை விடமாட்டாளே'' என்றார் டாக்டர்.

விடைபெற்றுக் கொண்டாள் வீட்டுக்காரி.

''போய் வாருங்கள் அம்மா. வரும்போது ஒளி வீசும் கண்களோடு கூடிய வஸந்தாவுடன் வாருங்கள்'' என்றாள். கார் கிளம்பியது.

பிரமை பிடித்தவள்போல நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தாள் சியாமளா. அவள் உள்ளத்தில் பெரிய போராட்டமே நிகழ்ந்து கொண்டிருந்தது. 'என் வேலை இங்குமுடிந்து விட்டது. இங்கிருந்து கிளம்ப வேண்டியதுதான் என்று அன்றைக்கே முடிவு கட்டி விட்டேன். ஆனால் எங்கு போவது?' அது அவளுக்கே புரியவில்லை. புரியா விட்டாலும் கிளம்பி விடுவதென்ற முடிவை மாற்றிக் கொள்ள விரும்பவில்லை. ஆகவே ஒரு கடிதத்தை எடுத்து ஏதோ எழுதினாள். அதைக் கவருள் போட்டு ஒட்டினாள். ஏன் இன்னும் டெலிபோன் வரவில்லை என்று மனம் கிடந்து தவித்தது. கைப் பெட்டிக்குள் தனது உடை, உடைமைகளை எடுத்து வைத்துக் கொண்டாள். வேலைக்காரியை அழைத்தாள்.

''லக்ஷ்மி லக்ஷ்மி, இதோ பார்! நான் வெளியே போகிறேன். நான் திரும்பி வருவதற்குள் பெரியம்மா, ஐயா, குழந்தை எல்லாரும் வந்துடுவாங்க. வந்தா இந்தக் கடிதத்தை அவங்க கிட்டக் கொடு...என்ன..ம்'' என்று சொல்லித் திட்டமிட்டு விட்டுக் காத்திருந்தாள்-டெலிபோன்மணி ஒலிப்பதற்காக.

அறையின் அமைதியைக் கலைத்துக்கொண்டு டெலிபோன் மணி கண கணத்தது. தாளமிடும் உள்ளத்தோடு தாவிப் போய் அதை எடுத்தாள். ''ஹலோ.......டாக்டர்தானே? வஸந்தாவுக்குப் பார்வை வந்து விட்டதா!... அப்பாடா...! ரொம்ப சந்தோஷம் டாக்டர்'' ஆனந்த அழுகை முட்டி நின்றது. டக்கென்று ரிஸீவரைக் கீழே வைத்தாள். டெலிபோனில் டாக்டர் அவளிடம் ஏதோ சொல்ல அழைத்தது காதில் விழுந்தும்கூட அதைக் கேட்கப் பிடிக்காமல் வைத்து விட்டாள். சந்தோஷச் செய்தி மனத்துக்கு இதமாக இருந்தது. அதே நேரத்தில் உள்ளத்தை ஏதோ வேதனையும் பிசைந்தெடுத்தது. மார்பை அழுத்திப் பிடித்துக் கொண்டு கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந்தாள். கண்ணீர் உலருவதற்காகவும் இருக்கலாம். பிறகு லக்ஷ்மியிடம் மறுபடியும் கடிதத்தை எஜமானி அம்மாளிடம் கொடுக்கும்படி நினைவுபடுத்தி விட்டு 'ஸ்கார்பை' எடுத்து முகத்தை மூடித் தலையை முக்காடிட்டுக் கொண்டு பெட்டியுடன் கிளம்பினாள்.

மாடிப்படியிலிருந்து கீழே இறங்க அடியெடுத்து வைத்த அதே சமயத்தில் தடதடவென்று யாரோ உள்ளே வந்தார்கள். மாடிப்படியின் கீழே நின்ற அந்த உருவத்தைக் கண்டதும் சியாமளா திகைத்து நின்றாள்.

''டாக்டர்.....நீங்களா டாக்டர்?''என்று அவளையுமறியாமல் வாய் முணுமுணுத்தது.

''ஆமாம் நானேதான். என்னுடைய ஆவியல்ல. எனக்குக் காரை வெகு வேகமாக ஓட்டத் தெரியும்'' என்றபோது அவர் உள்ளத்தின் படபடப்பு வார்த்தைகளில் எதிரொலித்தது. ''இதென்ன கையில் பெட்டி? ஓடி ஒளியும் எண்ணத்தை இன்னமும் நீ மாற்றிக் கொள்ள வில்லையா?''

சியாமளா அவரது கேள்விக்குப் பதில் சொல்லவில்லை.

''சியாமளா! நீ செய்யத் துணிந்த காரியத்தைப் பற்றிச் சிந்தித்தாயா? இது உனக்கு நியாயமென்று படுகிறதா?''

அவள் கேள்விக்கு நேரடியாகப் பதில் சொல்லவில்லை.

''நீங்கள் ஏன் இப்படி ஓடி வந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

''நீ ஓடி ஒளியப் போகிறாய் என்று எனக்குத் தெரியும். உன்னைத் தடுத்து நிறுத்தத்தான் ஓடி வந்தேன். டெலிபோனிலே ஒலித்த உன் குரலே உன் முடிவை எனக்குச் சொல்லி விட்டது. பார்வை வந்ததும் குழந்தை அக்கா எங்கே என்றுதான் கேட்டாள். நீ என்னடாவென்றால்...''

சியாமளாவினால் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ''என்னால் இனிக் குழந்தையிடம் வரமுடியாது டாக்டர்..... தன் ஒளிபெற்ற கண்களால் அவள் என்னைப் பார்ப்பதை நான் விரும்பவில்லை.''

டாக்டர் அவளுக்குப் பதில் சொல்லவில்லை; அருகில் வந்தார். முகத்தை மறைத்துக் கட்டி இருக்கும் அவளது ஸ்கார்பை வெடுக்கென்று இழுத்து உதறினார். இப்போது அவர் முகத்தில் கோபம் மெருகேற்றி இருந்தது. ''தட்ஸில்லி இங்-இந்தக் கைக்குட்டையின் பின்னால் ஒளிந்து வாழ்வதை ஏன் இன்னும் நீ விடமாட்டேன் என்கிறாய்?'' என்று கத்தினார் டாக்டர்.



''உங்கள் மூன்று பேரின் பெயரும் 'சேஷாத்திரி' என்றிருப்பதால் கூப்பிடும்போது குழப்பம் ஏற்படுகிறது. அதனால் சேஷா 'ஒன்', சேஷா 'டூ', சேஷா 'திரி' என்று கூப்பிடுகிறேன்.''

அழுகை குமுறி வர, ''டாக்டர்......'' என்றாள் சியாமளா. அதற்குமேல் பேச முடியாதவளாகத் திரும்பினாள்.

'' சியாமளா....போகாதே நில்....'' திரும்பினாள். அவள் கண்ணீர் நின்று விட்டது. ''என் வேதனை எப்படிப்பட்டதென்று உங்களுக்குத் தெரிந்தால் இப்படிப் பேச மாட்டீர்கள் டாக்டர். நீங்கள் இளைஞர். சுகமான வாழ்க்கை. செல்வாக்கு, கௌரவம்; வாழ்க்கையில் தொட்டதெல்லாம் உங்களுக்கு வெற்றி. இந்த நிலையிலே என் வேதனையை நீங்கள் அறிய மாட்டீர்கள்.'' நிறுத்தினாள்.

''நிறுத்தாதே சியாமளா, சொல்ல வேண்டியதை எல்லாம் சொல்லி விடு.''

''உங்களுக்கு நண்பர்களுண்டு. தோழிகள் இருக்கிறார்கள். குறை என்ற கொடிய இருளின் பின்னால் மறைந்து வாழ்வது எத்தனை வேதனை தரக் கூடியதென்று உங்களுக்குத் தெரியாது டாக்டர். பரிதாபத்துக்கும் பரிகாசத்துக்கும் இலக்கான ஒரு ஜீவன் கொல்லும் தனிமையிலே இரவைக் கொன்று கொண்டு தூக்க மில்லாமல் எப்படித் துடிக்கும் என்று வது உங்களுக்குத் தெரியுமா டாக்டர்?'' குழந்தை போலக் கேவினாள் சியாமளா.

ஆனால் ஸ்ரீதர் நிதானமாக, ''அவ்வளவு தானே? முடித்து விட்டாயா?'' என்றார்.

அவள் முடிக்கவில்லை. தொடர்ந்து அழுகை கலந்தபடி பேசினாள். ''ஒரு காலத்தில் இதே சியாமளா சுந்தரவதனியாக, சோபைமிகுந்த எழிலரசியாக இருந்தாள் என்பதை நினைத்துப் பாருங்கள் டாக்டர். என் முகத்திலே ஏற்பட்ட இந்தத் தழும்பு நான் கனவு கண்ட கணவனை, இன்ப வீட்டை, அன்புக் குழந்தைகளை எல்லாம் கொன்று விட்டது. ஒரு பெண்ணின் பிறப்புரிமைகளான சாதாரண சந்தோஷங்கள் கூட எனக்குப் புறக்கணிக்கப்பட்டு விட்டன. பிறர் உங்கள் முகத்தைப் பார்த்துப் பயந்து பிறகு பரிதாபப்பட்டு முகம் சுடுத்து ஒதுங்கிப் போனால் உங்களுக்கு எப்படி இருக்கும் டாக்டர், எண்ணிப் பாருங்கள்'' விம்மி விம்மி அழுதாள். ''அதற்காகத்தானே நான் குழந்தை வஸந்தாவைக் காண வர முடியாது என்றேன். என்னைப் பற்றி அவள்கொண்டுள்ள பசுமையான எண்ணங்களைப் போக்கிக் கொள்ள நான் விரும்பவில்லை. நான் ஓர் ஒப்பற்ற அழகி என்பது அவள் முடிவு. அதை — அந்தப் பிஞ்சு நெஞ்சின் கற்பனையைக் கலைத்துக் கலக்கமடையச் செய்ய மாட்டேன், டாக்டர்.''

அவள் அழுகையெல்லாம் வற்றி ஓயும் வரை காத்திருந்தார் டாக்டர். பிறகு நிதானமாக, ''சியாமளா! இப்படி ஏன் உன்னைச் சுற்றி ஒரு கோட்டை கட்டிக் கொள்கிறாய்? அழகி என்ற கர்வமும், நான் என்ற அகம்பாவமும் சேர்ந்து உன் நண்பர்களுக்கும் உனக்குமிடையே இந்தத் தழும்பைப் பூதாகாரமான குறுக்குச் சுவராக எழுப்பி விட்டது. ஒரு கண்ணாடியின் முன்னால் போய் நின்று நிர்மலமான மனத்துடன் என்றைக்காவது அந்தத் தழும்பைப் பார்த்துக் கொண்டிருக்கிறாயா? நீ நினைப்பதுபோல அந்தத் தழும்பு அப்படி யொன்றும் பயங்கரமானதோ விகாரமானதோ இல்லை. உன் முகத்துத் தழும்பைக் கண்டு பிறர் முகம் சுடுக்கவோ பயந்து பதறி ஓடுவதாகவோ நான் நினைக்கவில்லை. கடந்த மாதங்களில் அது கூடத் தன் ஒளியை இழந்து கொஞ்சங் கொஞ்சமாக மறைந்து வருகிறது. ஆனால் அது உனக்குத் தெரியாது. ஏனென்றால் அந்தத் தழும்பை மறுபடியும் நீ பார்த்துக் கொள்ளவே விரும்பவில்லை. கண்ணாடியில் முகத்தைப் பார்த்துக் கொள்ளவே நீ பயப்படுகிறாய் சியாமளா, நீ ஒரு சுயநலக்காரி. அந்தத் தழும்பின் பின்னால் மறைந்துகொண்டு பிறரிடமிருந்து ஒதுங்கி வாழ ஆசைப்படுகிறாய்.'' வெகு நாட்களாக அவளிடம் பேச வேண்டுமென்று நினைத்திருந்ததை யெல்லாம் கொட்டித் தீர்த்தார் டாக்டர்.

''சுயநலக்காரியா? யார்? நானா சுயநலக்காரி?'' என்று கேட்டாள் சியாமளா.

''ஆமாம் நீயேதான். நாங்கள் எல்லோரும் உன்னைப்பழைய சியாமளாவாக ஆக்க, படாத பாடெல்லாம் பட்டோம். ஆனால் எங்களோடு ஒத்துழைக்க ஒரு தடவைகூட நீ முயலவில்லை. உனக்குத் தெரியாமல்-உன் நன்மைக்காக-உன் மனத்தை மாற்றி உன் எண்ணத்திலே விழுந்த பூச்சியை அகற்ற எத்தனையோ ரகசியத் திட்டங்களெல்லாம் போட்டேன். ஆனால் நீ என்னைப் பார்த்து உள்ளம் மலர ஒரு தடவைகூடச் சிரிக்கவில்லை. உனக்காகவே இந்த வீட்டுக்கு வந்த நான் உன்னை உபசாரம் செய்து அழைத்தபோதும் ஒரு தடவையாவது நீ என்னோடு உட்கார்ந்து காப்பி சாப்பிடக் கூட விரும்பவில்லை. ஏன் அவ்வளவு தூரம் போவானேன்? பெண்ணுக்குப் பெண்ணான சுந்தரிகூட உன்னிடமிருந்து ஒரு புன்சிரிப்பைப் பெறவில்லை.'' ரணத்தை அறுத்துச் சிகிச்சை செய்யும் டாக்டரல்லவா? சியாமளாவின் உள்ளத்திலே வளர்ந்திருந்த முடிச்சை அறுத்து அவள் முன்னாலேயே விண்டு விண்டு வைத்தார்.

''சுந்தரி.....அவள் அழகி.....சிங்காரி. இல்லையா?'' என்று குரோதத்துடன் கேட்டாள் சியாமளா.

''ஆமாம், இல்லை என்று யார் சொன்னது? சுந்தரி ஒப்பற்ற அழகிதான்.''

''இதுபோதும் எனக்கு. சுந்தரி அழகியாக இல்லாவிட்டால் நீங்கள் அவளைக் காதலிப்பீர்களா?''

ஒரு விநாடி ஸ்ரீதர் சியாமளாவையே உற்றுப் பார்த்தார் ''நான் சுந்தரியைக் காதலிப்பதாக யார் சொன்னார்கள்?'' என்றார்.

''என்ன? நீங்கள் சுந்தரியைக் காதலிக்கவில்லையா?'' விரிந்த கண்கள் வினவின.

''இல்லை. ஒரு காலத்தில் நான் சுந்தரியைக் காதலிக்கத்தான் செய்தேன். அவளை என் மனைவியாக்கிக் கொள்ளவும் கூட எண்ணியதுண்டு. ஆனால் ஒரு நாள் என் நர்ஸிங் ஹோமுக்கு முகத்திலே தீப்பட்ட காயங்களுடன் ஒரு பெண் வந்தாள். அவள் கண்களைப் பாதுகாக்கும் கடமை எனக்கு ஏற்பட்டது. பிறகு அவள் என் நர்ஸிங் ஹோமிலிருந்து என்னிடம் சொல்லிக் கொள்ளாமல் கூட ஓடி விட்டாள். அவள் மட்டும் ஓடவில்லை. அவள் தன்னுடன் என் உள்ளத்தையும் எடுத்துக் கொண்டு ஓடி விட்டாள். பிறகு திடீரென்று ஒரு நாள் என் முன் தோன்றினாள் அந்தப் பெண். அப்போதுதான் நான் உணர்ந்தேன், என் உள்ளம் அவளோடு ஒன்றி விட்டது என்பதை. அன்று முதல் அவள் என் எண்ணத்திலே இடம் கொண்டு விட்டாள். ஆனால் அவளோ என்னிடம் முரட்டுத்தனமாகத்தான் நடந்து கொள்ளுகிறாள். என்னைப் புறக்கணித்து விட்டு என்னிடமிருந்து விலகி விலகி ஓடப் பார்க்கிறாள்.''

டாக்டர் சொல்லச் சொல்லச் சியாமளாவிடமிருந்து விம்மல்கள் வெளிப்பட்டன. இருதயத்தின் ஆனந்தத் தவிப்பைத்தாங்க முடியவில்லை. பேசவும் முடியவில்லை. ''டாக்டர்... ...ஸ்ரீதர்.....நீங்கள்'' என்று குழறினாள்.

அவள் அவஸ்தையைக் கண்டு ரசித்தபடியே நிதானமாகச் சொன்னார் ஸ்ரீதர். ''ஆமாம், சியாமளா. நான் உன்னைக் காதலிக்கிறேன். இன்று நேற்றல்ல. வெகு நாட்களாகவே என் இதயத்தில் இடம் பெற்று விட்டாள் சியாமளா. தாழ்வு மனப்பான்மையிலே கிடந்து நீ தவிப்பதைக் கண்டு நான் எத்தனை வேதனைப் பட்டேன் தெரியுமா? ஒரு பெண்ணின் அழகு அவள் முகத்தில் இல்லை என்பதை உன்னிடம் சொல்ல வேண்டுமென்று நான் விரும்பியதுண்டு. வாழ வேண்டுமென்ற உன் உள்ளத் துடிப்பை உன் துருதுருக்கும் கண்களிலே, உன் கருநாகக் கூந்தலிலே, உன் தளிர் மேனியிலே, உன் இனிமையான குரலிலே நான் உணர்ந்து கொண்டேன் சியாமளா. ஆனால் இதையெல்லாம் உன்னிடம் சொல்லவே எனக்கு நீ சந்தர்ப்பமளிக்கவில்லையே!''

எங்கோ ஆகாயத்தில் பறப்பது போலிருந்தது சியாமளாவுக்கு. ''ஸ்ரீதர், இவ்வளவும் உண்மையா? நான் கனவு காணவில்லையே?''

''உன்னைச் சுற்றி எழுப்பிக் கொண்டுள்ள கோட்டைக்குள் நுழைய விடாமல் என்னை நீ வெளியே தள்ளித் தாளிட்டுக் கொண்டு வாழ்ந்து விட்டாய். இன்று நான் இங்கு ஓடோடி வந்திருக்காவிட்டால் உன் உள்ளத்திலிருந்தும் என்னை நீ நிரந்தரமாக விரட்டியிருப்பாய். இல்லையா சியாமளா?'' டாக்டர் ஸ்ரீதர் தம் பார்வையால் அவள் உள்ளத்தைக் கேட்டார்.

''ஸ்ரீதர்! நான் உங்களைப் புரிந்து கொள்ளவில்லை. மன்னித்து விடுங்கள். நான் இந்த வீட்டை விட்டு ஏன் தெரியுமா ஓடிவிட முடிவு செய்தேன்? உங்கள் மீதுள்ள என் காதல் நிறைவேறாத ஒரு கனவு என்ற எண்ணத்தினால் தான்.'' முகம் சிவக்கக் கண் கலங்கக் கூறினாள் சியாமளா.

''இனி மேலாவது நீ இந்தக் கெட்ட கனவிலிருந்து விடுபட்டு உன் நல் வாழ்வைத் தொடங்கு சியாமளா. வா, உனக்காகக் குழந்தை வஸந்தா காத்திருப்பாள், போகலாம்'' என்று முன்னால் நடந்தார்.

குழந்தை வஸந்தா, உள்ளே நுழைந்த சியாமளாவை ஒரு விநாடி உற்றுப் பார்த்தாள். பிறகு வியப்பினால் மலர்ந்த முகத்துடன், ''அக்கா! ஏ, அப்பா நீ இத்தனை அழகாயிருப்பேன்னு நான் நினைக்கவே இல்லையே. உன் குரலைப் போலவே உன் உருவமும் அழகாக இருக்கிறதக்கா'' என்றாள்.

''வஸந்தா, என் கண்ணே வஸந்தா!'' என்றுஅவளைஅணைத்துக்கொண்டு கண்ணீரால் அவள் கன்னத்தை நனைத்தாள் சியாமளா.

''டாக்டர் மாமா சொன்னார் அக்கா. நான் பெரியவளாகப் போனால் உன்னைப் போலவே அத்தனை அழகாயிருப்பேனாம். ஏன் அக்கா, நிஜமாவா?'' என்றாள் வஸந்தா.

''ஆமாண்டா கண்ணே. நான்தான் சொன்னேனே, டாக்டர் சொல்வது எதையும் சந்தேகப்படாதேன்னு.''

டாக்டர் என்ற முறையில் ஸ்ரீதர் உத்தரவிட்டார். ''வா, சியாமளா, குழந்தைக்கு ஓய்வு வேண்டும். வஸந்தா, நீ நன்றாகத் தூங்க வேண்டும். அப்போதுதான் கண் பளிச்சின்னு ஆகும்.''

''நான் தூங்கணும்னா சியாமளா அக்கா எனக்கு ஒரு கதை சொல்ல வேண்டும்'' என்றது குழந்தை.

''சியாமளா அக்காவோடே நான் கொஞ்சம் பேசணும். இன்னிக்கு மட்டும் நீ கதை இல்லாமல் தூங்கு. என்ன?''

''சரி, டாக்டர் மாமா. உங்களுக்காகத் தான் நான் சியாமளா அக்காவை இப்ப விடறேன். தெரிஞ்சுதா?'' என்றாள் வஸந்தா.

ஸ்ரீதருடன் காரை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் போது சியாமளா கேட்டாள். ''டாக்டர், இது நடக்கக் கூடியது தானா? குழந்தை என் முகத்திலுள்ள தழும்பைப் பார்க்கவே இல்லையா?''

''பார்த்தாள்.''

''அப்படியானால்?....''

''நீ பயப்படுவது வெறும் பிரமை என்பதைக் குழந்தை நிரூபித்து விட்டது.''

''அது மட்டுமல்ல. நான் அழகியாகத் தான் இருக்க வேண்டும் என்று குழந்தை நினைத்திருக்கிறது. ஏனென்றால் அவள் என்னை உள்ளன்புடன் நேசிக்கிறாள். நானும் அவளை விரும்புகிறேன்'' என்றாள் சியாமளா.

''இதுதான் உண்மை. ஒருவரை யொருவர் உள்ளன்போடு நேசித்தால் அவர்களுக்கு வெளியழகு தெரியாது. வெளித் தோற்றத்தின் மயக்கம் மட்டும் அழகில்லை. உள்ளத்திலிருந்து பிறப்பதுதான் அழகு.'' நோயாளியைக் குணப்படுத்தி விட்ட மகிழ்ச்சி டாக்டரின் குரலில் தொனித்தது.

---

இந்தக் கதையில் வரும் ஒரு காட்சியை ஓவியர் [கல்பனா இவ்விதழ் அட்டைச் சித்திரமாக வழங்கி யிருக்கிறார்.

ஜனவரி 14 முதல்

சென்னை
கெயிட்டி
புவனேஸ்வரி
லியர்ட்டி-பிரைட்டன்
மற்றும் தென்னிடங்கும்.



சரஸ்வதி பிக்சர்ஸ்

# ராணி சம்யுக்தா

கதை, வசனம், பாடல்கள்
கவிஞர் கண்ணதாசன் . . . டைரக்ஷன்.. யோகானந்த்



பூரண உரிமையாளர்கள் :
M/s. பிக்சர் பைஒனியர்ஸ்
2/21 Dr. வாசுதேவன் ரோடு சென்னை - 10.




தந்தையார் மேலே எறிந்த ஊன்று கோல் பிடி வேறு, தண்டு வேறாகக் கழன்று விழுந்த போது, 'இப்படிப் பொருள் கூடச் சில சமயங்களில் நிற்கத் துணை புரியாது இடறி என்னை ஏமாற்றி விடுகின்றன' என்று அவர் கூறிய வார்த்தைகளுக்கு நேரான பொருள் வானவல்லிக்குப் புரிந்தது. ஆனால் அந்த வார்த்தைகளில் அடங்கி இருப்பதாக அவள் சந்தேகப்பட்ட ஏதோ ஒரு குறிப்புப் பொருள் மட்டும் அவளுக்குப் புரியவேயில்லை.

'ஊன்றி நிற்பதற்குப் பயன்படவில்லை என்பதை அப்படிச் சொல்லுகிறாரா? அல்லது அதில் இருப்பதாக அவர் நம்பிக்கொண்டிருந்த வேறு பயன்

ஒன்று இல்லாமற் போய் விட்டதை அப்படிச் சொல்லுகிறாரா?'

ஒன்றும் புரியாமல் மருண்டு நின்ற வானவல்லி முதலில் நினைத்தது போலக் கூடிய விரைவில் அவர் முன்னிலையிலிருந்து தப்பிச் சென்று விட வேண்டுமென்றுதான் மீண்டும் நினைத்தாள். சுற்றிலும் நெருப்புக் கனலும் நீற்றறையில் நிற்பது போல இப்போது அங்கே நின்றாள் அவள். அவருடைய கோபத்துக்கு அப்படி ஓர் ஆற்றல் உண்டு என்பதைப் பல முறை கண்டு உணர்ந்திருக்கிறாள் அவள். அந்தக் கோபம் சூழ்நிலையையே மாற்றி அமைத்து விடும். கோடை வெயிலைப் போல் அதற்கு ஆளாகிற எல்லாரையும் வாட்டி விடும். கொடுமையான வெப்பத்தைத் தாங்கிக் கொண்டு வெயிலில் நிற்கிறவர்கள் அங்கிருந்து நிழலைத் தேடி உடனே ஓடிப் போய் விடுவதற்குத் தவிப்பது போல் அவர் கனன்று சீறும் போது அதற்கு ஆளாகிறவர்களும், சுற்றியிருப்பவர்களும், அதிலிருந்து விலகி ஓடி விடத் தவிப்பது உண்டு.

அவருக்கு முன்னால் இப்போது வானவல்லியும் அப்படித்தான் தவித்துக் கொண்டு நின்றாள். அவளுடைய தவிப்பைப் புரிந்து கொள்ளாமலோ, அல்லது புரிந்து கொண்டே புரியாதது போலவோ அவர் மேலும் பேசினார்:

''மகளே! நான் நம்பிக் கொண்டிருக்கிற ஒவ்வொரு பொருளுக்கும் என் மேல் அவநம்பிக்கை உண்டாவதைப் போன்ற அறிகுறிகள் சிறிது காலமாக எனக்குத் தெரிகின்றன. இதே நிலைமை இப்படியே வளருமானால் நான் இனிமேல் எப்படி மாறுவேன் என்று உறுதி சொல்ல முடியாது. என்றாவது ஒரு நாள் இப்படியே இந்தப் பெரு மாளிகைக்கு நெருப்பிட்டுக் கொளுத்தி விட்டு இங்குள்ள எல்லாரும் அழிந்தது தெரிந்த பின் நானும் அழிந்து சாக வேண்டியதுதான். எல்லாவற்றையும் அழித்து ஒழித்து நிர்மூலமாக்கிவிட்டு நானும் அழிய வேண்டும். நான் அழியும்போது இங்கு எதுவும் அழிக்கப்படாமல் மீதமிருக்கக் கூடாது. 'இன்ன பொருளை இன்ன இடத்தில் வைத்திருக்கிறோம்' என்று நான் நம்பிக் கொண்டிருந்தவை எல்லாம் எனக்குத் தெரியாமலே இடம் மாறியிருக்கின்றன. யாரிடத்தில் எல்லாம் பொதிய மலை சரிந்தாலும் சரியாதென்ற உறுதியோடு நான் நம்பிக்கை வைத்திருந்தேனோ அவர்களிடத்திலேயே அது இல்லை என்று இப்போது தெரிகிறது. எங்கெல்லாம் மிகவும் மதிப்பும் பெறுமானமும் உள்ள பொருள்களைப் பொதிந்து வைத்திருந்தேனோ அங்கெல்லாம் அவற்றைக் காணவில்லை. இதோ கீழே கழன்று விழுந்து கிடக்கின்றதே; இந்த ஊன்றுகோலின் தண்டுக்கும், பிடிக்கும் நடுவே உள்ள குழலில் நான் வைத்திருந்த அரும் பெரும் பண்டம் ஒன்றையும் இப்போது இதில் காண முடியவில்லை மகளே!''

ஆத்திரமாகப் பேசிக் கொண்டே வந்தவர் அதையெல்லாம் சொல்வதற்கும் கேட்கச் செய்வதற்கும் அவள் தகுதியுடையவள் இல்லை என்பதைத் திடீரென்று உணர்ந்து கொண்டு விட்டதைப் போலப் பேச்சை நடுவிலேயே நிறுத்தினார். அதுவரை தாம் பேசியிருந்த பேச்சுக்களால் மகளுடைய முகத்தில் என்னென்ன உணர்வுகள் விளைந்திருக்கின்றன என்பதை அவனே பார்த்துவிட முடியாத வேகத்தில் அவளுடைய முகத்திலிருந்து தான் பார்த்துத் தெரிந்து கொண்டு விரைவாய்க் கீழே குனிந்து ஊன்றுகோலையும் பிடியையும் எடுத்துத் திருகினார் அவர்.

வானவல்லி அந்த நேரத்தைத் தான் வெளியேறிச் செல்லுவதற்கு அவர் கொடுத்த அரிய சந்தர்ப்பமாகப் பயன்படுத்திக் கொண்டு மெல்ல நழுவினாள். அவரும் அவளைத் தடுக்கவில்லை. அப்போது அவருக்கும் வேறு வேலைகள் அவசரமானவையாகவும், அவசியமானவையாகவும் செய்வதற்கு இருந்ததனால் அவள் அங்கிருந்து போவது பற்றி நினைக்கவோ தடுக்கவோ கவலைப்படவோ விரும்பவில்லை அவர்.

அவள் சென்றதும் 'ஊன்றுகோலில் பொதிந்து வைக்கப்பட்டிருந்த ஐம்படைத் தாலியை யார் அதிலிருந்து எடுத்திருக்க முடியும்' என்ற சிந்தனையில் அவர் மூழ்கினார். அந்தப் பொருள் அவ்வளவு பத்திரமாக அதற்குள் பொதிந்து வைக்கப்பட்டிருக்கும் உண்மை தன்னைத் தவிர இன்னும் ஒரே ஒருவருக்குத்தான் தெரியும் என்ற ஞாபகம் அவருக்கு வந்தது. என்னுடைய வாழ்க்கையையே மாற்றித் தள்ளி விடக் கூடிய பெரிய இரகசியங்களுக்கு அடையாளமான அந்த ஐம்படைத்தாலி இந்த ஊன்றுகோலுக்குள் வைக்கப்பட்டபோது நான் என் இரு கண்களால் பார்த்ததைத் தவிர இன்னும் ஒரு கண் மட்டும் பார்த்திருக்கிறது. அந்தப் பொருள் இதனுள் வைக்கப்பட்டிருப்பதை நினைவு கூர்ந்து இப்போது திருடியிருக்க முடியுமானால் அப்படித் திருடியவன் அந்த ஒரு கண்ணுக்கு உரியவனாகத்தான் இருக்க வேண்டும். கற்பூரக் கப்பலைத் தேடிக் கொண்டு கடற்பயணம் செல்லுவதற்கு முன் கரமஞ்சரியைப் பயமுறுத்தி மருட்டுவதற்கு ஓர் அடையாளமாக இதை

என்னிடமிருந்து வாங்கிக் கொண்டு போய் இருட்டில் அவள் மாடத்திலே வைத்து விட்டு வந்தவனும் அந்த ஒற்றைக் கண்ணனுக்கு உரியவன்தான். ஏதோ திட்டமிட்டு என்னைக் கவிழ்த்து விடும் எண்ணத்தோடுதான் அவன் அந்த ஐம்படைத் தாலியை இதற்குள்ளே யிருந்து வெளியேற்றி யிருக்க வேண்டும். அதை இதிலிருந்து வெளியேற்றுவதற்கும் என் உயிரையே உடம்பிலிருந்து வெளியேற்றுவதற்கும் அதிக வேறுபாடில்லை. இந்த ஊன்றுகோல் யாரை மருட்டுவதற்காக எந்த மாடத்தில் இதுவரை வைக்கப்பட்டிருந்ததோ அந்த மாடத்திலிருந்தவர்களுக்கு இதைப் பிடி வேறு தண்டு வேறாகக் கழற்ற முடியும் என்பதே தெரிந்திருக்க நியாயமில்லாதபோது அவர்கள் அதை இதிலிருந்து வெளியே எடுத்திருப்பார்களோ என்று தான் சந்தேகப்படுவதற்கும் இடமில்லை.

'சந்தேகமில்லாமல் இது நகைவேழம்பருடைய வேலைதான். அந்த ஐம்படைத் தாலியும் அதைப் பற்றிய உண்மைகளும் அவரால் வெளிப்படுத்தப் பெறுவதற்கு முன்னால் அவருடைய உயிரையே இந்த உலகத்திலிருந்து நான் முதலில் வெளிப்படுத்தி விட்டால் என்ன?' என்று கொடுமையாகவும், குரூரமாகவும் முதிர்ந்து நின்று நினைத்தார் பெருநிதிச் செல்வர். இப்போது அந்த ஒற்றைக் கண் வேங்கை தன்னிடம் வகையாக மாட்டிக் கொண்டு அடைபட் டிருப்பதால் தான் நினைப்பதைச் செய்வது சாத்தியமானதே என்று நம்பினார் அவர்.

இந்த அவசரமான தீர்மானத்துக்கு வந்தவுடனே பெருமாளிகையில் தம்முடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான காவலன் ஒருவனைக் கூப்பிட்டு, ''நீ இப்போது உடனே புறப்பட்டுப் போய் மருவூர்ப் பாக்கத்து அலைவாய்க்கரையில் உள்ள வலைப்பாடியில் இருக்கும் நாகர் குலத்து மறவனான அருவாளனை இங்கே அழைத்துக் கொண்டு வர வேண்டும். இன்று கதிரவன் மறையும் போதுக்குள் நீ அவனோடு திரும்பி இங்கே வர முடியாவிட்டால் உன்னால் எனக்கு ஒரு பயனும் இல்லை. சம்பாபதி வனம், சக்கரவாளத்துக் காடுகள், காவிரிக்கரை நாணற்புதர் எங்கெல்லாம் தேட முடியுமோ அங்கெல்லாம் தேடி அருவாளனைக் கண்டுபிடித்து இங்கே திரும்பி வரும் போது அவனோடு வா. அவன் இல்லாவிட்டால் வராதே.....'' என்று உறுதியான கட்டளையாகச் சொல்லி அனுப்பினார் பெருநிதிச் செல்வர். அவருக்கு அந்தரங்கமானவனாகிய அந்தக் காவலன் உடனே அதைச் செய்வதற்குப் புறப்பட்டான்.

அவனை அனுப்பி விட்டுச் சிந்தனைக்குரிய பல சந்தேகங்களை மாற்றி மாற்றி நினைத்துப் பாதி பயமும் பாதி அவநம்பிக்கைகளுமாகக் குழம்பினார் அவர். நிம்மதி சிறிதும் இல்லாமல் என்னென்னவோ எண்ணிப் பரபரப்படைந்திருந்தன அவருடைய உணர்வுகள்.

'என் பயம் வீணானது. காரணமற்றது. பொய்யானது. இன்னும் ஆயிரம் நகைவேழம்பர்கள் எனக்கு எதிராக மாறினாலும் அந்தக் காலாந்தகன் மறுபடி உயிரோடு பிழைத்து வந்துவிடப் போவதில்லை. பிழைத்து வந்தாலும் என்னை என்ன செய்துவிட முடியும்? செத்தவர்கள் பேயாக மாறி வேண்டுமானால் வரலாம். பிழைத்து வர முடியாது. இது தெரிந்தும் நான் ஏன் பதறுகிறேன்? என் உடல் எதற்காக நடுங்குகிறது?' என்று எண்ணி எண்ணி மயங்கியபடியே வெளியே சென்றிருக்கும் காவலன் நாகர் குலத்து அருவாளனை அழைத்து வருவதையே எதிர்பார்த்துக் காத்திருந்தார் அவர். அப்போது வேறு எந்த வேலையையும் செய்வதற்குப் பொறுமை இல்லை அவருக்கு. பட்டினப் பாக்கத்தில் வானளாவ நிமிர்ந்து நிற்கும் தன்னுடைய அந்த மாளிகை ஒவ்வோரடுக்காகச் சரிவதுபோல் அவருடைய மனக்கண்ணில் அழிவைக் குறிக்கிற பொய்த் தோற்றங்கள் வரிசையாய்த் தோன்றின.

அன்று மாலை இருட்டுவதற்குச் சிறிது நேரத்துக்கு முன்னால் அவர் அனுப்பியிருந்த காவலன் நாகர்குலத்து அருவாள மறவனோடு திரும்பி வந்துவிட்டான். இறைச்சி மலையாக வளர்ந்திருந்த அந்த முரட்டு நாகன் பெருநிதிச் செல்வருடைய அந்தரங்க அறையில் நுழைந்து அவரை வணங்கி விட்டுப் பணிவாக எதிரே நின்றான். அவனை அழைத்து வந்த காவலனை அங்கிருந்து வெளியே போய் விடுமாறு குறிப்புக் காட்டினார் பெருநிதிச் செல்வர். காவலன் வெளியேறியதும் மாமிச பர்வதமாக வந்து நின்ற அருவாளனை நெருங்கி மெல்லிய குரலில் அவனை வேண்டிக் கொண்டார் அவர்:

''அருவாளா! நீண்ட நாட்களுக்கு முன்னால் ஓர் இந்திர விழாவில் நானும் நகைவேழம்பரும் உன்னை ஒரு காரியத்துக்குத் தூண்டிவிட்டு அனுப்பினோம். சம்பாபதிவனத்து இருளில் அந்த முனிவரையும், அவருடைய வளர்ப்புப் பிள்ளையையும் நமனுலகுக்கு அனுப்பி விடச் சொல்லி நாங்கள் உன்னை அனுப்பிய காரியம் அன்று உன்னால் நடை

# இதோ

மின் விசிறி
அமைப்பில்
இதுவரை
கண்டிராத
அரிய சாதனை!



# விஜய்

**16" ஏ. ஸி. சுழலும் (Oscillating)**
**டேபிள் மின் விசிறிகள்**





பிரஸ் பட்டன ஸ்பீட் கண்ட்ரோலுடன் கூடிய ஒரே இந்திய மின் விசிறி.

- கவர்ச்சிகரமான கண்ணுக்கினிய வண்ணங்களில் உள்ள விஜய் மின் விசிறி உங்கள் இல்லத்தை மேலும் அழகுறச் செய்கிறது.
- சப்தமில்லாத இயக்கத்துக்கும் நீடித்த கடின உழைப்பிற்கும் உறுதியளிக்க விஜய் மின் விசிறிகளில் சம நிலையில் இயங்கும் ரோட்டார்கள் அமைக்கப்பட்டுள்ளன.
- விஜய் மின் விசிறிகள் இரண்டு வருட கால உத்தரவாதத்துடன் கூடியவை.




பூரண விநியோகஸ்தர்கள் :
**ஓபுல் ரெட்டி ஏஜென்ஸீஸ்,**
துன் பில்டிங்ஸ், மவுண்ட் ரோடு, சென்னை-2.

தயாரிப்பாளர்கள் :
நேஷனல் எலெக்ட்ரிகல்ஸ்,
இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை-32.

டெக்னிகல் கன்ஸல்டண்ட்ஸ்
ஆம்ஸெஸ் எஞ்சினியர்ஸ் பிரைவேட் லிட்.
இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை-32.

LB/OBA/2

உங்கள் மாளிகையில் இந்த

## நவீன தண்ணீர் வழங்கும் முறையை

அமைத்துக் கொள்ளுங்கள்

# Myers or Wasp

மயர்ஸ் அல்லது வாஸ்ப்

தானே இயங்கும் எலக்ட்ரிக் பம்புகள்

ஓவர்ஹெட் டாங்குகள் தேவை இல்லை



விற்பனை ஸ்பேர்கள்
நிறைவான சேவை

**வாட்டர் ஸப்ளை
ஸ்பெஷலிஸ்ட்ஸ்
பிரைவேட் லிட்**

த. பெ. 1707
330, தம்பு செட்டித்
தெரு, சென்னை-1

பம்புகள் அமைப்பதில்
80 ஆண்டுகட்கு மேல்
அனுபவமுள்ளவர்கள்

---

## நீங்கள் உறங்கும்போதே
# ஆஸ்துமா
# சளிகரைகிறது

மூச்சுத் திணறல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல், சுவாசம் தடைப்படுதல், ஆஸ்துமா, ப்ராங்கைடிஸ், ஜலதோஷம், குளிர் சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து, இரத்தத்தின் மூலமாக சுவாசப் பைகள் சுவாசக் குழாய்கள் மற்றும் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சு விடுதல் இல்லாமல் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு அது நிச்சயமாக அளிக்கும்.

---

# உங்கள் சருமத்தை
# சுத்தமாக வையுங்கள்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும், வழவழப்பாகவும் மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள், கட்டிகள் செந்நிறத் தழும்புகள், மேலாகப் பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் அது இருக்கச் செய்யும். என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

பெறவில்லை. இருந்தும் இன்று இவ்வளவு காலத்துக்குப் பின்பு உன்னை நான் மீண்டும் இங்கே அழைத்திருக்கிறேன். இன்று நான் உன்னைச் செய்யச் சொல்லி வேண்டிக் கொள்ளப் போகிற செயல் உன் நிலையில் உனக்கு மிகவும் சிறியது தான். ஆனால் என் நினைப்பில் அது மிகவும் பெரியது. அவசியமானது. அவசரமானது. அதை நீ செய்வதற்கு மறுக்கக் கூடாது.''

அருவாளன் தன்னுடைய பயங்கரமான உருட்டு விழிகளால். விரித்து அவரைப் பார்த்துவிட்டுச் சிறிது நேரம் தயங்கியபின் ஒவ்வொரு வார்த்தையாக யோசித்து மறுமொழி கூறினான்:

''ஐயா! என்னுடைய இந்த உடம்பில் இருக்கிற செருக்கு எதுவோ அது நீங்கள் எனக்கு அளித்தது. நீங்கள் வளர்த்தது. உங்களுடைய சோற்றுச் செருக்கால், நிமிர்ந்து நிற்கிற நான் உங்கள் கட்டளையை மறுப்பேனா?''

''நீ நான் சொல்வதற்கு ஒப்புக் கொண்டால் மட்டும் போதும். என்னுடைய உதவிகளுக்கு என்னிடமே நன்றி சொல்ல வேண்டாம். என்னால் உதவி பெற்றவர்கள் என் மேல் நன்றியுடையவர்களாகத்தான் இருப்பார்கள் என்ற நம்பிக்கையை நான் சமீப காலத்தில் கொஞ்சம் கொஞ்சமாக இழந்து விட்டேன் அருவாளா! என்னுடைய சோற்றை நான் யார் யாருக்கு எல்லாம் இட்டேனோ அவர்கள் என்னை எதிர்க்கும் செருக்கைத்தான் அடைந்திருக்கிறார்களே ஒழிய என்னைக் காக்கும் செருக்கை அடைந்திருப்பதாக நானே நம்பவில்லை. நான் இட்ட சோறு அதைத் தின்பவர்களிடம் நன்றியை வளர்த்திருக்கும் என்பதில் எனக்கே நம்பிக்கை இல்லை. நீ மெய்யாகவே என்னைப் புகழ்ந்தாலும் இப்போதுள்ள என் மன நிலையில் உன் புகழ்ச்சியை நான் போலியானதென்றே நினைப்பேன். இன்று காலையிலிருந்து எனக்கு என்மேலேயே நம்பிக்கை இல்லை....''

''நிறைய மனக் குழப்பம் அடைந்திருக்கிறீர்கள் போல் தோன்றுகிறது ஐயா! இப்படிப்பட்ட நிலையில் உங்களை நான் இதற்கு முன்பு சந்தித்ததே இல்லை. உங்கள் அந்தரங்க நண்பர் நகைவேழம்பர் அருகில் இருந்தால் இப்படி உங்களைக் கவலைப்படவிட்டிருக்க மாட்டாரே? அவர் இப்போது எங்கே?'' என்று அருவாளன் கேட்டான்.

''இப்போது என்னுடைய கவலையே அவர் இங்கு இன்னும் உயிரோடு இருக்கிறார் என்பதைப் பற்றிய கவலைதான் அருவாளா! அவர் இருப்பதுதான் எனக்குக் கவலை. என் கவலை தீர வேண்டுமானால் அவர் இல்லாமல் தொலைய வேண்டும்!''—என்று கூறிவிட்டு அந்தக் கூற்றைக் கேட்கிறவன் முகத்து விளைவை அறிவதற்காக அருவாளனுடைய கொடிய முகத்தைக் கூர்ந்து பார்த்தார் அவர். அருவாளனுடைய முகத்தில் திகைப்பும் சந்தேகமும் தெரிந்தன.

''நான்தானா இப்படிப் பேசுகிறேன் என்று என் மேல் சந்தேகப்படாதே. அருவாளா! இன்று இரவு நடு யாமம் முடிவதற்குள் இந்த நகரத்தில் ஓர் உயிர் உன் கையால் குறைய வேண்டும். அப்படிக் குறைகிற உயிர் என் கவலையைத் தீர்க்கிற உயிராகவும் இருக்க வேண்டும். அந்த உயிர் போகும்போது என் கவலையும் போய் விட வேண்டும்.''

அருவாளன் மௌனமாக அவரையே பார்த்துக் கொண்டு நின்றான். இரும்புப் பலகை போன்ற அவனுடைய பரந்த மார்பு மேலெழுந்து விரிந்து விம்மித் தணிந்தது. அவர் அவனுடைய அந்த மௌனத்தைப் பொறுக்க முடியாமல் அவனைச் சீறிக் கோபித்துக் கொண்டார்:

''ஏன் இன்னும் மௌனமாக இருக்கிறாய்? இப்போது மட்டும் நான் அளித்த சோற்றுச் செருக்கு உன்னிடமிருந்து எங்கே போய் ஒளிந்துகொண்டது?''—

இந்தக் கேள்வியைச் செவியுற்றதும் அவன் தலை தாழ்ந்தது. இந்தக் கேள்வியினால் அவன் மடக்கப்பட்டு விட்டான் என்பதைச் சொல்வது போல அவனுடைய முக பாவமும் மாறியது.

''செய்கிறேன்; ஐயா; செய்கிறேன் நீங்கள் எதைச் சொல்கிறீர்களோ அதைச் செய்து உங்களிடமிருந்து நான் பெற்ற சோற்றுச் செருக்குக்கு நன்றி செலுத்தி விடுகிறேன்......'' என்று ஆவேசத்தோடு அவருக்குப் பதில் கூறினான் அவன்.

# 19 - சாவதற்குத் தந்த வாழ்வு

அருவாளனுடைய சம்மதம் பெருநிதிச் செல்வருக்கு நிறைந்த நிம்மதியை அளித்தது அவர் விருப்பத்தைச் செயலாக்க அவன் முன்வந்ததில் அவருக்குப் பரமதிருப்தி ஏற்பட்டிருந்தது.

''நல்லது! உன்னுடைய நன்றியிலாவது நான் நம்புவதற்கு இன்னும் இடம் இருக்கிறது. என்னிடம் நீ தின்ற சோறு என்னை ஆதரிக்கும் செருக்கைத் தான் உனக்குத் தந்திருக்கிறது. என்

னையே எதிர்க்கும் செருக்கைத் தரவில்லை. போய்விட்டு உன் கூட்டாளியோடு இன்றிரவு நடு யாமத்துக்கு இரண்டு நாழிகை இருக்கும்போது திரும்பவும் இங்கே வா முதலில் உன் கையில் ஒப்படைத்து அப்புறம் யமன் கைக்கு மாற்ற வேண்டிய உயிரை இப்போது இந்த மாளிகையின் நிதியறையில்தான் அடைத்து வைத்திருக்கிறேன். இன்றிரவு அந்த உயிருக்கு அதன் உடம்பிலிருந்து விடுதலை அளித்து விடலாம்'' என்று கூறி அருவாளனுக்கு விடை கொடுத்து அனுப்பினார் பெருநிதிச் செல்வர். அவர் கூறியபடி நள்ளிரவுக்கு முன்னால் மறுபடி அங்கே வருவதாக ஒப்புக் கொண்டு புறப்பட்டுச் சென்றான் அருவாளன்.

அங்கிருந்து அவன் புறப்பட்டுப் போன சிறிது நேரத்தில் தன்னுடைய இன்னொரு சந்தேகத்தையும் உடனே தீர்த்துக் கொண்டுவிட எண்ணியவராய் கரமஞ்சரியைச் சிறை வைத்திருந்த மாடத்துக்கு ஏறிச் சென்றார் அவர். அப்போது அந்த மாடமும் அதன் பகுதிகளும் வழக்கத்தை மீறிய அமைதியோடு இருந்தன. மாடத்தின் உட்பக்கம் கரமஞ்சரியோ வசந்தமாலையோ பேசிக் கொள்ளும் ஒலிகூடக் கேட்கவில்லை. இருவரும் அந்த முன்னிரவு வேளையிலேயே தூங்கி யிருக்கலாம் என்று எண்ணிக் கொண்டு அவர் கதவைத் தட்டினார். சிறிது நேரம்வரை அவருக்கு ஒரு பதிலும் இல்லை. மறுபடியும் அவர் முன்னைவிடப் பலமாகத் தட்டிய போது வளை குலுங்கும் ஒலியோடு யாரோ நடந்து வந்து கதவைத் திறந்தார்கள்.

கதவைத் திறந்தவள் தோழிப் பெண்ணாகிய வசந்தமாலை என்று தெரிந்ததும் ''கரமஞ்சரி அதற்குள் உறங்கி விட்டாளா பெண்ணே?'' என்று அவளிடம் கேட்டார். தன்னை அந்த நேரத்தில் அங்கே கண்டு அந்தத் தோழிப் பெண் பயந்து நடுங்குவதை அவர் பார்த்தார். தனக்குப் பதில் சொல்வதற்குக் கூட நா எழாமல் அவள் அச்சம் கொண்டு திகைத்துப் போய் நிற்பதைப் பொறுக்க முடியாமல் மறுபடி அதே கேள்வியை முன்னினும் உரத்த குரலில் கேட்டார் பெருநிதிச் செல்வர். அந்தக் குரல் அவளை மேலும் நடுநடுங்கச் செய்தது.

''இதோ தலைவியை எழுப்புகிறேன்'' என்று கூறிக் கொண்டே கரமஞ்சரி தூங்கிக் கொண்டிருந்த மஞ்சத்தருகே சென்று மெல்ல அவளுடைய தோளைத் தொட்டு எழுப்பினாள் வசந்தமாலை. அப்படி எழுப்புவதற்கு முன் தூங்கும் தன் தலைவியின் முகத்தை அவள் பார்த்த போது அந்த முகம் உறக்கத்திலும் சிரித்துக் கொண்டிருப்பதைக் கண்டு அச்சிரிப்புக்குக் காரணமான ஏதோ ஓர் இனிய கனவு தலைவிக்குக் கிடைத்திருக்க வேண்டும் எனப் புரிந்தது வசந்தமாலைக்கு. அப்படிப்பட்ட கனவிலிருந்து அவளை வலிய எழுப்பும் துன்பமான செயலைத்



தன் கைகளால் தானே செய்ய வேண்டியிருக்கிறதே என்ற வருத்தத்தோடு தலைவியை எழுப்பினாள் தோழிப் பெண். தூக்கத்திலிருந்து விழித்து எழுந்த சுரமஞ்சரி முற்றிலும் விழிப்புக் கொள்ளாத அரைகுறை உறக்கத்தில், 'வசந்தமாலை! அவருடைய கண்களில் என்னுடைய கனவுகள் வளருகிறதடீ' என்று வாய் சோர்ந்து எதையோ முன்னும் பின்னும் தொடர்பின்றி அரற்றினாள்.



தலைவி அரற்றும் அந்தச் சொற்கள் கதவருகே வந்து நிற்கும் பெருநிதிச் செல்வரின் செவிகளில் கேட்டுவிடக்கூடாதே என்று பயந்த வசந்தமாலை, 'அம்மா! கனவைப் பற்றி அப்புறம் பேசிக் கொள்ளலாம். முதலில் நன்றாக விழித்துக் கொள்ளுங்கள்! இப்போது வாயிலில் உங்கள் தந்தையார் வந்து நின்று கொண்டிருக்கிறார்' என்று தலைவியின் காதருகே குனிந்து பதற்றத்தோடு மெல்லச்சொன்னாள். தந்தையின் பெயரைக் கேட்டதும் அந்த நேரத்தில் கேட்கக் கூடாத பேய் பூதங்களைப் பற்றிக் கேட்டு விட்டது போலத் திடுக்கிட்டுப் போய் எழுந்து நின்றாள் சுரமஞ்சரி. அவளுடைய கண்கள் பயத்தினால் மருண்டு பார்த்தன. வாயிலில் தந்தை ஊன்றுகோலுடன் வந்து குரூரமான பார்வையோடு நின்று,

''ஒன்றுமில்லை! உனக்கு என் மேல் இருக்கிற கோபத்தில் இந்த நேரத்துக்கு நான் இங்கே தேடி வருவதே தவறு என்று நீ சீறினாலும் சீறுவாய். நான் வந்த காரியம் அவ்வளவு பெரிய சீற்றத்துக்குக் கூடத் தகுதியானது இல்லை அது மிகவும் சிறியது! இதோ இப்படி என் பக்கமாகப் பார்! இந்த ஊன்றுகோலை

உனக்கு நினைவிருக்கிறதோ?''—என்று அந்த ஊன்றுகோலை முன்னால் காண்பித்தபடி அவர் வாயிற்புறத்திலிருந்தே அவளைக் கேட்டார்.

அந்தக் கேள்வியைச் சிறிதும் இலட்சியம் செய்யாதவளாய் நின்றாள் சுரமஞ்சரி. 'தான் அப்போது அவருக்குப் பதில் சொல்ல விரும்பவில்லை' என்றாற்போல ஒரு வெறுப்பு அவள் முகத்தில் தெரிவதை வசந்தமாலையும் பார்த்தாள். தானும் தன் தலைவியும் தெரிந்து கொள்ள வேண்டிய அருமையான உண்மை ஒன்றை இந்தச் சமயத்தில் தெரிந்து கொண்டு விட விரும்பினாள் வசந்தமாலை. உடனே அவள் மெல்ல மறுபடியும் தன் தலைவியின் காதருகே சென்று, ''அம்மா! அந்த ஐம்படைத்தாலியைக் காணாமல் தவித்துக் கொண்டுதான் இப்போது இவர் பதறிப் போய் இங்கே வந்திருக்கிறார். நாம் அதைப் பற்றிய இரகசியத்தைத் தெரிந்து கொள்ள இதுதான் ஏற்ற சமயம். சிறிது நேரம் தேடிப் பார்ப்பது போல் இந்த மாடத்தின் மூலை முடுக்குகளில் எல்லாம் சுற்றி விட்டு என்னிடமே இருக்கும் இந்த ஐம்படைத் தாலியை எடுத்து இங்கு ஏதோ ஒரு மூலையில் கிடந்ததாகச் சொல்லி இவரிடம் கொடுத்து விடுகிறேன். அப்படிக் கொடுப்பதற்கு முன்னும், கொடுத்த பின்னும் இவர் அடைகிற உணர்ச்சிகளை நாம் இருவருமே கூர்ந்து கவனிக்க வேண்டும்'' என்று கூறினாள். தந்தையின் வார்த்தைகளுக்கு மறுமொழி கூறாமல் அலட்சியம் செய்ததைப் போலவே தோழியின் இந்தத் தந்திர முயற்சியையும் அவள் அலட்சியம் செய்தாள். தலைவியின் அலட்சியத்தைத் தனக்குச் சம்மதமாகப் புரிந்து கொண்ட தோழி தன் திட்டப்படியே செய்தாள். சிறிது நேரம் பெருநிதிச் செல்வரின் பொறுமையைச் சோதித்த பின், ''ஐயா! எங்களுடைய மாடத்தில் உங்கள் ஊன்றுகோல் வைக்கப்பட்டிருந்த இடத்தில் கீழே இந்தப் பொருள் கிடந்தது. இதை உங்களிடம் கொடுத்து விட வேண்டுமென்று பத்திரமாக நான் எடுத்து வைத்திருந்தேன்'' என்று அந்த ஐம்படைத் தாலியை அவரிடம் பயபக்தியோடு கொடுத்து விட்டாள் வசந்தமாலை. அப்போதும் சுரமஞ்சரி ஒன்றும் பேசாமல் தன் தந்தையையும், வசந்தமாலையையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டுதான் நின்றாள். மனத்துக்கு விருப்பமான கனவு கலைக்கப்பட்டு நனவுலகத்தின் துன்ப மயமான அநுபவங்களை அந்த நேரத்திலேதான் அடைய நேர்ந்ததை வெறுத்தாள் அவள்.

பெருநிதிச் செல்வரோ அவர்கள் இரண்டு பேர்களும் தன் முகத்திலிருந்து தெரிந்து கொள்வதற்குக் காத்திருந்த உணர்ச்சிகளைச் சிறிதளவும் தன்னிடம் தெரிய விடாமல் சர்வ சாதாரணமாக அந்த ஐம்படைத் தாலியைத் தன் கையில் வாங்கிக் கொண்டு நின்றார். வாங்கிக் கொண்ட விதத்திலும் வாங்கிக் கையில் வைத்துக் கொண்ட விதத்திலும் எந்த அவசியமும் தெரியாத அலட்சிய பாவம் திகழ நின்றுகொண்டு ஒரிரு கணங்களுக்கு அந்தப் பொருளைப் பற்றிய நினைவையே அவர்களிடமிருந்து மறைப்பதற்காக, 'இது என்ன? இந்தப் பொற் பேழை நிறையக் கொண்டு வந்து இங்கே வைத்த பணியாரங்களும் உணவும் அப்படியே இருக்கின்றன? நீங்கள் இருவருமே ஒன்றும் உண்ண வில்லையா?' என்று கவனத்தில் பட்ட வேறொரு காட்சியைப் பற்றித் தேவையைவிட அதிக அக்கறை எடுத்துக் கொண்டவர் போலக் கேட்டார். அவர் தங்களை அப்போது திட்டமிட்டுக் கொண்டு ஏமாற்றுகிறார் என்று சுரமஞ்சரிக்கும் வசந்தமாலைக்கும் ஓரளவு புரிந்தது....தொலைந்து போன ஐம்படைத் தாலி திரும்பக் கிடைத்ததால் தமக்கு ஏற்படுகிற மகிழ்ச்சியைத் தெரிய விடாமல் செய்வதற்காகத்தான் கவனம் செலுத்தி விசாரிக்க வேண்டாத சிறிய விஷயமான இந்த உணவுப் பேழையைப் பற்றி விசாரிக்கிறார் என்றும் அவர்கள் புரிந்து கொண்டார்கள். நொடிப்போதில் எதிரே நிற்கிறவர்களுடைய ஆவலையும் மனப்போக்கையும் புரிந்து கொண்டு தாம் அதற்கேற்ப விரைந்து மாறிக் கொண்டு எதிரே யிருப்பவர்களின் உணர்வைத் தாங்கி நிற்கும் அந்தத் தந்திரத்தைப் பார்த்து வியப்பதா, பயப்படுவதா என்றே புரியாமல் மலைத்து நின்றார்கள் தோழியும், அவளுடைய தலைவியும். அப்போது அவருடைய குரல் இருந்தாற் போலிருந்து திடீரென்று உரம் பெற்று மிக வலிமையாக அவர்களை நோக்கி ஒலித்தது.

''பெண்ணே! உன்னைக் காட்டிலும் உன்னுடைய தந்தைக்குப் புத்தி அதிகமாக இருக்கும் என்பதை நீ ஒரு போதும் மறந்துவிடக் கூடாது. சில ஆண்டுகளுக்கு முன் ஏதோ ஓர் இந்திர விழாவின் இரண்டாவது நாள் பூதசதுக்கத்துக் கூட்டத்தில் யாரோ ஒரு பிள்ளையாண்டானைக் கண்டு பிடித்து அழைத்து வந்து அவனுடைய ஓவியத்தை வரைந்து வாங்கினாய் அல்லவா? அந்த நாளிலிருந்து இன்று இந்த ஐம்படைத் தாலியைக் கீழே கிடந்ததென்று சொல்லி என்னிடம் தோழி மூலமாக

எடுத்துக் கொடுக்கச் செய்யும் இந்த விநாடி வரை உன் தந்தைக்கே விருப்பமில்லாத பல காரியங்களை நீ வரிசையாகச் செய்திருக்கிறாய் என்பதைப் புரிந்து கொள். இந்த நிலையைத் தெளிவுபடுத்தி விவரமாக உனக்கு இப்போது சொல்ல முடியாதவனாக இருக்கிறேன் நான். ஆனால் சுருக்கமாக உனக்கு ஒன்று சொல்லமுடியும். இன்று உன் தந்தையின் எல்லா நினைவுகளும் எவைஎவற்றை எண்ணிக் கவலையும் குழப்பமும் அடைகின்றனவோ அவற்றையெல்லாம் அப்படி உயிர்த்து எழச் செய்தவள் நீதான் என்பதைப் படிப்படியாகக் காரண காரியங்களோடு உன்னிடம் விளக்கலாம். ஆனால் அதற்கு எனக்கு இன்று நேரமில்லை. இப்படிப் பெற்று வளர்த்துப் பேணி உனக்கு நான் தந்த வாழ்வு என்னுடைய சாவுக்கு நானே இட்டிருக்கிற வித்தோ என்று நினைத்துக்கொண்டு பயப்பட வேண்டிய காலமும் வந்து விட்டது'' என்று வாயிலுக்கு அப்பால் ஒரு காலும் இப்பால் ஒரு காலுமாகப் போகிற போக்கிலே பேசுவது போல் அவர் பேசி விட்டுப் போன வார்த்தைகள் சுரமஞ்சரியும் அவள் தோழியும் தீர்த்துக் கொண்டு தெளிவு பெற விரும்பிய குழப்பங்களைப் போலப் பல மடங்கு புதிய குழப்பங்களை அவர்களுக்கு இப்போது அளித்து விட்டன.

அந்த ஐம்படைத்தாலி திரும்பக் கிடைத்த நிகழ்ச்சியையே ஒரு சாதாரணமான நிகழ்ச்சியாக்கி விடுகிறவரைப் போல் அதற்குச் சில கணங்கள் இடைவெளியளித்து அதை மிகவும் அலட்சியம் செய்து தாங்களும் அதைச் சாதாரணமாகக் கருதத் தொடங்கி விட்ட நேரத்தில், 'உனக்கு நான் தந்திருக்கிற வாழ்வால் எனக்கு நீ தரப் போவது சாவு தான்' என்று துணிந்து அவர்களிடமே புதிர் போட்டு விட்டுப் போயிருந்தார் அவர்.

அங்கிருந்து அவர் தலை மறைந்தும், ''பத்துப் பன்னிரண்டு பேரரசர்களுக்குச் சூழ்ச்சிகளைக் கற்பித்துச் சொல்லிக் கொடுக்கும் ஒரே ஓர் அமைச்சராக இருக்கிற அளவு அற்புதமான சூழ்ச்சிகளைப் பாடம் பண்ணி வைத்துக் கொண்டிருக்கிற ஒருவர் உங்கள் தந்தையாயிருக்கிறார் என்பதற்காக நீங்களும் பெருமைப்படலாமே அம்மா!'' என்று சுரமஞ்சரியிடம் மெல்லச் சொல்லிச் சிரித்தாள் வசந்தமாலை. (தொடரும்)

# நாணம்

எஸ். லட்சுமி சுப்ரமணியம்

"ஜயம்! இங்கே வாயேன்" என்று கூப்பிட்டான் ராமு. அவன் மடிமேல் புதிதாக வந்த பத்திரிகை பிரிந்து கிடந்தது. வழவழப்பான காகிதம், பெரிய அளவு பக்கம். வர்ணப் படம்.

ஜயா அவன் கைகளின் மேல் கவிந்து குழந்தை ஆர்வத்தோடு பார்த்தவள் சட்டென்று பார்வையைத் திருப்பிக் கொண்டாள். முகம் சிவந்து போயிற்று.

"என்னவாம்? இந்த ஜீன்ஸ் உடை நன்றாக இல்லே?" என்று அவள் விரல்களைப் பிடிக்கப் போனான் அவன். ஆனால் அவள் அவனுக்கு அகப்படவில்லை. சோபாவில் உட்கார்ந்து குனிந்த தலை நிமிராமல் துணியில் பூ வேலை செய்ய ஆரம்பித்து விட்டாள்.

அந்த மாதிரி சமயங்களில் கேட்ட கேள்விக்குப் பதில் வராது. மிஞ்சிப் போனால் அர்த்தம் புரியாத, ஆனால் கவர்ந்து இழுக்கும் அந்தப் புன்னகைதான் பதில்.

அவள் சுபாவமே அப்படி. பெண்மைக்கு இயல்பாக நாணம் அவளிடம் கொஞ்சம் அதிகமாகவே இருந்தது. அதுவே அவள் பண்புக்கு மெருகு கொடுப்பது போல் ராமுவுக்குத் தோன்றியதுண்டு. ஆனால் வர வர அவன் பொறுமையைச் சோதிக்கும் அளவுக்கு அவள் ஓட்டுக்குள் சுருங்கும் நத்தை போல அவன் கவனத்திலிருந்து நழுவ ஆரம்பித்துவிட்டாள். தித்திப்பு அதிகமாகித் திகட்டிப் போவது போல அதுதான் அவனுடைய ஏமாற்றம்.

சென்னையில் மின்வண்டி நிலையத்துக்குப் பக்கமாக அவர்கள் போர்ஷன் இருந்தது. எட்டிப் பார்த்தால் வண்டித் தொடர் தாளமிட்டுக் கொண்டு போவது தெரியும். ஜயம் பால்கனியில் நின்றபடி, வெய்யிலில் பளபளத்து மறையும் வெள்ளி நிற வண்டிகளை எண்ணிக் கொண்டிருப்பாள்.

விடுமுறை நாட்களில் வெளியே போய் வர அதுதான் அவர்கள் வாகனம். டிக்கட்டை வாங்கிக் கொண்டு படியேறி இறங்கும்போது வண்டி தலை நீட்டி நுழைந்து விடும். அவசரம் அவசரமாக ஓடிப் போய் ஏறும் போது அவள் கையைப் பிடித்து அவன் வண்டிக்குள் இழுத்துக் கொள்வான். அந்தக் கண நேரப் பொழுதில் அவள் பார்வையில் நாணமும் கோபமும் கலந்து சாயலிடும். இறங்கும் வரையில் அவள் தலை நிமிரவே மாட்டாள்.







"வீட்டுக்காரர் வந்தாரு. அடுத்த மாசம் வீட்டுக்கு வெள்ளையும் அடிச்சு, ரிப்பேரும் பண்ணிக் கொடுக்கிறதா சொல்லிப் போயிருக்கார்....!"

"சரிதான்! அவரு எலக்ஷன்லே நிக்கிறார் இல்லே? நம்ம ஓட்டுக்குத்தான் 'காக்கா' பிடிக்கிறாரு....."



திரைப்படம் தொடங்கியதும் பார்க்க ஆரம்பித்து விட்டவன் விளக்கேற்றியதும் உணர்வு திரும்பியது போலக் குலுங்கி நிமிர்வான். பின்புறம் வளைய வந்திருக்கும் கையிலிருந்து தன்னை லாகவமாக விடுவித்துக்கொள்வாள். அவன் பிடிவாதம் செய்தால் காதருகே மனமானவென்று மூச்சிலும் தாழ்ந்த குரலில் பொரிந்து தள்ளுவாள்.

கடற்கரையில் உட்கார்ந்து மணலை அளைந்து கொண்டிருக்கும் போது, எதையோ நினைத்துக் கொண்டவன் போல் அவள் மணற்குவியலின் அடியில் அவள் விரல்களைப் பற்றிக் கொள்வான். சட்டென்று விரல்களை வெளியே இழுத்துக் கொண்டு ஜயம் யோசனையாய் நகத்தைக் கடிக்க ஆரம்பித்து விடுவாள்.

"நீ ஏன் இப்படி இருக்கிறாய்?" என்று அவன் கேட்டதில்லை; கோபப்பட்டதுமில்லை. ஆனால் ஏதோ ஒரு குறையில், நிறைவு காணாத இன்பத்துக்காக ஏங்கி, அவன் மனம் மௌனமாய்ப் புலம்பும்.

மணமான புதிதில் அவன் காமிரா வாங்கியிருந்தான். காமிராவும் புதிது. அவள் அறியாமல், வெவ்வேறு விதமாக அவளைப் படம் பிடித்து விட்டான். எல்லாவற்றையும் படமாக்கி ஆல்பத்தில் ஒட்டி அவளிடமே கொடுத்து விட்டான். "அவள் என்னதான் செய்கிறாளென்று பார்ப்போம்" என்று கவனிக்கத் துடிதுடிப்பு. ஆல்பத்தைப் பிரித்ததும் அவர்கள் பார்வையில் விழுந்த படம் அது.

குழந்தையைப் போல மண்டியிட்டுக்கொண்டு தோள் மேல் குழைந்த பின்னல் தரையைத் தொட, கைவிரல் ஓட்டத்தில் கண் பார்வை ஒட்டி நிற்க, அவள் கோலம் போடும் காட்சி.

மலர்ந்த அவள் புன்னகையில் வெட்கம் தயங்கிற்று.

"இன்னும் பாரேன்!" என்று சிரித்தபடி அவன் சற்று நேரம் நின்றான். அவன் பார்வையில் குறும்பு மிளிர்ந்தது.

அடுத்தது புத்தகத்தைப் படித்தபடியே அவள் சோபாவில் அயர்ந்து விட்டாள். காற்றில் அலைந்த நெற்றி முன் மயிர். மடி மேல் விழுந்து கிடந்த கைகள். அவைகளைச் சுற்றிய அகன்ற நீண்ட பின்னல். கண நேரம் பூரித்து நெகிழ்ந்த நெஞ்சு.

அவள் பட்டென்று ஆல்பத்தை மூடினாள். அப்புறம் அவன் அதை வெளியே பார்க்கவே இல்லை. அவள் பெட்டியின் அடியிலோ, அலமாரியின் உள் பிரிவிலோ, எங்கேயோ, அது கண்காணாமல் குடிபுகுந்திருக்க வேண்டும். அதை வைத்துக் கொண்டு அவளிடம் ஒவ்வொரு படமாகக் காட்டி விளக்கம் சொல்ல வேண்டுமென்று அவன் கண்ட கனவுகள்தான் எத்தனை?

ஃ ஃ ஃ

**மா**லை நேரம். வீட்டெதிரே பசும்புல் மைதானம். பையன்கள் கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவன் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தான். அவள் பின்புறமாக வந்து நின்றாள்.

"அங்கே பார்த்தாயா ஜயம்?"

அவன் விரல் எதிர்ப்புறம் வீட்டு வாயிலை நோக்கிப் பிரிந்தது. புதிய ஸ்கூட்டர். அவனைப் போலவே துடிப்பான வயது அந்த வாலிபனுக்கும். அவன் ஸ்கூட்டரில் ஏறி உட்கார்ந்து விட்டான். அவன் மனைவி புதுப் புடவை சரசரக்கக் கையில் குலுங்கும் பையோடு ஒரு துள்ளலில் ஓடிவந்து பின்புறம் லாகவமாய் ஏறி உட்கார்ந்துகொண்டாள். கீழே விழுந்து விடாமலிருக்க அவள் கை விரல்கள் அவன் தோள் மேல் சுவாதீனமாய் இறுகின. அவன் அதைப் பெருமிதமாகத் திரும்பிப் பார்த்துக் கொண்டான். அந்த இரகசியப் பார்வையில் இருவர் முகத்திலுமே மகிழ்ச்சி வெறி கூத்தாடிற்று.

ஸ்கூட்டர் போய் விட்டது. ராமு அவள் புறம் திரும்பி, "நானும் ஒரு ஸ்கூட்டர் வாங்கப் போகிறேன்" என்றான்.

அவள் பின்னலைக் கையில் அடித்தபடி நிதானமாக, "தாராளமாய் வாங்குங்கள். ஆனால் நான் அந்த மாதிரி உட்கார்ந்து கொண்டு வர மாட்டேன், ஊரெல்லாம் காண இழைந்து கொண்டு—" என்று சொன்னாள்.

"இதில் என்ன தப்பாம்?" என்று கேட்க வாயெடுத்தவன் அவள் முகத்தில் தெளிந்த அந்தரங்க நிழலைக் கண்டு மேலே பேசாமல் நிறுத்திக் கொண்டான்.

"ஜயம்! ஆனாலும் நீ...." என்று கொஞ்சதூரம் அவன் மனத் தாங்கலைச் சொல்லி விட்டதில் ஏதோ ஒரு திருப்தி ஏற்பட்டது. அவ்வளவுதான்.

ஆனால் அந்தப் பேச்சுக்காக அவன் தயங்கி நின்று விடவில்லை. அந்த மாதக் கடைசியில் ஸ்கூட்டரில் வந்து இறங்கினான். கண்கள் ஆச்சரியத்தினால் விரிய, பெருமிதம் ததும்ப அவனை வாசலில் வரவேற்றவள், அவன் பேச்சு நிலவுக்கு வந்ததும் உடனே நழுவி உள்ளே மறைந்து விட்டாள்.

ஒவ்வொரு நாளும் அதில் வெளிக் கிளம்பும் போது ஜயத்தைத் திரும்பிப் பார்ப்பான். உள்ளூற அவா அடித்தாலும் அவள் மறுப்பில் அது மறைந்து போய்விடும். அவனுடைய நண்பர்களும் அதைப் பற்றிக் குறிப்பிடாமல் இல்லை.

"உன் மிஸஸ் எங்கேப்பா?"

"நாங்களெல்லாம் வேற்றுமனுஷங்களா?"

"நீ ரொம்பப் பொறுமைக்காரன்."

இப்படி அடிக்கடி காதில் விழும் பேச்சுக்களையும் கேலிகளையும் அவன் சிரித்துச் சமாளித்துக் கொள்வான்.

ஊரிலேயே அவள் அப்படித்தானே? பையும் கையுமாகப் படியிறங்கி வண்டியில் ஏறிவிடும் வரை முகம் கூடத் தெரியாது. அப்புறம் கடிதத்தில் வரும், நெஞ்சில் இருந்ததையெல்லாம் கொட்டியபடியே.

"ஜயம்! உன் கடிதத்தைப் படித்துக் காட்டட்டுமா?" என்று கேட்பான்.

உணர்ச்சிப் பெருக்கில் முகம் சிவக்கும். "போதுமே!" என்று அவள் வேகமாக உள்ளே போய் விடுவாள்.

அன்று ஜயம் உள்ளே வேலையாக இருந்தாள். வாசற்கதவை இடிக்கும் சத்தம் கேட்டது. கதவு திறந்ததும் அவிழ்ந்த முண்டாசும் வியர்வை நெற்றியுமாகச் சேவகன் நின்றான். அவன் குரலில் இரைப்பு பேச்சைத் தடுமாறச் செய்தது.

"ஐயா ஆபீஸுக்கு வரப்போ ஸ்கூட்டர் ஆக்ஸிடெண்டாகி —"

மேலே காதில்விழுந்தது அவளுக்கு ஞாபகம் இல்லை. கதவுகளை மூடியதும், மஞ்சள் துணியில் ரூபாயை முடிந்ததும், டாக்ஸியில் உடல் பரபரக்க உட்கார்ந்தபடி ஆஸ்பத்திரிக்குப் போனதும், வார்டு நம்பரைத் தேடி அலைந்ததும் கனவு போல் இருந்தன.

இரண்டு நாட்களுக்கு அவளுக்குத் தூக்கம் இல்லை. நல்லவேளையாக அவனுக்குப் பெரிய அடி ஒன்றும் இல்லை; சொற்ப காயம் தான். அவனுக்கு ஓய்வுதான் தேவை என்று டாக்டர் சொல்லி விட்டார்.

ராமுவுக்கு நினைவு திரும்பியதும் அவன் பார்வையில் உறைத்தது அவள் உருவமே. முடியக்கூட மறந்து போன கூந்தல் சரிந்து அவன் மார்பை நீவிற்று. நெற்றி மேல் ஆதரவாகப் படிந்த விரல்கள்; முகத்தை விட்டு அகலாத பார்வை. கையில் சேரும் கைப்பிடி.

டாக்டர் பக்கத்திலேயே நின்று கொண்டிருந்தார். கால் மாட்டில் நர்ஸ்.

ஜயமா அது? அவ்வளவு பேர்கள் முன்னிலையில், அவன் பக்கத்தில் உட்காரக்கூட அவளுக்குத் தயக்கமாக இருக்குமே? ஏது இவ்வளவு தைரியம்?

டாக்டர் அடுத்த படுக்கைக்கு நகர்ந்து விட்டார். அவள் முகம் அவன் தோளில் பதிந்தது. கண்ணீர் சில்லிட்டது.

அவன் நிமிர்ந்து உட்கார முயன்றான். அவள் கையைப் பிடித்துக் கொண்டாள். அவள் விலக வில்லை. அவனிடம் நகர்ந்து பரிவுடன் தலையைத் தன் தோள்மேல் சாய்த்துக்கொண்டாள் அவள்.

அந்த உறவு அமைதி நிறைந்தது. அடக்கமே அதன் அபூர்வ நயம். அந்த அன்புக்குச் சல்லாபக் கவர்ச்சி இல்லை. ஆனால் அதில் ஆர்வத்துக்குக் குறைவில்லை. தன் அந்தரங்கத்தை, உணர்ச்சி வேகத்தை வெளிக் காட்டினால் தாங்கமாட்டான் என்றே அவள் தன்னை அப்படி அடக்கிக் கொண்டாளோ?

டிஸ்சார்ஜ் ஆகி வெளியே வந்த போது அவன் கையைத் தன் தோள் மேல் வைத்தபடி ஆதரவாகப் பிடித்துக் கொண்டு வந்து டாக்ஸியில் ஏற்றினாள் அவள்.

உள்ளே ஏறி உட்கார்ந்த பிறகும் அவன் கையை எடுக்க வில்லை. அவள் பின்புறம் அவள் திரும்பிய போது அவன் பார்வை அவள் தோள் மேலேயே படிந்திருந்தது. கைமேல் கை பொத்திற்று.

மெதுவாகத் தன்னை விடுவித்தபடி, ''கையை எடுங்கள்! இதென்ன எல்லாருக்கும் முன்னால்—'' என்று டாக்ஸி டிரைவரின் காதில் விழாதபடி மெதுவான குரலில் சொன்னாள் ஜயம்; சுபாவம் திரும்பி விட்டது.

அவன் சிரித்துக் கொண்டான். அவள் பழைய ஜயமேதான்!

# கிரிக்கெட் இலக்கியம்

## வீபீயெஸ்



அடித்தார்க்கு ஆறு ரன் கிடைத்தால் இன்பம் பந்தைப்
பிடித்தார்க்குப் போரில் வென்ற புகழ்.

அடித்ததனால் ஆய பயனென் கொல் அதனைத்
தொடர்ந்தும் பின் டொரனொவின்.

எப்படி அடித்தார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
அப்படியே திருப்ப வருக்கு.



கிரிக்கெட் உளவாகக் கடற்கரை செல்லுதல்
கனி இருப்பக் காய் கவர்ந்தற்று.

'டக்'ஆகி வந்தவரை ஒறுத்தல் அவர் நாணக்
கொக்கரித்துக் கூச்சல் போடுதலாம்.

தந்தை மகற்கு ஆற்றும் நன்றி 'டெஸ்ட் மாட்ச்'க்கு
முந்திக் கொண்டு பணம் கொடுத்தல்.



பந்தினால் பட்ட புண் உள் ஆறும் ஆறாதே
நிந்திக்குமுன் விக்கெட் விழுங்கால்.

யாகாவார் ஆயினும் விக்கெட் காக்க காவாக்கால்
சோகாப்பர் அவை விழ்த்தப்பட்டு.

ஆட்டத்திற்கணிகலம் பந்தாட்டம் அஃதின்றேல் வெறும்
கூட்டத்தானென் றுணரப்படும்.

உடுக்கை இழந்தவன் கைபோலப் பந்தைச்
சடக்கென்று பிடிப்பதாம் ஃபீல்டிங்.



கண்ணுடையார் என்பவர் கிரிக்கெட் பார்ப்போர் இரண்டு
புண்ணுடையார் பாராதவர்.

செல்வத்துள் செல்வம் 'ஸெஞ்சுரி'ச் செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை.

யான்நோக்கும் காலை விளையாட்டை நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்.



# பாதுகாப்பு

## தரையிலிருந்து தொடங்குகிறது

# Firestone

## பயர்ஸ்டோன்

நியூ டிலக்ஸ் சாம்பியன் டயர்களைப்
பொருத்துங்கள்

**நீடித்த காலத்திற்கு அபாயமின்றி இருங்கள்**




**உங்களுடைய காருக்குப் புதிய டயர்கள் தேவையா? உங்கள் பணத்திற்குரிய உயரிய மதிப்பைப் பெறுங்கள் — பயர்ஸ்டோன் வாங்குங்கள். ஏனெனில்,**

உலக மோட்டார் ஓட்டப் பந்தயக்காரர்கள், அவர்களுடைய உயிருக்காக எந்தத் தொழிலியல் நுட்பத்தை நம்பியிருக்கிறார்களோ, அதே தொழில் திறனின் தயாரிப்புதான் பயர்ஸ்டோன் டயர்களும். நீடித்து உழைக்கவும், தேய்வு பெறாமலும், உங்களுக்கு நீடித்த காலத்திற்கு அபாயமின்றி இருப்பதற்குமெனவே பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்டவை பயர்ஸ்டோன் டிரெட்.

இன்னமும் தனிப்பட்ட பயர்ஸ்டோனின் பாதுகாப்பளிக்கும் டிரெட் அதன் ஆயிரக்கணக்கான வழுக்குவதைத் தடுக்கக்கூடிய கோணங்கள் மூலம் உங்களுக்கு மிகவும் அதிகப்படியான பிரேக் கன்ட்ரோலைக் கொடுப்பதற்கெனவே உருவாக்கப்பட்டிருக்கிறது.

## பயர்ஸ்டோன்

**இன்று சிறந்தவை....நாளை மேலும் சிறந்தவை**


கதை: வாண்டுமாமா
கீழே போய்ச் சோதனையிட்டுப் பார்....
சித்திரம்: ரமணி..
3


சந்தேகப்பட்ட படியே அடியில் எங்கோ ஓட்டை ஏற்பட்டிருக்கிறது. கீழே எல்லாம் ஒரே தண்ணீர். யாரோ ஒரு பையன் வேறு..
மெள்ள அவனை மேலே கொண வா.


இன்னும் கொஞ்சம் தாமதித்துப் போயிருந்தால் பயல் செத்திருப்பான்.


அவனை விடுதலை செய்யாதே. நம் திட்டங்களுக்கு இவன் வரவு ஆபத்து. இவனைக் கொல்லாமல் கொல்ல வேண்டியது உன் பொறுப்பு.
ஹா... நீங்களா?


அதோ... தூரத்தில்.. முகமூடியணிந்த இந்த உருவம் யாராக இருக்கும்?


எங்கள் தலைவருக்கு எதிராகக் கிளம்பி இருக்கிறாயா பொடிப்பயலே? கப்பலினுள் எப்படிப் புகுந்தாய் சொல்.
தலைவரா? யாராக இருக்கும்?




மூர்ச்சையாகும் வரை சாட்டையால் அடித்துக் கப்பலின் அடியிலுள்ள ஓர் இருட் சிறையில் ஆனந்தனைக் கொண்டு போய்த் தள்ளுகிறான். கொள்ளைக் கப்பல் தலைவன். கப்பலின் ஓட்டைகளும் பிடிக்கப்பட்டு அடைக்கப்படுகிறது. முகமூடியணிந்த உருவம் விடை பெற்றுக்கொண்டு படகில் தனது கப்பலுக்குத் - திரும்புகிறது......




கப்பல் சிறையில் நினைவு வற்ற ஆனந்தன்










அந்த உருவம் யாராக இருக்கும்? அதன் குரல் — எங்கோ கேட்டிருக்கிறேனே. எங்கே..? ம்.. அப்பா, நான் — சிறைப்பட்டு விட்டேன். உங்களை எப்படி — விடுவிப்பேன். ஆ! அதென்ன? சப்தமிது? பேரிரைச்சல்! புயல்!


கடல் கொந்தளிக்கிறது. புயலின் நடுவே கப்பல்.


மின்னல்... இடி... சூறைக் காற்று! தலைவரே! இனிச் சமாளிக்க முடியாது.
தைரியத்தை இழக்காதே..


தைரியம் மட்டும் போதுமா?


ஒரு விதத்தில் புயல் எனக்கு உதவியே செய்திருக்கிறது. விலங்கு விடுபட்டது. விதி வழி வகுத்தால், உயிரோடு விடுதலையும் கிடைக்கும்...


புயல் ஓய்ந்தது. உடைந்த கப்பல் கரையில் ஒதுங்கியது. இளவரசன் ஆனந்தன்........?

தொடரும்

**All wise mothers protect their babies with...**



# Binaca

## BABY POWDER with BRADOSOL

A Baby Powder carefully formulated in the scientific laboratories of CIBA, to give maximum comfort and protection to the delicate baby skin. Owes its protective properties to "Bradosol" a compound invented by CIBA and found after exhaustive trials ideal for the purpose.

**a CIBA quality product for baby care**

புது வெள்ளம்

அகிலன்

அத்தியாயம் பதினொன்று

## விலாசம் மாறியது

இளமைப் பருவத்தின் இனிய நினைவுகளில் மயங்கிய இளவரசி ஒருத்தி அழகியதொரு பூஞ்சோலையில் உல்லாசமாக ஆடிப் பாடித் திரிந்தாள். பூஞ்சோலையின் நறுமலர்கள் அவள் காதருகில் குனிந்து கற்பனைக் கீதம் இசைத்தன. செடிக்குச் செடி கூட்டங் கூட்டமாகப் பறந்த தேனீக்களும் வண்ணத்திப் பூச்சிகளும் திடீரென்று மலரிதழ்களாக மாறி அவள் மீது பொல பொல வெனப் பொழிந்தன. அவள் திரும்பிய திசைகளிலெல்லாம் குபீர் குபீரென்று நீரூற்றுப் பொங்கிப் பொசிந்தது.

அவள் காலையிளம் கதிரில் கனவுகள் மிதந்து வருவதைக் கண்டாள். மாலையின் மயக்கத்தில் மதுவருந்தித் திளைக்கும் பொன் வண்டாக மாறினாள். உலகமே முற்றிலும் மாறிப் போய்ப் புதிய தோற்றத்துடன் அவளுக்குக் காட்சியளித்தது.

அந்த இளவரசி வேறு யாருமில்லை; சில வாரங்களுக்கு முன்பு முருகையனுக்குப் பணிவிடைகள் செய்யும் பாக்கியத்தைப் பெற்றிருந்த சாந்தாதான். வெளித்தோற்றத்துக்கு எந்தவித மாறுபாடும் அவளிடம் காணப்படவில்லை. ஆனால் அவளுடைய உள்ளத்திலோ சொல்லமுடியாத . கற்பனைகள்.

பொறுப்புக்களும், கடமைகளும், துன்பங்களும் நிறைந்த அவனுடைய வாழ்க்கையில் ஏதோ ஓர் ஆழ்ந்த பொருள் இருப்பதாக அவளுக்குத் தோன்றியது. வெறும் நினைவுகளில் தேனைவிடத் தீஞ்சுவையும், மல்லிகையை விட நறுமணமும், ஆயிரமாயிரம் வண்ண விசித்திரக் காட்சிகளும் இருக்க முடியுமென்பதைச் சாந்தா முருகையனைக் கண்ட போதெல்லாம் உணர்ந்தாள். தன்னைப் போலவே அவனும் நினைக்கக் கூடும் என்றும் நம்பினாள்.

ஆனால்?.... நினைவு நிலையில்லாமல் போய்விட்டது. கனவு காலமென்னும் கற்பனையில் கரைந்து விட்டது. முருகையன் அவளிடம் எதையுமே சொல்லாமல், எதையுமே கேட்காமல், ஒரு நாள் கிளம்பிப் போய் விட்டான். அவன் போன போக்கில்; அவன் விட்டுச் சென்றது எது என்பது அவளுக்கே தெரியாதது. பொறுப்பு அவனுடையதில்லை; சுற்றம் அவனுடையதில்லை.

பாவம், சாந்தா ஒரு பெண்!

கற்பனைக் கனவுகள் கலைந்த பின்னர் அவளுடைய உள்ளமாகிய பூஞ்சோலையில் கள்ளிச் செடிகள் முளைக்கக் கண்டாள். கற்றாழை படர்ந்து எங்குமே முள் நிறைந்திருப்பதை அறிந்தாள். ஆயிரமாயிரம் தேனீக்கள் அவளது மிருதுவான இதயத்தைச் சூழ்ந்து கொண்டு அதைச் சல்லடைக் கண்களாக்கின. முருகையன் அங்கு வராமலே இருந்திருக்கக் கூடாதா? அவனை அவள் சந்திக்காமலே இருந்திருக்கக் கூடாதா?



சாந்தாவின் துன்பத்தை நடிகை கருணை மட்டிலும் எப்படியோ அறிந்து கொண்டாள். முருகையன் அந்த வீட்டை விட்டுச் சென்றதிலிருந்து சாந்தாவின் கலகலப்பும் சுறுசுறுப்பும், உற்சாகமும் அவளை விட்டுப் போய்விட்டன என்பது அவளுக்கு மாத்திரமே தெரிந்தது.

''அக்கா! நீங்கள் ஏன் இப்படி யிருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும். இந்த ஆண்களே இப்படித்தான் அக்கா!'' என்று அழமாட்டாக் குறையாக அவள் ஒரு நாள் கூறினாள்.

சாந்தாவுக்கு அவன் தன்னைக் கண்டு கொண்டது பிடிக்கவில்லையென்றாலும், அவனுடைய பேச்சில் கிடைத்த ஆறுதலுக்காக அதைப் பொறுத்துக் கொண்டிருந்தாள்.

''நாம்தான் மனத்தில் உள்ளதை வெளியில் சொல்ல முடியாமலும் அதை மனத்தில் வைத்துக் கொண்டிருக்க முடியாமலும் தனியாய்த் தவிக்கிறோம். ஆண்களுக்கு நம்மைப் பற்றியெல்லாம் கவலையே இல்லை. அவரவர்களுக்கு அவரவர்களுடைய வேலைதான் பெரியது. நம்மைத் திரும்பிப் பார்க்கவும்மாட்டார்கள். நமக்காகக் கவலைப்படவும் மாட்டார்கள்.''

''அது நியாய'ம்தானே, கருணா?'' என்றாள் சாந்தா. பெண்களுக்கு ஆண்கள் மட்டிலுமே உலகம். ஆண்களுக்கோ ஆயிரம் தொல்லைகளோடு வெளி உலகம் காத்திருக்கிறதே; அதை அவர்கள் கவனிக்க வேண்டாமா?''

'போங்கள் அக்கா அப்படியானால் திடீரென்று அவர் இந்த வீட்டை விட்டு ஓடிப் போனது சரியென்கிறீர்களா, நீங்கள்? சாகக் கிடந்தவரைப் பிழைக்க வைக்க என்ன பாடு பட்டிருக்கிறீர்கள் அந்த நன்றிகூட அவருக்கு வேண்டாமா?''

சாந்தா வேறுபுறம் திரும்பித் தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள். கருணாவின் பேச்சுக்குக் காரணம் முருகையனல்ல அவளுக்குக் குருசாமியின் மீதிருந்த ஆத்திரம் இப்படித் திரும்பி விட்டது போலும்!

குருசாமி நாடகம் இருந்தபோதெல்லாம் அவளைத் தவறாது அழைத்தான். மிகவும் பற்றுதலோடு அவளுக்கு வசனமும் நடிப்பும் சொல்லிக் கொடுத்தான். பணம் கொடுப்பதிலும் கண்டிப்பாக இருந்தான். ஆனால், அவள் மனப்போக்கை அவன் கண்டுகொண்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை. இந்த ஒரு விஷயம்தான் கருணாவுக்குத் தாங்க முடியாத எரிச்சலைத் தந்தது.

நடிப்புத் தொழிலுக்கு அவள் வந்த பிறகு, அவளைக் கண்டு பல்லைக் காட்டாத ஆண்கள் மிகவும் குறைவு. அப்படிப்பட்டவர்களிடமெல்லாம் கருணா நெருப்பாய்ப் பழகியிருக்கிறாள். குருசாமி மட்டிலும் ஏனோ நெஞ்சுருகிக் காதலிப்பவனைப் போல் மேடைக்காக வசனம் பேசிவிட்டு மற்றச் சமயங்களில் அவளிடம் துறவியாகக் காட்சியளித்திருக்கிறான். 'இப்படிப்பட்டவர் எங்கேயாவது காசிக்குப் போய்க் காவியுடுத்தாமல், இந்தத் தொழிலுக்கு ஏன் வந்திருக்கிறார்?' என்று கருணா பல முறைகள் நினைத்ததுண்டு.



"அக்கா! உங்களுடையவரின் சிநேகிதர் குருசாமி இருக்கிறாரே, அவரும் இப்படித்தானக்கா!" என்று தன் கதையைச் சொல்லத் தொடங்கினாள் கருணா. "உண்மையிலேயே அவர் பிறவி நடிகர், அக்கா! அவருடைய நடிப்புத்தான் என்னை இப்படிப் பைத்தியமாக அடித்துவிட்டது. ஆனால் அவர் தம் நடிப்பை மேடையோடு நிறுத்தாமல், காரியப் பைத்தியமாய் ஒன்றும் தெரியாதவர் போல் என்னிடம் நடிக்கிறாரே, அதுதான் எனக்குப் பிடிக்கவில்லை. இதற்குஎன்னஅக்கா செய்வது?"

சாந்தா வருத்தத்துடன் சிரித்து விட்டு, "என்னைக் கேட்கிறாயே, எனக்கு என்ன தெரியும்?" என்றாள்.

"பாவம், நீங்களும் என்னைப் போல் கவலைப்படுகிறவர்கள்......."

"அப்படியொன்றுமில்லை, கருணா! எனக்கு எந்தக் கவலையுமில்லை."

"நீங்கள் என்னிடமே நடிக்கிறீர்கள், அக்கா!" என்று சொல்லிக் கலகல வென்று சிரித்தாள் கருணா. "எனக்குச் சொந்த வாழ்க்கையில் நடிக்கத் தெரியாது. நேரே அவரிடம் போய் ஒரு நாள் கேட்கப் போகிறேன். அவர் சரியான பதிலைச் சொல்லா விட்டால் பிறகு அவரைத் திரும்பிப் பார்க்கவும் மாட்டேன்; அவர் நாடகத்தில் நடிக்கவும் மாட்டேன்!"

'நான் எப்படி முருகையனைத் திரும்பவும் சந்திப்பது? சந்தித்து அவரிடம் என்ன கேட்பது?' என்று எண்ணிப் பெருமூச்சு விட்டாள் சாந்தா.

முருகையன் எப்போதாவது அங்கு திரும்பி வரக் கூடும் என்றுதான் முதலில் சாந்தா நம்பினாள். அவனுடைய தந்தையிடமிருந்து வந்த கடிதங்களை வாங்கிக் கொள்வதற்குக்கூட அவன் வரவில்லை. நகரத்துக்குள் சென்ற சமயங்களில் பல முறை யார் யாரையோ பார்த்து முருகையன் என்று அவள் ஏமாந்து விட்டாள். கடற்கரையிலும் அவனைக் காண முடியவில்லை. எப்போது வெளியில் சென்றாலும் அவனுக்கு வந்த கடிதங்களை எடுத்துச் செல்வதற்கு அவள் மறப்பதில்லை. கண்டால் அவற்றைக் கொடுத்து விட்டு, ஏதாவது விசாரித்து அறியலாமல்லவா'

முன்பு அவள் மாலை வேளைகளில் பாரிஸ் முனைக்குச் சென்றிருந்தால் ஒரு வேளை முருகையனுடைய துடிக்கும் குரல் அவள் செவிகளில் விழுந்திருக்கும். பின்வர் வழியில் தென்பட்ட ரிக்ஷாக்காரர்களையாவது அவள் ஏறிட்டுப் பார்த்திருந்தால், அவர்களில் ஒருவனாக அவன் இருந்திருப்பான். அவள் அந்த இரண்டு காரியங்களையுமே செய்யவில்லை.

முருகையனை அறவே மறந்துவிடத் துடித்தாள் சாந்தா. மறக்க விரும்பும் நினைவின் ஆணி வேர் அவளுடைய இருதய நரம்புகளைப் பற்றிக் கொண்டுவிட்டதால், இருதயத்தைத் துண்டித்து எறிந்தால் தவிர, அவனை மறக்கமுடியாது போல் தோன்றியது அவளுக்கு.



"என்னங்க ஒரே கூட்டம் ஓடிக்கிட்டு இருக்குது?"

"ஒரு பெரிய கட்சி 'மீட்டிங்' நடக்குது. அங்கே கூட்டமே இல்லே என்று கேள்விப் பட்டு அந்த ஆச்சரியத்தை வேடிக்கை பார்க்க எல்லோரும் ஓடறாங்க!"

---

தனியாகக் கடற்கரைப் பக்கம் சென்று வழக்கமில்லாதவன் அன்றைக்கு ஏனோ தனியாகப் புறப்பட்டான். கடற்கரை மணலில் அமர்ந்து கண்ணீரைக் கொட்டி வந்தால் ஓரளவு ஆறுதல் கிடைக்குமென்று நினைத்தான் போலும். கடற்கரையை ஒட்டிய சாலையில், நடை பாதையில் எங்கோ கவனமாக நடந்தான். முருகையனின் தகப்பனார் உயிரோடிருந்தபோது எழுதிய கடிதங்கள் அவனிடம் இருந்தன.

பாதையோரத்துப் புதரருகில் ஒரு மரத்தடியில் சிமெண்டுப் பெஞ்சு ஒன்று கிடந்தது. அதில் விரக்தியோடு சாய்ந்து கொண்டிருந்த ஓர் உருவத்தைக் கண்டவுடன் திடுக்கிட்டு நின்றாள் சாந்தா. கண்கள் மூடியிருந்தன. ஆனால் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

தந்தையாரை அள்ளிப் போட்டு விட்டு வந்த முருகையன், தன் குடிசை வாழ்க்கையை உதறி விட்டு, சித்திராவுக்கு வாக்களித்தபடி அங்கே காத்துக் கொண்டிருந்தான். மின்னல் வேகத்தில் நடந்து விட்ட துன்ப நிகழ்ச்சிகளிலேயிருந்து அவன் இன்னும் மீளவில்லை. சித்திராவை எதிர்பார்த்து அவன் அங்கே வந்தாலும், அவனுடைய சித்தம் சிதையில் எரிந்து போய்ப் பிடி சாம்பலாகிய அவன் தந்தையைத்தான் சுற்றிக் கொண்டிருந்தது.

அருகில் சென்று அவனை உற்று நோக்கி விட்டு, "இந்தாருங்கள்!" என்று அழைத்தாள் சாந்தா.

முருகையனின் கண்கள் திறந்தன. குடிமயக்கத்தில் கிறங்கியவனைப் போல் அவன் விழித்தான். சித்திராவின் தோற்றம்தான் சாந்தாவின் தோற்றமாக மாறித் தெரிகிறதோ என்ற சந்தேகம் அவனுக்கு.

மௌனமாக இருவரும் ஒருவரையொருவர் உற்றுப் பார்த்தனர். சாந்தாவுக்கு அவன் தன்னை இனம் கண்டு கொள்ளாத நிலையில் இருக்கிறான் என்பது விளங்கி விட்டது.

கண்களை அழுத்தித் துடைத்துக் கொண்டு, "யாரது, சித்திராவா?... இல்லே, இல்லே, சாந்தா!" என்று தடுமாறினான் முருகையன்.

'சுரீர்' என்று அந்தச் சித்திரா என்ற சொல் சாந்தாவின் இதயத்தில் பாய்ந்தது. என்றாலும் நினைவு தவறிப் போய் அவன் தன் பெயரை மாற்றிச் சொல்வதாக நினைந்து, அவன் அருகில் அவள் நெருங்கினாள்.

"உங்களை எங்கெல்லாம் தேடிக் கொண்டிருக்கிறேன், தெரியுமா? வீட்டுப் பக்கமே திரும்பிப் பார்க்காமல் இருந்து விட்டீர்களே! உங்களுடைய அப்பாவுக்குக் கூட நீங்கள் விலாச மாற்றம் எழுதவில்லை போல் இருக்கிறது. இந்தாருங்கள், அவர் எழுதிய கடிதங்கள்!" என்றாள் சாந்தா.

கடிதங்களை வெறியோடு வாங்கிப் பிரித்தான் முருகையன். கண்ணீர் அடிக்கடி எழுத்துக்களை மறைத்தது. படித்து விட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டான். மடித்துச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான். அவனுடைய செய்கை ஒவ்வொன்றுமே விசித்திரமாகத் தோன்றியது சாந்தாவுக்கு.

"நீ அவருக்குப் பணம் அனுப்பினியா, சாந்தா!" — என்று அழுது கொண்டே கேட்டான்.

"ஏன் கடிதத்தில் அதையும் எழுதி விட்டாரா?" என்றாள் சாந்தா.

"நான் செய்யத் தவறியதை நீ செய்திருக்கிறாய், சாந்தா! நான் மறந்த கடமையை நீ முடித்திருக்கிறாய், சாந்தா!......சாந்தா! சாந்தா!....நீ ஒரு தெய்வம் சாந்தா!... தெய்வம் சாந்தா!" என்று அரற்றினான்.

"இப்போது என்ன வந்து விட்டது? எதற்காக அழுகிறீர்கள்? நீங்கள் ஆண்













# ராபின் ப்ளூ*




AAAC.2 TM

* ராபின் அல்ட்ராமரைன் நிறுவிந்து பிரபலமான பெயர்

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
மும்பாயத்தில் இணைக்கப்பட்டது



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

## பெப்ஸ் வில்லைகளை

உட்கொண்டால், உங்கள் இருமல்
உடனேயே அகலும்

பெப்ஸ் வில்லை ஒன்றைச் சுவைத்து ஆவி போன்ற அதன் சத்து குணமளிக்க வேலை செய்வதை உணருங்கள். வலியைக் குறைக்கும். தொண்டைப் புண், பிராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமாகிய கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது. பெப்ஸ் உடனடி நிவாரணம் அளித்து சீக்கிரமில் குணமடையச் செய்கிறது.



PPY-94-TAM

பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

**ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்**

சோல் ஏஜண்டுகள்
தாதா&கோ., 86, நைனியப்பநாயக்கன் தெரு, சென்னை-3

# வனஸ்பதி நமது உணவை அதிக போஷாக்குள்ளதாக்குகிறது

நாம் தினசரி உட்கொள்ளும் உணவில் குறைந்த பட்சம் 2 அவுன்ஸாவது கொழுப்புச்சத்து இருக்க வேண்டியது நம்முடைய ஆரோக்கியத்துக்கு மிக அவசியம் என்று உணவு ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். நமக்கு தொன்று தொட்டுப்பழக்கமான கொழுப்புச்சத்துக்களான நெய்யும் இதர தாவர எண்ணெய்களும், தற்போதுள்ள உற்பத்தி நிலையில் நமக்கு நாளொன்றுக்கு ½ அவுன்ஸுக்குமேல் கிடைக்க வழியில்லை!

இந்தக் கொழுப்புச் சத்துக்கள் போதிய அளவு கிடைப்பதில்லை என்பதோடுமட்டுமல்லாமல் விலையும் அதிகம். அதனால் லட்சக்கணக்கான மக்கள் கொழுப்புச் சத்துக் குறைவான உணவையே உட்கொண்டு தங்களது ஆரோக்கியத்துக்குக் கெடுதல் விளைவித்து வாழ்ந்து வருகிறார்கள்.

நம் நாட்டின் கொழுப்புச்சத்துக்களின் உற்பத்தியை அதிகரிப்பது எப்படி? அதிக பட்சம் எண்ணெயைத் தரக்கூடிய வேர்க்கடலையை பெரும் அளவில் பயிராக்கவேண்டும். நம் நாட்டில் ஏராளமாகக் கிடைக்கும் பருத்திக் கொட்டையை அதிக அளவில் பயன்படுத்த வேண்டும். இவ்விரண்டு விதைகளின் எண்ணெய்களை 'ஹைட்ரோஜனேஷன்' முறையில் கெட்டிப்படுத்தி மக்களுக்குப்பிடித்த வனஸ்பதியாக மாற்றவேண்டும்.

இந்த விதத்தில் வனஸ்பதியைத் தயார் செய்வதன் மூலம், பயிர்செய்யக்கூடிய நிலம் அளவோடு உள்ள நம் நாட்டில், கொழுப்புச் சத்துக்களின் அளவை அதிகரிக்க முடியும்.

## வனஸ்பதி உலகம் பூராவும் பிரபல்யம் அடைந்துள்ளது

முன்னேற்றமடைந்துள்ள, பெரும்பாலான நாடுகளில்கூட பரம்பரையாகப் பழக்கமான கொழுப்புச்சத்துக்கள் பற்றுக் குறைவாக இருந்தன. இக்குறையை நிறைவு செய்வதற்கு அவர்கள் 'ஹைட்ரோஜனேஷன்' மூலம் எண்ணெய்களிலிருந்து வனஸ்பதி போன்ற கொழுப்புச் சத்துக்களை பெரும் அளவில் தயாரித்தனர். இவை, அந்நாடுகளில் ''ஷார்டனிங்'' ''வெஜிடபிள் கீ'' ''மார்கரீன்''போன்ற பற்பல பெயர்களில் வழங்கி வருகின்றன.

உயர்ந்த வாழ்க்கைத்தரமும், திடமான ஆரோக்கியமும் உள்ள இந்த முன்னேற்றமடைந்த நாட்டு மக்கள் தங்கள் உடலுக்குத் தேவையான கொழுப்புச் சத்து முழு அளவும் பெறுவதற்கு வனஸ்பதி போன்ற கொழுப்புக்களையும், வெண்ணெய், நெய் போன்ற கொழுப்புக்களுடன் உட்கொள்ளுகிறார்கள் என்பதைக் கீழ்க்கண்ட புள்ளி விவரங்களிலிருந்து நன்கு அறியலாம்.

1959-ம் வருஷத்தில் ஒரு நபர் உட்கொண்ட கொழுப்புச் சத்து உணவு அளவு (ராத்தல்)

| நாடு | பரம்பரையாகப் பழக்கமான கொழுப்புக்கள் (வெண்ணெய், நெய் முதலியன) | வனஸ்பதி போன்ற கொழுப்புக்கள் (''ஷார்டனிங்'' ''மார்கரீன்'' முதலியன) | மொத்தம் |
|---|---|---|---|
| இந்தியா | 9.8 | 1.7 | 11.5 |
| பிரான்ஸ் | 22.5 | 5.3 | 27.8 |
| கானடா | 18.1 | 8.7 | 26.8 |
| பின்லாந்து | 32.4 | 14.6 | 47.0 |
| இங்கிலாந்து* | 18.5 | 19.9 | 38.4 |
| அமெரிக்கா* | 8.0 | 20.6 | 28.6 |
| மேற்கு ஜெர்மனி* | 17.2 | 27.1 | 44.3 |
| டென்மார்க்* | 23.6 | 41.4 | 65.0 |
| நெதர்லாண்ட்ஸ்* | 9.0 | 44.8 | 53.8 |
| நார்வே | 8.4 | 53.1 | 61.5 |

வெண்ணெய் ஏராளமாகக் கிடைக்கும் நாடுகளில் * கூட மக்கள் வெண்ணெயைவிட வனஸ்பதிபோன்ற கொழுப்புகளைத்தான் அதிக அளவில் உட்கொள்ளுகிறார்கள். ''ஹைட்ரோஜனேட்'' கொழுப்புக்களை அதிகமாக உபயோகிக்கும் இந்நாட்டு மக்களைப் போலவே, நம் நாட்டிலும், லட்சக்கணக்கான மக்கள், தங்களது உணவை அதிக போஷாக்குள்ளதாக்குவதற்கு, பரிசுத்தமுள்ள, போஷாக்கு வாய்ந்த, விலை அதிகமில்லாத, கொழுப்புச்சத்தான வனஸ்பதியை உபயோகிக்கிறார்கள்.

## வனஸ்பதியைப்போன்ற கொழுப்புச் சத்துக்கள் உலகம் பூராவும் உபயோகிக்கப்பட்டு வருகின்றன




அமெரிக்கா - அயர்லாந்து - அர்ஜெண்டினா - அல்பேனியா - அல்ஜீரியா - ஆஸ்திரேலியா – ஆஸ்திரியா - இங்கிலாந்து - இத்தாலி - இந்தியா – இஸ்ரேல் - ஈராக் - ஈரான் - எத்தியோப்பியா - ஏமன் - கானடா - கிரீஸ் - செக்கோஸ்லவேகியா - டென்மார்க் - துருக்கி - தென் ஆப்பிரிக்க யூனியன் - நார்வே - நெதர்லாண்ட்ஸ் – நைஜீரியா - பர்மா - பல்கேரியா – பாகிஸ்தான் - பிரான்ஸ் – பிரிட்டிஷ் கிழக்கு ஆப்பிரிக்கா – பிரேஜில் - பின்லாந்து - பெல்ஜியம் – போர்ச்சுகல் - போலந்து – மத்திய ஆப்பிரிக்க பெடரேஷன் – மலாயா - மெக்ஸிகோ – மொராக்கோ – யுனைடெட் அரபு ரிபப்ளிக் - யூகோஸ்லேவியா - ரஷ்யா - ருமேனியா – லிபியா – ஜப்பான் - ஜெர்மனி (கிழக்கு, மேற்கு) - ஸவூதி அரேபியா - ஸ்விட்ஜர்லாந்து – ஸ்வீடன் – ஹங்கேரி

அதிக விவரங்களுக்குத் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதுங்கள்,
தி வனஸ்பதி மானுபாக்சரர்ஸ் அஸோஸியேஷன் ஆப் இந்தியா
இந்தியா ஹவுஸ், போர்ட் ஸ்ட்ரீட், பம்பாய்-1

JWT/VMA 2909

பிள்ளை இல்லையா?'' என்று தேற்றினாள் சாந்தா. ''எனக்குத்தான் நீங்கள் இருப்பிடத்தைச் சொல்ல வில்லை. அவருக்காவது நீங்கள் விலாசம் கொடுத்திருக்கக் கூடாதா?''

''அவருடைய விலாசமே இப்போது மாறிப் போய் விட்டது சாந்தா. எந்தக் கடிதமும் போய்ச் சேர முடியாத இடத்துக்கு அவர் போய்ச் சேர்ந்துவிட்டார், சாந்தா!''

சின்னஞ்சிறு குழந்தைபோல் மளமளவென்று கண்ணீர் வடிக்கத் தொடங்கினான் முருகையன். சாந்தா அவனுடைய துயரத்தை யெல்லாம் தனக்குள் சுமந்து கொண்டு அவனைப் பரிவோடு தேற்ற முற்பட்டாள்.

### அத்தியாயம் பன்னிரண்டு

# களிப்பும் கண்ணீரும்

சித்திரா வழக்கத்தை விடச் சிறிது நேரம் அதிகமாகவே நிலைக்கண்ணாடியின் முன்பு நின்று தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு வீட்டை விட்டுப் புறப்பட்டாள். காரில் ஏறி உட்கார்ந்து அதன் கைப்பிடியைப் பற்றியவுடன் ஏனோ அவள் கரங்கள் இலேசாக நடுங்கின. இரு நாட்களுக்கு முன்பு திரைப்படம் பார்த்து விட்டுத் திரும்பும்போது நடந்த நிகழ்ச்சியை அவள் நினைத்துக் கொண்டாள்.

'ஏதோ ஒரு ரிக்ஷாக்காரன் மீது மோதிக் கொண்டதையும், அதைத் தொடர்ந்து தாத்தா அவளுடைய இடத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு காரை வேகமாக விரட்டி வந்ததையும் அவள் எண்ணிப் பார்த்தாள். அப்போது போலவே இப்போதும் அவள் தேகம் வேர்த்துக் கொட்டியது. தாத்தா ஒரு வகையில் தந்திரக்காரர்தான். காரை அங்கு நிறுத்தியிருந்தால் என்ன நடந்திருக்கும்?...

'கூட்டம் கூடியிருக்கும். போலீஸ்காரர்கள் வந்தாலும் வந்திருப்பார்கள். ரிக்ஷாக்காரனும், ரிக்ஷாவில் வந்தவரும் வழியை மறித்துக் கொண்டு காரை மேலே போக விடாமல் தடுத்திருப்பார்கள். போலீஸில் புகார், கச்சேரியில் வழக்கு, விசாரணை, தண்டனை!....'

விரும்பாத நினைவுகளை உதறி விட்டு நிதானமான வேகத்தில் காரை ஓட்டிக் கொண்டு வந்தாள் சித்திரா. காரில் அடிபட்டது யார் என்பதும் அதன் பின் விளைவுகள் என்னவென்பதும் அவளுக்குத் தெரியாது. அது போலவே முருகையனும் அந்தக் காரின் சொந்தக்காரர்களைப் பற்றியோ அதை ஓட்டி வந்தவர்களைப் பற்றியோ கவலைப்படவில்லை. தவறு முழுவதும் தன்னுடையது என்ற எண்ணம் அவனுக்கு.

சித்திரா பை நிறையப் பணம் கொண்டு வந்திருந்தாள். முருகையனை அழைத்துக் கொண்டு வீட்டுக்குத் திரும்பும் போது, அவனுடைய வெளித்தோற்றத்தைக் கொண்டே தன் வீட்டுக்காரர்களைப் பிரமிக்க வைக்க வேண்டும் என்ற ஆசை அவளுக்கு. 'ஆள் பாதி ஆடை பாதி' என்பது பழமொழியாக இருக்கலாம். ஆனால் பட்டணத்திலோ ஆளுக்கு அரைக்கால் தகுதிகூட வேண்டும் என்பதில்லை; ஆடையிருந்தால் மட்டுமே போதும்!

காரை நிறுத்தி விட்டு, மரத்தடிக்குச் சென்ற சித்திரா தன் கண்களை நம்ப முடியாமல் சிறிது நேரம் சிலையாக நின்றாள். கண்கள் சிவந்தன; முகமெங்கும் அனல் வீசியது. 'யார் இந்தப் பெண்? இவளுடன் அவருக்கு இங்கு என்ன வேலை? ஏன் இருவரும் அழுது கொண் டிருக்கிறார்கள்?....ஏதாகிலும் பிரிவாற்றாமை நாடகம் நடக்கிறதா?'

சரேலென்று திரும்பிப் போய்க் காரில் உட்கார்ந்து கொண்டு படாரென்று கதவைச் சாத்தினாள் சித்திரா. புறப்படுவதற்காகக் கார் உறுமத் தொடங்கியது.

---

**கிரிக்கெட் சிரிக்கிறது!**



''இது என்னடிம்மா உங்க வீட்டுக்காரர் கோட்டு மேலேயே விழுதிப் பட்டையைப் போட்டுக் கொண்டு ஓடுகிறாரே!''

''கிரிக்கெட் மாட்சுக்குப் போற அவசரம்!''

''சித்திரா! சித்திரா!''

காரின் சத்தம் கேட்டுத் திரும்பிய முருகையன், வேகமாக எழுந்து ஓடிக் காரைப் பற்றிக் கொண்டு நின்றான். ''என்ன சித்திரா, இது! இறங்கி வா, போகலாம்!''

''என்னையா என்னவென்று கேட்கிறீர்கள்?'' என்று கோபத்தோடு கேட்டாள் சித்திரா. ''நான் காரை விட்டு இறங்க மாட்டேன். உங்களுக்கு விருப்பம் இருந்தால் காரில் ஏறிக் கொள்ளுங்கள். வேறு எங்கேயாவது போய்ப் பேசிக் கொள்வோம்.''

சாந்தா திகைத்துப் போய்ப் பெஞ்சியில் உட்கார்ந்தபடியே அவர்கள் இருந்த திசையைக் கவனித்தாள். முருகையனுக்கோ ஒருகணம் என்ன செய்வதென்றே தோன்றவில்லை.

''ஐந்தே ஐந்து நிமிஷம் இறங்கி வா, சித்திரா! பிறகு நான் உன்னுடன் வருகிறேன்.''

''யார் அந்தப் பெண்?''

''என்னுடைய நண்பரின் தங்கை சாந்தா. எனக்கும் தங்கையைப் போலத்தான். அவர்கள் வீட்டில்தான் நான் வெகு நாட்கள் தங்கியிருந்தேன்.''

சித்திரா வேண்டா வெறுப்புடன் காரை விட்டு இறங்கி வந்தாள். முருகையன் அவளைச் சாந்தாவுக்கு அறிமுகம் செய்து வைத்தான். ''என் அத்தையின் பெண் சித்திரா.''

''ஓ! இப்போதுகூட இவர்கள் பெயரைச் சொன்னீர்களே!'' என்று சொல்லி விட்டு, சித்திராவுக்குக் கைகூப்பினாள் சாந்தா. ஆனால் ஏனோ சாந்தாவின் முகம் சித்திராவைக் கண்டவுடன் வெளுத்துப் போய் விட்டது. அதில் துடித்துக் கொண்டிருந்த உயிர்க்களையை இப்போது காணோம். சித்திராவின் உருவத்தை ஒருமுறை உற்று நோக்கி அதைத் தன் உள்ளத் தராசில் மெல்ல எடை போட்டாள்.

சித்திராவுக்கோ முருகையன் தன் பெயரை அந்தப் பெண்ணிடமே குறிப்பிட்டுப் பேசியிருக்கிறான் என்பதில் ஓர் ஆறுதல். தர்மசங்கடத்தில் அகப்பட்டவன் போல் சாந்தாவின் அருகில் போய் உட்கார்ந்தான். சாந்தாவின் வாயிலாகவே முருகையனின் தந்தையார் மறைந்த செய்தியையும் கேள்விப்பட்டாள். ஆனால் அவர் சென்னைக்கு வந்தவுடன் இறந்து போனார் என்பது மட்டிலும் சாந்தாவுக்குத் தெரிந்ததே தவிர, எப்படி இறந்தார் என்பது தெரியாது. அதை முருகையன் யாரிடமும் சொல்லவில்லை; சொல்லவும் போவதில்லை.

இன்ப வாழ்க்கையின் தொடக்க நாள் அது என்று எதிர்பார்த்திருந்த சித்திராவுக்கு அந்தத் துன்பச் செய்தி மிகவும் கசப்பாகவே இருந்தது. என்றாலும் அதைக் காண்பித்துக் கொள்ளாமல், முருகையனிடம் உரிமைப் போராட்டத்தில் இறங்கினாள்.

''இந்த ஊரில் இவ்வளவும் நடந்திருக்கிறது. நீங்கள் வீட்டுக்குச் சொல்லியனுப்பாமலே இருந்து விட்டீர்களே? உற்றார் உறவினர்கள், சொந்தக்காரர்கள் யாருமே உங்களுக்குத் தேவையில்லை போல் இருக்கிறது!'' என்று ஏக்கத்துடன் கேட்டாள் சித்திரா.

முருகையன் பதிலளிக்காமல் மௌனம் சாதிக்கவே, மேலும் மேலும் அவனிடம் தனக்குள்ள உரிமையை வற்புறுத்திக் கொண்டு போனாள் சித்திரா. சாந்தாவுக்கோ அவள் உண்மையிலேயே முருகையனுக்காக வருத்தப்படவில்லை என்றும் அவனைத் தேற்றவில்லை என்றும் தோன்றியது. - தனக்கு முன்னால் அவள் முருகையனுடைய உறவைச் சுட்டிக் காட்டத்தான் இப்படிப் பரிந்து பரிந்து பேசுகிறாளோ?

சாந்தா இப்போது முருகையனுக்காக மிகவும் இரக்கப்பட்டாள். பெண்களிடம் அன்பு செலுத்தத் தெரியாதவன் என்றும், பெண்களின் அன்பைப் புரிந்து

# ஈறு உபாதை மற்றும் பற்சிதைவிலிருந்து குணமடைந்ததைப்பற்றிய

# வியக்கத்தக்க செய்திகள்

தாமாகவே விரும்பி எழுதப்பட்ட அத்தாட்சிக் கடிதங்கள்

## போர்ஹான்ஸ்

பற்பசையின் பிரத்தியேகமான மதிப்பை நிரூபிக்கின்றன.

"எனக்கு இப்போது 55 வயதாகிறது.

என்னுடைய எல்லாப் பற்களும் சீராகவே இருக்கின்றன. ஆனால் 1943-ல் என்னுடைய இரண்டு பல்வரிசைகளிலும் உள்ள முன்புற, மற்றும் பக்கவாட்டிலுமுள்ள பற்கள் அசையத் தொடங்கின. அவை விழுந்துவிடுமென்றே நான் நினைத்தேன். 1943-ல் ஒரு நாள் போர்ஹான்ஸைப்பற்றிய குறிப்புகளைக் கண்டேன். நான் அதை உபயோகிக்கத் தொடங்கினேன். இப்போது போர்ஹான்ஸ் என் பற்களைக் காப்பதுடன் அவற்றை வலுவுள்ளதாகவும் செய்திருக்கிறதென்பதைக் கூற மகிழ்கிறேன்."

---

"நான் எப்பொழுதும் போர்ஹான்ஸையே குறிக்கிறேன்.

பற்கள் அல்லது ஈறுகளிலுள்ள கோளாறுகளுக்காக என்னிடம் சிகிச்சைபெறுபவர்களும் எப்பொழுதும் அதற்காக நன்றி கூறுகிறார்கள். சிகிச்சைபெறும் குழந்தைகளைக்கூட போர்ஹான்ஸ் உபயோகிக்கும்படி நான் சிபார்சு செய்கிறேன். மேலும் என்னுடைய ஆஸ்பத்திரிக்கு வருபவர்களில் பலர் அவர்களின் குழந்தைகளுக்குப் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள்."

---

"நான் மிகச் சிறந்த பலனை அடைந்திருக்கிறேன்.

போர்ஹான்ஸ் உபயோகிப்பதால், என் தகப்பனார் மூலம் நான், போர்ஹான்ஸ் ஈறுகளுக்குப் பலனளிக்கக் கூடியது என்று கேட்டிருக்கிறேன். ஆதலால், எனக்கு ஈறுகளில் உபாதை ஏற்பட்டவுடன், என் தந்தையின் புத்திமதிப்படி போர்ஹான்ஸ் உபயோகிக்கத் தொடங்கினேன். அன்றிலிருந்து இன்றுவரை போர்ஹான்ஸையே உபயோகித்து வருகிறேன்."

**போர்ஹான்ஸ்**

ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை.




GEOFFREY MANNERS & CO., LIMITED



சாஸ்திரிகள்: நீங்க இப்ப நான் சொல்ற மந்திரத்தைக் கேட்கப் போகிறீர்களா.... இல்லே 'கிரிக்கட் காமெண்டரி'யைக் கேட்கப் போகிறீர்களா?

---

கொள்ளாதவன் என்றும் அவன் நினைத்திருந்த முருகையன் ஒரு பெண்ணிடமுள்ள அன்பின் ஆதிக்கத்துக்குக் கட்டுப்பட்டிருந்தது அவனுக்கு மிகவும் மன வேதனையைக் கொடுத்தது. இதற்குப் பெயர் விதியா? அல்லது அறியாமையா?

முருகையனுக்கு ஏனோ சாந்தா நினைத்தது போல் சித்திராவைப் பற்றி நினைக்க முடியவில்லை. தன்னை ரிக்ஷாக்காரனின் கோலத்தில் கண்ட பிறகும் ஒரு லட்சாதிபதியின் மகள் தன்னிடம் பற்றுதல் வைக்க முடியுமானால் அவளுடைய அன்பில் எப்படி மாசு காண்பது? அன்றிலிருந்து இன்று வரையில் தன்னைத் தொடர்ந்து வரும் அவளுக்குத் தன்னைக் கடிந்துகொள்ளும் உரிமை இல்லையா?

"சித்திரா! விதி என்ற ஒன்றில் எனக்கு இது நாள் வரையில் நம்பிக்கை இருந்ததில்லை. இப்போது அதை நம்பத்தான் வேண்டியிருக்கிறது. என்னுடைய அப்பா இன்னும் நாலைந்து நாட்கள் கழித்து வந்திருக்கக் கூடாதா? வந்திருந்தால் நேரே நம் வீட்டுக்குத்தான் வந்திருப்பார். இப்படியெல்லாம் நடந்திருக்கவே நடந்திருக்காது."

"நடந்ததையெல்லாம் இனி மறந்துவிட வேண்டும் அத்தான்! இன்றிலிருந்து உங்களுக்குப் புது வாழ்க்கை தொடங்குகிறதென்று நினைத்துக் கொள்ளுங்கள். சரி, நாழிகையாகிறது. புறப்படலாமா?"

மௌனமாகச் சாந்தாவை ஏறிட்டுப் பார்த்தான் முருகையன்.

"சரி, போய் வாருங்கள்!" என்று உயிரற்ற குரலில் கூறினாள் சாந்தா.

"நீயும் எங்களுடன் வா. உன்னை உன் வீட்டில் கொண்டு போய் விட்டுவிட்டு, நாங்கள் போகிறோம்" என்றான் முருகையன்.

அவன் கூறியது போலவே சித்திராவும் சாந்தாவை அழைத்திருந்தாளானால் ஒருவேளை அவள் அவர்களுடன் செல்வதற்கு இசைந்திருப்பாள். ஆனால் சித்திரா சாந்தாவை அழைக்கவுமில்லை; மறுக்கவுமில்லை.

"வேண்டாம்! எனக்கு வேறு இடத்தில் வேலை இருக்கிறது. நீங்கள் போய் வாருங்கள்!" என்று விடை கொடுத்தாள் சாந்தா.

முருகையனுக்குச் சாந்தாவை அங்கு விட்டு வருவதற்கு மனமில்லை. அதற்குள் சித்திரா அவசரமாகக் காருக்குச் சென்று உட்கார்ந்துகொண்டு, முன் பக்கத்துக் கதவை அவனுக்காகத் திறந்து விட்டாள். முருகையனும், "வருகிறேன் சாந்தா, ஓய்வுள்ளபோது வீட்டுக்கு வருகிறேன்" என்று சொல்லிக்கொண்டே காருக்கு ஓடி வந்தான்.

"உம், உட்காருங்கள்! இன்னும் நமக்கு எவ்வளவோ வேலைகள் இருக்கின்றன. கடை வீதிக்குப் போய் உங்களுக்குத் துணிமணிகள் வாங்க வேண்டும். பெட்டி படுக்கை வாங்க வேண்டும். உங்களுடைய உருவத்தையே மாற்றி, முதலாளிக் கோலத்தில் உங்களைக் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும்."

"முதலாளியா?"

"ஆமாம்; வெறும் முதலாளியில்லை; முதலாளிக்கும் முதலாளி!"

அவளுடைய பேச்சின் பொருள் முருகையனுக்கு விளங்கவில்லை. சித்திரா தான் ஒரு முதலாளி ஆகி விட்டதையும், தனக்கே அவன் ஒரு முதலாளியாக வருகிறான் என்பதையும் மறைமுகமாகக் கூறி வைத்தாள். தொழிலாளியிலும் தொழிலாளியாக உழன்ற அவனுக்கு எப்படி இதெல்லாம் புரியும்?

கார் வெகு வேகமாகக் கிளம்பியது.

சாந்தா படிக்கட்டுகள் கீழே இறங்கிச் சென்று மணலில் அமர்ந்தாள். அவளுடைய வலது கரத்தின் ஆள் காட்டி விரல் கடற்கரை மணலில் முருகையனின் பெயரைத் திரும்பத் திரும்ப எழுதி அழித்தது. ஒவ்வொரு முறை எழுதும் போதும் அந்த மணலில் கண்ணீரின் ஈரம் அதிகமாகக் கலந்து கொண்டே வந்தது.

(தொடரும்)

---

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor " Sadasivam.

## உங்கள் குழந்தைகளுக்கு

# இருமல், ஜலதோஷம் இருந்தால்





# ஸிரோலின் 'ரோஷ்'

## கொடுத்து பூர்ண நிவாரணம் பெறச் செய்யுங்கள்




இருமலுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற இந்தியாவின் குடும்ப மருந்து

உங்கள் குழந்தைகளுக்கு இருமல் அல்லது ஜலதோஷமிருந்தால் அசட்டையாய் இருக்காதீர்கள்—ஸிரோலின் கொடுத்து அபாயமின்றி துரிதமாக பூர்ண நிவாரணம் பெறச் செய்யுங்கள். அதன் இனிய ருசியை உங்கள் குழந்தைகள் பெரிதும் விரும்புவார்கள். ஸிரோலின் உங்களுக்கும் மிகச் சிறந்தது! அது உங்கள் இருமலை நிறுத்துவதோடு மட்டுமல்லாமல், இருமலை உண்டுபண்ணும் கிருமிகளைக் கொல்லவும் செய்கிறது. ஸிரோலின் தொண்டைப் புண்களுக்கு சமனமூட்டுகிறது. கபம் மற்றும் சளியைப் போக்குகிறது. அது எவ்வளவு கடுமையான இருமலிருந்தும் அபாயமின்றி துரிதமாக நிவாரணமளிக்கிறது.

**உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஸிரோலின் வைத்திருங்கள்**

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்டிரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




குதூகலம் கொண்டாடுவோம்—
லைப்பாய் சோப்பினால் நீராடுவோம்...
ஆஹாஹா, கிளுகிளுக்கும்
உல்லாச நயம்... 'எல்லாம் இன்ப மயம்!'
அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக்
களைவது லைப்பாய்; குடும்ப முழுமைக்கும்
குன்றாத சுக வாழ்வு!

# லைப்பாய் இருக்குமிடம்
# அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு